க்தைக் கோவை

தொகுதி I

40 - எழுத்தாளரின் சிறுகதைகள் - 40

தொகுதி II

50 - எழுத்தாளரின் சிறுகதைகள் - 50

தொகுதி III

60 - எழுத்தாளரின் சிறுகதைகள் - 60

தொகுதி IV

75 - எழுத்தாளரின் சிறுகதைகள் - 75

தமிழ்நாட்டுச்
சிறுகதைத் தொகுதிகள்

இதுவரை 22 - தொகுதிகள் வெளி வந்துள்ளன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு தனி ஆசிரியர் எழுதியது.

யாத்திரைப் படம்




சென்னை

காஞ்சீபுரம்

செங்கற்பட்டு

திருக்கழுக்குன்றம்

திருவண்ணாமலை

திருக்கோயிலூர்

திருவெண்ணெய்நல்லூர்

கூடலூர்

விருத்தாசலம்

சிதம்பரம்

சீர்காழி

திருவிடைமருதூர்

திருச்சிராப்பள்ளி

தஞ்சாவூர்

திருவாரூர்

காரைக்குடி

அறந்தாங்கி

திருப்பெருந்துறை

மதுரை

திருவாதவூர்

மானமதுரை

இராமநாதபுரம்

உத்தரகோசமங்கை

தனுஷ்கோடி

இலங்கை

# மாணிக்கவாசகர் அடிச்சுவட்டில்

(படங்களுடன்)


எழுதியவர் :

சோ. சிவபாதசுந்தரம்

சிறப்புரை :

கி. வா. ஜகந்நாதன்

(ஆசிரியர், கலைமகள்)






அல்லயன்ஸ் கம்பெனி

மயிலாப்பூர் :: சென்னை - 4

உரிமைப் பதிவு] 1947 [விலை ரூ. 5

## சமர்ப்பணம்

இளமைப் பருவத்திலேயே எனக்குச் சிவதீக்ஷை செய்துவைத்து, நமசிவாய என்ற பஞ்சாக்ஷரத்தையும் புகட்டி, சைவத்தையும் தமிழையும் கற்க வழிகாட்டிவைத்த என் தந்தைக்கு.



1. மாணிக்கவாசகர் (அளிப்பு - கொழும்பு மியூசியம்)

# உள்ளுறை

# முன்னுரை

தென்னிந்தியாவிலே ஊர் சுற்றித் திரிவது என்னுடைய வருடாந்த வழக்கங்களில் ஒன்று. படம் பிடிக்கும் கமெராவுங் கையுமாக இஷ்டம்போல் அலைந்து அகப்பட்ட கோயில்களையும் கட்டிடங்களையும் பிடித்து என்பாட்டில் அநுபவித்துக்கொண் டிருப்பேன். இது என் சொந்தப் பொழுதுபோக்கு. இரண்டு வருடங்களுக்கு முன்னர் எனது படப் புத்தகத்தைப் பார்த்த என் நண்பர் ஒருவர், "இந்தமாதிரி அடிக்கடி யாத்திரை செய்யும் நீ உன் அநுபவங்களையெல்லாம் ஓர் உபயோகமான வழியில் பயன்படுத்தினாலென்ன?" என்று சொல்லித் தம்வசமிருந்த ஓர் ஆங்கில நூலை எனக்குக் கொடுத்துதவினார். அந்நூல் பெயர்பெற்ற யாத்திரை நூலாசிரியரான எச். வி. மோர்ட்டன் என்பவர் எழுதிய, 'எனது குருநாதன் அடிச்சுவட்டில்'* என்பது. ஏசுநாதர் அடிச்சுவட்டைத் தொடர்ந்து யாத்திரை செய்து மோர்ட்டன் எழுதினார். அதே முறையை இரவல் வாங்கி நான் இந்த நூலை எழுதினேன்.

தென்னாட்டிலுள்ள சிவ ஸ்தலங்கள் அநந்தம். இவற்றையெல்லாம் தனித்தனியாகச் சென்று தரிசித்து ஆங்காங்குள்ள கோயில்களையும் மற்றும் சிற்ப அழகுகளையும் பார்த்து ரஸிப்பதற்கு ஒருவரின் வாழ்நாள் போதாது. மாணிக்கவாசகர் சரித்திரத்தில் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ள ஸ்தலங்கள் பதின்மூன்று. ஆகையால் ஒரு சமயகுரவரின் யாத்திரையில் காணப்படும் ஸ்தலங்களையாவது ஒழுங்கான முறையில் போய்த் தரிசித்தால்

---

*In the steps of My Master—by H. V. Morton.

நல்லது என்ற கருத்துடனேயே இந்த யாத்திரை நிறைவேறியது. அவ்வநுபவத்தின் பலனே இந்நூல்.

மாணிக்கவாசகர் வாழ்ந்த காலத்தைப்பற்றியோ அல்லது அவருடைய உண்மையான சரித்திரத்தைப்பற்றியோ ஆராய்ச்சி செய்வது எனது நோக்கமல்ல. திருவாதவூரடிகள் புராணத்திலும் திருவிளையாடலிலும் கண்ட கதையை ஆதாரமாகக்கொண்டு யாத்திரைச்சுவைக்கும் கற்பனையழகுக்கும் இடந்தரக்கூடிய முறையில் மாத்திரம் இந்நூல் எழுதப்பட்டிருக்கிறது. மாணிக்கவாசகர் யாத்திரையில் புராணத்தில் கூறப்பட்டுள்ள ஸ்தலங்களையெடுத்து அவற்றின் வரலாறு, ஸ்தலப் பெருமை, சிற்ப அழகு முதலியவற்றைச் சாதாரணமாக எவரும் படித்து இன்புற வேண்டுமென்ற நோக்கத்தோடு, திருவாசகத்தின் பெருமையும், மணிவாசகரின் வாழ்க்கைத் தத்துவமும், சைவ சித்தாந்தத்தின் சிறப்பும் இந்த யாத்திரைப் பேச்சோடு பேச்சாகச் சொல்லிவைக்கலாமென்று துணிந்தேன். சரித்திர ஆராய்ச்சியாளரும், சிறந்த நூற்புலவரும் திருப்திப்படாவிடினும், வேறு வாசகர்கள் சிறிதளவாவது பயன் பெறுவார்கள் என்ற நம்பிக்கையே இதனை வெளியிடத் தூண்டியது.

இந்நூல் எழுதப்பட்டு இரண்டு வருஷ காலமாக, கடுதாசிக் கட்டுப்பாடு காரணமாய் இருப்பிலிருந்தது. நான் யாத்திரை செய்து குறிப்புக்காகச் சேகரித்துவரும் வழியில் என் நண்பர் கல்கி - ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி, என் கையிலிருந்த படங்களிலொன்றைப் பார்த்துச் சந்தோஷப்பட்டு, அதனைத் தமது பத்திரிகையின் அட்டைப்படமாகப் பிரசுரித்து, நான் ஆச்சரியப்படத்தக்க விதமாக அழகான குறிப்பெழுதியிருந்ததோடு, பிரதியுபகாரம் கருதாது இந்நூலுக்கு எதிர்பாராத விளம்பரமும் செய்துவைத்தார். இது தமிழ்நாட்டிலுள்ள பல வாசகர்களின் ஆவலைத்

தூண்டிவிட்டது. ஆனால், பிரசுரிக்க முடியவில்லை யாகையால் தாமதப்பட்டுவிட்டது. அவருக்கு நான் எவ்வளவோ கடமைப்பட்டிருக்கிறேன். மற்றப்படி, இது உருப்படியாக வெளிவருவதற்குச் சிறிதும் சலியாது உட்கார்ந்து கையெழுத்துப் பிரதியைத் தயார் செய்து தந்து, அச்சிடுங்காலத்தில் புரூவ் தாள்களையும் திருத்தித் தந்துதவிய என் மனைவி ஞானதீபத்துக்கும் நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். இதற்கு அழகாகவும் புதுமையாகவும் அட்டைப் படம் சித்திரித்துத் தந்த எனது உற்ற நண்பர் 'சானு' என்ற ஸ்ரீ சண்முகநாதனுக்கும், எனது வேண்டுகோளுக் கிணங்கி, மிகவும் அன்போடு இந்நூலுக்கு ஒரு சிறப்புரை வழங்கிய கலைமகள் ஆசிரியரும் என் நண்பருமாகிய வித்துவான் கி. வா. ஜகந்நாதன் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவிக்காமல் இம்முன்னுரையை முடிக்கலாகாது.

*ரேடியோ நிலயம்,*
*கொழும்பு - 1947*

சோ. சிவபாதசுந்தரம்.

## ஆதார நூல்கள்


சிவஸ்தல மஞ்சரி ... வ. சு. செங்கல்வராய பிள்ளை

சிவஞான போதம் ...

சிவஞானசித்தியார்

திருவிளையாடற் புராணம்

திருவாதவூரடிகள் புராணம்

மாணிக்கவாசகர் மாட்சி ... சுவாமி வேதாசலம்

மாணிக்கவாசகர் வரலாறும் காலமும் ,,

மாணிக்கவாசகர் ... சி. கே. சுப்பிரமணிய முதலியார்

மாணிக்கவாசகர் வரலாறும் நூலாராய்ச்சியும் ... கா. சுப்பிரமணிய பிள்ளை

மாணிக்கவாசகர் சரித்திரம் ... பி. ஸ்ரீ. ஆசார்யா

திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்

திருஞானசம்பந்தர் தேவாரம்

சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம்

கோயிற் புராணம்

அருணாசல புராணம்

காஞ்சிப் புராணம்

உத்தரகோசமங்கைப் புராணம்

பெரியபுராணம்

கந்தபுராணம்

தமிழ்ப் பெருமக்கள் வரலாறு ... அனவரதவிநாயகம் பிள்ளை

தென்னிந்திய சிற்ப வடிவங்கள் ... க. நவரத்தினம்

கலைமகள், செந்தமிழ்ச் செல்வி, செந்தமிழ், தமிழ்ப் பொழில், ஆனந்த விகடன், சித்தாந்தம், ஈழகேசரி முதலிய பத்திரிகைகள்.

Indian Sacred Shrines and Cities — G. A. Natesan & Co.

South Indian Sculptures —Stella Kramsrich
Dance of Siva —A. K. Cumaraswamy
Bronzes of Cylon — ,,
St. Manikkavacakar — His Life and Teachings —M. S. Poornalingam [Pillai
The Divine Wisdom of the Dravidian Saints —A. Govindachariar
Sivagnana Bodham (Trans.)—J. M. Nallasami Pillai
Essentials of Saiva Siddhanta-S. Sivapadasundaram
Studies and Translations —Philosophical & Religious —Sir P. Arunachalam
Cholas —K. A. Nilakanta
Pandyas — ,, [Sastri
Administration and Social Life under the Pallavas—Dr. C. Minakshi
Tamilian Antiquary —Vol. 4
The "Hindu" —Weekly Editions

# சிறப்புரை

"உங்கள் தமிழ்நாட்டில் என்ன விசேஷம் இருக்கிறது?" என்று வெளிநாட்டார் ஒருவர் உங்களைக் கேட்டால் என்ன சொல்வீர்கள்?

"தமிழ்நாட்டில் என்ன விசேஷம்? தமிழ் மொழி தான் எல்லாவற்றிலும் பெரிய விசேஷம்; இலக்கியச் சிறப்புடைய மொழி அல்லவா?" என்று ஒரு நண்பர் சொல்வார்.

"ஆடை, அணி, உணவு ஆகியவற்றில் தமிழனைப் போல எளிமையுடையவர்கள் இல்லை" என்று ஒரு நண்பர் சொல்லக்கூடும்.

"தமிழ்நாட்டுச் சங்கீதமும் பரத நாட்டியமும் இந்த நாட்டுக்கே உரிய சிறப்பை உடையவை" என்று கலைஞர் ஒருவர் சொல்லலாம்.

"தமிழ்நாட்டில் எல்லாவகையான பூமிகளும் உண்டு. காடு உண்டு, மலை உண்டு; கடலுண்டு, ஏரியுண்டு; ஆறுண்டு, கால்வாயுண்டு; நன்செயுண்டு, புன்செய் உண்டு; நெல்லுண்டு, கரும்புண்டு" — என்று நிலவளப் பத்தை அடுக்கிக்கொண்டு போகிறவர்களும் இருப்பார்கள்.

"என்னதான் சொல்லுங்கள்; தமிழ்நாட்டு இட்டிலி இந்த உலகத்தில் - தேவலோகம் மட்டும் வாழ்ந்ததா, அங்கேகூடத்தான் - எங்கும் இந்த இட்டிலி கிடைக்காது. தமிழ்நாட்டுக்கே தனியுரிமை இது" என்று சுவை யாராய்ச்சி உடையவர் ஒருவர் சொன்னால் அதுவும் ஒரு சிறப்புத்தான் என்று தோன்றுகிறது.

"அநேகமாக இந்தச் சிறப்புக்கள் எல்லாம் அமையும் படியாக ஒரே ஒன்றைச் சொல்லவேண்டும்" என்றால்,

"இதென்ன, புதிர்போடுவதுமாதிரி இருக்கிறது!" என்று முதலில் தோன்றும். அப்படிச் சொல்லலாம்; சொல்ல வழி உண்டு.

ஆம்; இது செப்பிடுவித்தை யன்று. "தமிழனது வாழ்க்கையையும் கலைப் பண்பையும் சாப்பாட்டு ருசியையும் காணவேண்டுமாயின் தமிழ்நாட்டுக் கோயில்களுக்குப் போய்ப் பாருங்கள்" என்று சொன்னால் போதும்; மேலே சொன்ன விசேஷங்களில் பெரும்பாலான சங்கதிகளை அடக்கிவிட்டதாகிவிடும்.

கோயில்கள்! தமிழ்நாட்டுக் கோயில்கள்! — உலகத்தில் வேறு எங்கே இப்படிக் கோபுரங்களையும், அர்த்த மண்டபம் மகாமண்டபம் முதலிய மண்டபங்களையும், பிராகாரங்களையும், குளங்களையும், அற்புதமான விக்கிரகங்களையும் காண முடியும்? கட்டடச் சிற்பமும், உருவச் சிற்பமும் கோயிலிலே விளங்குகின்றன; இலக்கியமும் இசையும் நாட்டியமும் கோயில்களைச் சார்ந்து வளர்கின்றன; பக்தியும் ஞானமும் திருக்கோயிலைச் சுற்றிப் படர்கின்றன; சரித்திரமும் புராணமும் கோயிற் சுவர்களையும் மூர்த்திகளையும் பற்றிப் பரவுகின்றன; உணவும் உடையும், அணியும் அலங்காரமும் தமிழ்நாட்டுக்கே உரிய அமைதியுடையனவாகித் தெய்வத்துக்கு முதலில் அர்ப்பணம் செய்யப்படுகின்றன. நோய் போக்கும் ஆஸ்பத்திரி கோயில்; அங்குள்ள தீர்த்தமும், பிராகாரத்துக் காற்றும் மருந்துகள். வழக்குத் தீர்க்கும் நியாய சபை ஆண்டவன் சந்நிதானம்; மனிதர் உயர்வு தாழ்வின்றி ஒன்றுமிடம் திருக்கோயில்.

இன்னும் எத்தனையோ சொல்லிக்கொண்டு போகலாம். அத்தனை வகைகளிலும் தமிழனது முத்திரை இருக்கும். ஆரூர்ப் பெருமானுக்கு நிவேதனம் ஆகும் பண்டங்களை அயோத்தியிலே காண முடியாது; பழனியாண்டவன்

பஞ்சாமிர்தத்தைப் பழம் நிரம்பிய குலு பள்ளத்தாக்கி லும் பெற முடியாது.

இந்த உண்மைகளை நன்கறிந்தவர் என் நண்பர் ஸ்ரீ சோ. சிவபாதசுந்தரம். 'தமிழ்நாட்டுக் கோயில்களைக் காணவேண்டும்; கண்டு படம்பிடிக்க வேண்டும்; பிடித் துச் சொல்லாலே காமிராவாலே வெளிப்படுத்த வேண் டும்' என்று ஆசைப்பட்டார்; ஆசைப்பட்ட அவருக்கு, "அத்தா காண ஆசைப்பட்டேன் கண்டாயம்மானே!" என்று முன்பே ஆசைப்பட்ட பெரியாராகிய மாணிக்க வாசகர் ஞாபகம் வந்தது. ஒருவர் போன அடிச்சுவட்டைப் பின்பற்றிச் செல்வது சுலபமான காரியம்; அதுவும் தெய்வத் திருவருளும் செந்தமிழ்ப் புலமையும் நிரம்பிய மணிவாசகப் பெருமானுடைய அடிச்சுவடுகளால் அமைந்த பெருவழியில் சிவமும் தமிழும் ஒருங்கு மணக்குமல்லவா? அந்த இரண்டிலும் ஈடுபாடுடைய நண்பர் சரியான பாதையையே பற்றிக்கொண்டார்.

கண்ணையும் காதையும், கருத்தையும் காமிராவையும் நன்றாகத் திறந்து தாம் கண்டதையும் கேட்டதையும் கருதியதையும் பதிவு செய்தார். அதுதான் இந்த அருமை யான புத்தகம்.

இதை ஆங்கிலேயர் சொல்லும் 'பிரயாண நூல்' என்று சொல்லலாமா? சொல்லலாம்; ஆனால், இதில் மணக்கும் உன்னதமான பக்தி உணர்ச்சி அதில் இராதே! 'சரித்திரம்' என்று சொல்லலாமா? சொல்லலாம்; ஆனால், பல பழைய செய்திகளைப் புராணக் குப்பை யென்று அது விலக்கிவிடுமே. 'புராணம்' என்று சொல்ல லாமா? அதில் புதுமை இருப்பதில்லையே! கலையாராய்ச்சி என்று சொல்லலாமா? ஆராய்ச்சியிலே அநுபவமும் ரஸனையும் தேடித்தானே கண்டுபிடிக்க வேண்டும்? இத் தனையும் சேர்ந்த ஒன்று என்று இதைச் சொல்லிவிடலாம். கோயிலைப்போலவே இருக்கிறது நூலும்.

மாணிக்கவாசகர் காலத்துக்கு நம்மை அழைத்துச் சென்று, அவர் வாழ்க்கையின் பெருவாசல்களை யெல்லாம் திறந்து காட்டுகிறார். அது தண்டவாளத்தின் ஒரு கம்பி. தொடர்ந்து இருபதாம் நூற்றாண்டை மறு கம்பியைப் போல வைத்துக் காட்டுகிறார். உத்தரகோசமங்கைக்குப் போகும்போது கிடைத்த வண்டிக்காரனும் வண்டியும், தஞ்சாவூர் பிளாட்பாரக் காட்சியும், திருவண்ணாமலை மாட்டுக்காரப் பையன்களும் போன்றவை அந்தக் கம்பி யிலே ஓடும் உயிர்பெற்ற உருவங்கள். இனிய ஹாஸ்யம், உன்னதமான கலைச் சிறப்பை விளக்கும்போது ஆழ்ந்த சிந்தனை ஒலிக்கும் வருணனை, உருக்கமான பக்திப்பேச்சு— இவற்றை இதில் ஒருங்கே காணலாம்.

நடையைப்பற்றித் தனியே சொல்ல வேண்டுமா? படிக்கிறபோது, நாம் படிக்கிறோம் என்ற ஞாபகமே இல்லாமல் பண்ணிவிடுகிறார். நம்மையே தம்முடன் வரும் பிரயாணியாக்கிவிடுகிறார் ஆசிரியர்.

"மாணிக்கவாசகர் இன்னும் பல தலங்களுக்குப் போய், இன்னும் பல காரியங்களைச் செய்திருக்கக் கூடாதா!" என்ற ஏக்கம் உண்டாகிறது, புத்தகத்தைப் படித்து முடிக்கும்போது. காரணம் என்ன தெரியுமா? "அப்படி இருந்திருந்தால் இந்த ஆசிரியர் இன்னும் பல தலங்களுக்குப் போய் இன்னும் பல அநுபவங்களைப் பெற்றுக் காமிராவுக்கும் வேலை கொடுத்திருப்பாரே! இன்னும் பல இனிய அழகிய பகுதிகளை எழுதியிருப் பாரே!" என்ற எண்ணந்தான்.

புத்தகத்தின் அமைப்பு அச்சு எல்லாம் அல்லயன்ஸ் கம்பெனியாரின் சிரத்தைக்கும் உயர்வுக்கும் ஏற்றபடி அமைந்திருக்கின்றன. தமிழர் இந்தப் புத்தகத்தை வாங்கி வாசித்துப் பாராட்டி இன்புறத்தான் போகிறார்கள்.

கி. வா. ஜகந்நாதன்.



4. மாணிக்கவாசகர் கோயில், திருவாதவூர். (பக்கம் (14)

# மாணிக்கவாசகர் அடிச்சுவட்டில்

---

## முதல் அத்தியாயம்

*நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க*
*இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க.*

ஆவணி மாதத்தில் ஒரு நாள்.

நல்ல மத்தியான்ன வேளை; உச்சிவெயில் கொளுத்திக்கொண் டிருக்கிறது. மதுரையில் வையையாற்றங் கரையிலே சுடுமணலில் நிறுத்தப்பட்டிருக்கிறார் பாண்டியன் முதல்மந்திரி தென்னவன் பிரமராயர். அவருடைய அருளொழுகும் மேனி தகதகவென்று வெயிலிலே காந்திக்கொண் டிருக்கிறது. சூரியனோ சற்றேனும் ஈவிரக்கம் இல்லாமல் எறித்துக்கொண் டிருக்கிறான். பிரம்பு தாங்கிய கையோடு அரசனுடைய சேவகர்கள் சூழ்ந்து நிற்கிறார்கள்.

இது என்ன கூட்டம்? மதுரைமாநகரே திரண்டு வந்துவிட்டதா ? எள் போட்டால் எள் விழாதபடி

ஜனங்கள் வந்து குவிந்துவிட்டார்கள். மத்தியிலே நின்றுகொண்டிருக்கும் மந்திரிமீதுதான் எல்லோர் கண்களும் பதிந்திருக்கின்றன. ஒருவர் முகத்திலும் ஈயாடவில்லை. ஒரே ஆவலும் துயரமும். "இவரா? இந்தப் புண்ணிய புருடரா திருடர்? என்ன விந்தை! ஏழைகள் பொருட்டாகத் தமது உயிரையும் தியாகம் செய்வாரே இந்தப் பெரியவர்! எந்தப் பாவிகளோ வேண்டுமென்று சூழ்ச்சி செய்துவிட்டார்கள். அரசன் இவரிடம் பிரத்தியேக அபிமானம் வைத்திருப்பது மற்றும் சிலருக்குப் பொறாமையா யிருந்தமையால் இப்படிக் கதைகட்டிப் பகைக்கச் செய்துவிட்டார்களாக்கும்!"

இவ்வாறாக அங்கே கூடி நின்ற மக்களின் வாக்கிலும் மனத்திலும் பேச்சுக்களும் எண்ணங்களும் தோன்றின. எங்கேயோ ஒரு துறைமுகப் பட்டினத்திற்குப்போய் நல்ல குதிரைகளாகப் பார்த்து விலை பேசி வாங்கிவருமாறு அரசன் இந்த மந்திரியிடம் பணம் கொடுத்தனுப்பினானும். ஆனால் மந்திரி அந்தப் பணத்தை அபகரித்துவிட்டாராம்! அதற்காகத்தான் இந்தக் கொடு வெயிலில் நிறுத்தி வதைக்கிறார்கள் சேவகர்கள்.

இந்தக் காட்சியின் நடுவே பாண்டியன் அரிமர்த்தனன் தோற்றமளிக்கின்றான். சேவகர்கள் பராக்குக் கொடுத்து வழிவிட்டு நிற்கிறார்கள். என்ன தீர்ப்பு ஏற்படுமோவென்று அங்கே கூடி நின்றோர் உள்ளங்களெல்லாம் படபடவென்று அடித்துக் கொண்டன. ஆனால் மந்திரி திருவாதவூரர் - தென்னவன் பிரமராயர் - தம் உள்ளத்தை வழக்கம்போல் இறைவனிடத்தே அர்ப்பணம் செய்துவிட்டுத் தூய

பளிங்குபோன்ற கலக்கமற்ற முகத்தோடு அரசனை வரவேற்கின்றார்.

மன்னவன் சீற்றம் கொதிக்கிறது. "வாக்குத் தவறிய மனிதா! துரோகி! உன் பேச்சைக் கேட்டு நான் ஏமாந்தேனே. என் திரவியத்தையும் இழந்து அவமானமும் அடைந்தேன். திருப்பெருந்துறையிலே குதிரை வாங்கும்பொருட்டு என் பொருளைக் கொண்டு சென்றாயே; அதை என்ன செய்தாய்? எந்த விலைமாதுக்குக் கொடுத்தாய்? உன் அப்பன் வீட்டுப் பணம் என்று நினைத்தா அதைத் தொலைத்து விட்டுக் கபட சந்நியாசி வேடம் போட ஆரம்பித் தாய்?"

மந்திரி பிரமராயர் ஸ்தம்பித்து நிற்கிறார். அரசன் வார்த்தைகள், ஒருபோதும் இல்லாத மாதிரியாக வெளிவந்த வசைமொழிகள், உள்ளத்தை உறுத்தின. ஆனால், அவர் கலங்கினாரல்லர். அறியாமையால், ஆராய்வில்லாமல், அரசன் கோபித்தான் என்று நன்கு அறிந்திருந்தார். எனினும், அரசன் திரவியத் தைக் குதிரை வாங்கும்பொருட்டுச் செலவிடாமல் குரு நாதன் சேவையில் செலவிட்டது நியாயமா? அரச னுக்கு என்ன விடை கூறுவது?—இந்தக் கேள்விகள் அவர் உள்ளத்தில் கிளம்பிச் சிறிது கலவரத்தை உண்டாக்கின. உடனே அந்தப் பக்தர் தம் குரு நாதர் தாமே இதற்கெல்லாம் விடையளிக்க வேண்டு மென மனத்தால் வேண்டி நிற்கிறார். ஒரு ஞான ஒலி தோன்றிச் சந்தேகமும் நிவிர்த்தியாகிறது.

"அரசரேறே, வீணே கோபிக்க வேண்டாம். தங்களுக்கு நான் வாக்குக்கொடுத்த நாள் இன்னும் முடியவில்லை! அதற்குள் பதற்றமடைந்து என்ன

பிரயோசனம்? நல்ல உயர்ந்த ஜாதிக்குதிரைகள் நாளைநின்று, ஆவணி மூலதினத்திலே இந்த இடத்திலேயே வந்து சேரும். தங்கள் திரவியம் கெட்டுப் போயிற்றென்றோ, நான் அபகரித்து விட்டேனென்றோ சந்தேகம் கொள்ள வேண்டாம். குறித்த தவணை வருமளவும் காத்திருக்கும்படி வேண்டிக் கொள்ளுகிறேன்" என்று சாந்தமாக விடையளித்து விட்டுப் புன்னகையுடன் நிற்கிறார், மந்திரி பிரமராயர்.

அரசன் சிறிதுநேரம் திகைத்தான். இது கண் கட்டு வித்தையா அல்லது செப்பிடு வித்தையா? மனம் சஞ்சலப்படுகிறதே! ஆவணி மூலத்தன்று குதிரைகள் வருவதாக மந்திரி வாக்களித்தது உண்மைதானா?—யோசிக்கிறான் அரசன்: "ஆம், உண்மைதான். ஆவணி மூலந்தான். அதுதான் தவணை. அதற்கு, இன்னும் ஒருநாள் இருக்கிறதே! சிறிதும் ஆராயாது அவசரப்பட்டு, நான் என் அரச தர்மத்தையும் மீறிக் கோபித்துக்கொண்டேனே. என்ன கேவலம்! என் நீதி எங்கே, மரியாதை எங்கே, மதிப்பு எங்கே? இதற்கு நான் என்ன பிராயச்சித்தம் செய்வேன்!"

இந்த நிலைமையில் பாண்டியன் அரிமர்த்தனன், தன் பிழையை உணர்ந்து மந்திரி பிரமராயரை அழைத்து, "மந்திரி, நான் ஆராயாது செய்த பிழையை மன்னித்தருள வேண்டுகிறேன். உமது வாக்கை மறந்து இந்த அபசாரத்துக்கு ஆளானேன். வருக மாளிகைக்கு. அங்கே சிறிது சிரமபரிகாரம் செய்து கொண்டு போகலாம்" என்று வேண்டிநிற்கிறான்.

சோமசுந்தரர் கோயிலிலே உச்சிக்கால மணி டாண் என்றடிக்கிறது. வையைக்கரையில் கூடிநின்ற

மதுரை மாந்தர் அனைவரும் ஜே என்று ஆர்ப்பரிக்கின்றனர்.

## 2

மாணிக்கவாசகர் சரித்திரத்தில் இது ஒரு காட்சி.

காலத்துக்குக் காலம், உலகத்திலே சிறந்த மகா புருஷர்கள் பிறந்திருக்கிறார்கள். மக்கள் சுபிட்சத்துக்காகவும், உலக உய்வுக்காகவும் அவர்கள் தம்மையே தியாகம் செய்திருக்கிறார்கள். கிருஷ்ணன், புத்தன், கிறிஸ்து, முகம்மது நபி முதலிய மகான்கள், தமது வாழ்க்கைமூலம், உலகம் உய்யக் காரணராய் அவதரித்தார்கள். அவர்கள் வாழ்க்கையும் தியாகச் செயல்களும் என்றென்றைக்கும் உலக மக்கள் சிந்தையிலே படம் பிடிக்கப்பட்டு நிலவும். சகல உயிர்களிடத்திலும் பேரன்பும், கடவுளிடத்திலே பக்தியுந்தான் இம்மகா புருஷர்களின் லட்சியங்களா யிருந்தன. அத்தகைய மகான்களில் ஒருவரேதான் மாணிக்கவாசக சுவாமிகள்.

தம் உடல் பொருள் ஆவி மூன்றையும் இறைவனுக்கே அர்ப்பணம் செய்து, கடவுட் பித்துப் பூண்டு, கடவுளடிமையாகவே வாழ்ந்த திருவாதவூரடிகளென்ற மாணிக்கவாசகரது வாழ்க்கை வெகு விசித்திரமானது. மதுரையிலிருந்து அரசாண்ட அரிமர்த்தன பாண்டியனிடம் மந்திரித் தொழில் பூண்டிருந்த காலத்தில், திருப்பெருந்துறையிலே குரு வடிவத்தில் இறைவனைத் தரிசனம் செய்ததிலிருந்து உலகப் பற்றைத் துறந்து, யாவற்றையும் தியாகம் செய்து, ஊராரெல்லாரும் பித்தனென்று நகைத்திடவும் தம்மை அந்த ஞானாசிரியனுக்கே அர்ப்பணம் செய்து, பல பல க்ஷேத்திரங்

களுக்குச் சென்று அந்தக் குருநாதனின் வடிவங் காண அலைந்து திரிந்தார். ஈற்றில், சிதம்பரத்திலே, கனக சபையில் உலகெலாம் உணர்ந்தோதற்கரிய நடன மூர்த்தியாய் நின்று கூத்துகந்த அந்த நாதனைக் கண்டு சேவித்து அவனடி நீழல் அடைந்தார்.

மாணிக்கவாசகர் பக்திக்கு வழிகாட்டி ; தியாகத்தின் செல்வர் ; மெய்யன்பர். 'யாமார்க்கும் குடியல்லோம் யாது மஞ்சோம்' என்று கூறி, சர்வலோக நாயகன் ஒருவனாகிய இறைவனுக்கே ஆட்பட்ட உத்தமர். "பெரியாரை நேசியுங்கள்; அவர்களைக் கனம்பண்ணி, அவர்கள்முன் பணிந்து வணங்குங்கள். தனக்கு மேலுள்ள ஒன்றை வணங்குவதால் உண்மையுள்ள ஒவ்வொரு மனிதனும் தானே உயர்ச்சி பெறுவதை உணருகின்றான்" என்று மேல்நாட்டுப் புலவரான கார்லைல் கூறியுள்ளார். மாணிக்கவாசகர் வாழ்க்கையும், அந்த அடியார் இறைவன் திருவுருவம் காணச் சென்று அலைந்த யாத்திரையும் நமக்கு ஒரு திவ்வியமான உணர்ச்சியைத் தருகின்றன. யார்க்கும் தெரியாது, அகப்படாது, ஒளித்துத் திரியும் கள்வனை மாணிக்கவாசகர் திருத்தலங்களி லெல்லாம் தேடி அலைந்து ஈற்றில் சிதம்பரத்திலே கண்டுபிடித்து,

> பண்டே பயில்தொறும் இன்றே பயில்தொறும்
> ஒளிக்கும் சோரனைக் கண்டனம்
> ஆர்மின் ஆர்மின்
> நாண்மலர்ப் பிணையலில் தாள்தளை யிடுமின்

என்று கூவுகின்றார். இந்த வழி யெங்கும் நாமும் சென்று பார்த்தால் அந்த மகானுக்குக் கிடைத்த இறைவன் திருக்கோலக் காட்சி நமக்குக் கிடைக்கப்

பெருவிட்டாலும் நம் உள்ளமாவது உயர்ச்சி பெறும் அல்லவா? ஆகையால், மாணிக்கவாசகர் அடிச்சுவட்டில் நாமும் சென்று தென்னாட்டிலுள்ள சில சிவ ஸ்தலங்களைத் தரிசித்துப் பார்ப்போம், வாருங்கள்.

---

## இரண்டாம் அத்தியாயம்

**தேடுவன் தேடிச் சிவன்கழலே சிந்திப்பேன்.**

சரியாகக் காலை ஒன்பதுமணிக்குத் தனுஷ்கோடிப் பாலத்தை அடைந்தது தலைமன்னாரிலிருந்து புறப்பட்ட கப்பல். ஒரே ஆரவாரம். மூட்டை முடிச்சுக்களுடன் இலங்கையிலிருந்து வந்து இறங்கிய பிரயாணிகளின் பரபரப்பும், கூலியாட்களின் நடமாட்டமும், ரயில்வேத் தொழிலாளர்களின் விறுவிறுப்பும், எல்லாம் விநோதமான காட்சிகளைத் தந்தன.

எதிரே நிறுத்தப்பட்டிருக்கும் இந்தோ-சிலோன் எக்ஸ்பிரெஸ் ரெயில் வண்டியில் ஏறவேண்டியது தான், மிகுந்த களைப்புடன் இருக்கும் நமக்கு உபசாரம் செய்ய அநேகம் பேர் காத்திருப்பார்கள். சிரம பரிகாரம் செய்துகொள்ள சோடாக் கலர், வெற்றிலை பாக்கு, வாழைப்பழம் மாம்பழம் ஆரஞ்சுப்பழம், பீடி சிகரெட் - இந்தப் பண்டங்கள் விற்கும் ஆசாமிகள் வந்து நம்மை முற்றுகை யிட்டுவிடுவார்கள்! போதாததற்குப் பாட்டுப் பாடிச் சிரமந் தீர்க்க வந்துவிடுவார்கள் பிச்சைக்காரப் பெண்களும் சிறுவர்களும்!

இதுதான் ரெயில்வண்டி உலகம். அவசர அலுவலாகப் போகிற வியாபாரிகளுக்கும் வக்கீல்களுக்கும்

மற்றப் பேர்களுக்கும் இந்த உலகம் கசப்பாகவும் இடைஞ்சலாகவுந்தான் இருக்கும். ஊர் சுற்றவே புறப்பட்டுச் செல்லும் என்னைப்போன்ற நாடோடி களுக்கும் யாத்திரை வேட்டைக்காரருக்கும் இதை விடச் சிறந்த உலகம் வேறென்ன இருக்கிறது? மற்ற வர்கள் அநுபவிக்கும் இன்பத்தையும் துன்பத்தையும் பார்த்து உலகத்துக்குப் பகிரங்கப்படுத்திவிட்டுத் தாம் தலைமறைவா யிருப்பதுதானே எழுத்தாளரின் பெரிய இன்பம்?

ஐயர் கொண்டுவந்த ஆறணு எடுப்பு ஒன்றை வாங்கிச் சாப்பிட்டுவிட்டு, நிம்மதியாக வண்டியின் ஒரு மூலையில் தலையணையைப் போட்டுச் சாய்ந்து கொண்டு, கையில் உள்ள புத்தகத்திலோ பத்திரிகை யிலோ பாதிக்கண்ணும் பிரயாணிகளின்மீது பாதிக் கண்ணுமாக நமது நாட்டத்தைச் செலுத்துவோம்.

ஓர் உதறலுடன் கூ என்ற குரல் வைத்துவிட்டு வண்டி பறக்கத் தொடங்குகிறது.

## 2

எப்போது மதுரைமாநகரைப் போய் அடையலா மென்ற உணர்ச்சிதான் நமது இருதயத்தில் உறுத்திக் கொண்டிருக்கிறது. மதுரை, சிவபெருமான் அடி யவர்களுக்காக வேண்டி அறுபத்துநான்கு திருவிளை யாடல்களைப் புரிந்த அந்த மதுரை, பொய்யடிமை யில்லாத புலவர்களிருந்து தமிழாராய்ந்த அந்த மதுரை, பாண்டிய மன்னரின் ராஜதானியா யிருந்த அந்த மதுரை, திருவாலவாய் என்றும் வெள்ளியம் பலம் என்றும் பெயர்பெற்று மாணிக்கவாசக சுவாமி



3. புருஷாமிருகம் - திருவாதவூர் (பக்கம் 12)

களின் அமைச்சினுல் சிறப்பெய்தியிருந்த அந்த நான்மாடக் கூடல் நகரை எப்போது போய்ச் சேரு வோமோ என்ற ஆவல்தான் துடித்துக் கொண்டிருக் கிறது.

டக்கு டக்கென்று வண்டிச் சக்கரங்கள் தாளம் போடுகின்றன. வண்டிக்குள்ளே ஒரு குழந்தை வீரிட்டு அலறுகிறது. இரண்டு வியாபாரிகள் உச்ச ஸ்தாயியிலே மார்க்கட் நிலவரத்தைப் பற்றியும் யுத்தப் போக்கைப் பற்றியும் வெளுத்து வாங்கிக் கொண்டிருக்கிருர்கள். வெளியே பரந்தெறிக்கும் சூரிய கிரணங்கள் வறண்ட பாலைநிலத்தில் மோதிப் பிரதி பிம்பித்துக்கொண்டு வண்டியின் சாளரங்கள் வழியே நுழைந்து கன்னத்தைப் பொசுக்குகின்றன. இவற் றில் ஒன்றுக்கும் நமது மனம் அசையவில்லை. எண்ண மெல்லாம் மதுரைப் பட்டணத்திலேயே இருக்கிறது. "ஸார், டிக்கட் ப்ளீஸ்" என்று கேட்டுக்கொண்டு நமது பக்கத்தில் ஒரு டிக்கட் இன்ஸ்பெக்டர் வந்து நிற்கும்போதுதான் நாம் திடுக்கிட்டு விழித்துப் பார்க் கிருேம். அந்த இன்ஸ்பெக்டரும் அவசர அவசர மாகவே வாங்கிச் சீட்டின் பின்புறத்தில் ஏதோ ஒரு பென்ஸிலால் கிறுக்கிவிட்டுத் திருப்பித் தந்தபின் நகருகிருர்.

கல கலவென்று நடமாட்டமா யிருக்கும் ஒரு பெரிய ஸ்டேஷனில் வந்து நிற்கிறது ரெயில் வண்டி. சாளரத்தின் வழியே எட்டிப் பார்க்கிருேம். மதுரை ஜங்ஷன்!

மணியும் நாலரை யாகிவிட்டது.

தென்னிந்தியாவிலே ஸ்தல யாத்திரை செய்வதற் கென்று புறப்பட்டுப் போனுல் எங்கே தங்குவது

என்ற பிரச்னையே தேவையில்லை. தென்னிந்திய ரெயில்வேக் கம்பெனியார் வெளியிடும் நேர அட்டவணையில் 'எங்கே தங்குவது' என்ற கேள்விக்கு விடையாகப் பல ஹோட்டல்களையும் சத்திரங்களையும் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஸ்தல யாத்திரை செய்ய வரும் பிரயாணிகளின் வசதிக்காகவே முன்காலத்தில் இருந்த புண்ணியவான்கள் அங்கங்கு நல்ல தர்ம சத்திரங்களையும் மடங்களையும் கட்டி வைத்தார்கள். நாட்டுக்கோட்டை நகரத்தார் என்ற செட்டியார் வள்ளல்கள் அநேக தர்ம சத்திரங்களைக் கட்டி வைத்துள்ளார்கள். ஜில்லா போர்டாரது கண்காணிப்பிலிருந்துவரும் சத்திரங்களில் ஒரு சிறு வாடகையில் - ஆறு அல்லது எட்டு அணவில்-ஓர் அறை ஏற்பாடு செய்துகொள்ளலாம். ஆனல், ஒரு பூட்டும் திறப்பும் நம் சொந்தத்திலேயே வாங்கிக் கைவசம் வைத்துக்கொள்வது நல்லது. போகும் இடங்களில் எல்லாம் அது உபயோகப்படும்.

மதுரை ஜங்ஷனுக்கெதிரே அரைப் பர்லாங்கு தூரத்திலிருக்கிறது மங்கம்மாள் சத்திரம். ஓரணுக் கூலிக்கு, ஒரு சிறு பையன் எனது பெட்டியையும் படுக்கையையும் தூக்கி வந்து சேர்த்துவிட்டான். சத்திரத்தில் போய் மேல்மாடியில் எட்டணு வாடகையில் ஓர் அறை ஏற்படுத்திக்கொண்டேன். வெளியே சாளரத்தின்வழியாக ரெயிலின் அலறல் சப்தம், தெரு வீதியிலே ஜட்கா வாலாக்களின் ' ஓய் ' சப்தம், குதிரைகளின் மணிச் சப்தம், பண்டங்கள் விற்போரின் பலவிதக் குரல்கள், ஹோட்டல் ரேடியோக்களின் கதம்ப சங்கீதச் சப்தம் - எல்லாம் ஒன்று சேர்ந்து முழங்கிக்கொண்டிருந்தன.

ஸ்நானம் செய்து காபி சாப்பிட்டபின் ஒரு தரம் ஊர் சுற்றிப் பார்ப்போம். சிரமமாயிருந்தால் சிறிது படுத்து இளைப்பாறுவோம். இப்போது நமக்கு மதுரையில் வேலை ஒன்றும் இல்லை. மாணிக்கவாசகர் பிறந்து வளர்ந்த ஊராகிய திருவாதவூர் மதுரைக்குக் கிழக்கே பன்னிரண்டு மைல் தூரத்தில் இருக்கிறது. முதலில் நாம் அங்கே போவோம். மதுரைக்கு அவர் அரிமர்த்தன பாண்டியனிடம் மந்திரி உத்தியோகம் பார்ப்பதற்குப் புறப்படுகிறார் என்று அறிந்ததும், அவர் பின்னால் மீண்டும் மதுரைக்கு வந்து இங்குள்ள காட்சிகளை யெல்லாம் பார்த்துக்கொள்ளலாம்.

---

## மூன்றும் அத்தியாயம்

*வாத வூரினில் வந்தினி தருளிப்*
*பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்.*

ஒரு தடதடத்த மோட்டார் பஸ் ஒரு மணி நேரத்திற் கொண்டுபோய்ச் சேர்த்தது திருவாதவூரில். போகும் வழியிலே தலையிலும் முகத்திலும் அப்பிக் கொண்ட தூசிப் படலம் என்னை ஒரு சிவனடியா னாக்கி விட்டது! சாலை நெடுக ஒவ்வோரிடத்திலும் பழங் குழிகளில் மோட்டார் பஸ் விழுந்து விழுந்து ஏறிச் சென்றபோதெல்லாம் இடுப்பு ஒடிந்த வலியை யும் மறக்கமுடியாது.

ஆனால் திருவாதவூருக்குப் போய்ச் சேர்ந்ததும் நாம் வேறு உலகத்தில் இருப்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டுவிடுகிறது. சிறிய ஊர்தான். நாற்புறங்களி லுள்ள நெல்வயல்களும், பரந்த ஏரி ஒன்றும், மருதும்

இருப்பையும் வானுற ஓங்கி வளர்ந்த பசுஞ் சோலையி னூடே கம்பீரமாகத் தலை நிமிர்ந்து நிற்கும் திரு மறை நாதர் கோயிற் கோபுரமும் நம்மை அப்படியே தம் வசப்படுத்திக் கொள்கின்றன. சாந்தமே குடி கொண்டுள்ள கிராமச் சூழலும், கலைப்பண்பு கொழிக் கும் கோபுர எழிலும், ஈசுவரத்தன்மை உலவும் சோலை யும், கலகலத்த நெருக்கடி நிறைந்த நகரத்திலிருந்து சென்ற நமக்கு ஓர் அற்புத உணர்ச்சியைத் தந்து புனிதமாக்கி விடுகின்றன.

அந்தப் பெரிய ஏரி ஒன்றுதான் திருவாதவூரைச் செழிக்கச் செய்கிறது. மலையாள நாட்டில் இருக்கும் பேரியாற்றி லிருந்து கால்வாய்கள் மூலம் இந்த ஏரிக்கு நீர் வந்து விழுகின்றது. சில காலங்களில் நீர் வற்றி வறண்டு போய்விட்டால் விளைவும் நின்று போகும். கிராம வாசிகள் பஞ்சப்பட வேண்டியதுதான். விவ சாயமே அவர்கள் ஜீவனம். அந்த ஏரியின் மதகு ஒன்றின்மீது புருஷாமிருகம் என்ற அற்புதமான சிலை ஒன்று மனித முகமும் சிங்கத்தின் உடலுமாக அமைக் கப்பட்டிருக்கின்றது. இதன் சிற்ப அழகே ஒரு தனிப் பொலிவு. இது போன்ற லக்ஷணங்கள் அமைந்த புருஷாமிருக சிற்பம் வேறெங்கும் காணப்படவில்லை என்று சிற்ப நூலறிஞர் சொல்லுகின்றனர். இந்தப் புருஷாமிருகம் ஏரி நீரைத் தூய்மையாக்கும் தெய்வ மென்றும், ஊரைக் காப்பதென்றும் சொல்கின்ற னர். வருஷந்தோறும் மகா சிவராத்திரியில் இதற்கு ஒரு திருவிழா நடைபெற்றுவருகிறது.

இதற்குப் பக்கத்திலுள்ள பிடாரி கோயில் ஒன்று திருவாதவூரிலுள்ள கிராமத்தவர்களுக்கு அச்சங் கலந்த பக்திக்கு இருப்பிடமாக அமைந்திருக்கிறது. இக்



4. மாணிக்கவாசகர் கோயில், திருவாதவூர். (பக்கம் (14)

கோயிலின் நித்தியக் கடமைகளில் ஒன்று எவ்விதத்தி லாவது தவறிவிட்டால் உடனே ஏரி வறண்டு மழை யற்று வேளாண்மை குன்றிவிடுமாம். அதற்குப் பிராயச்சித்தமாக எத்தனையோ 'குளிர்த்திகள்' போட் டால்தான் ஏரியில் நீர் நிரம்பும் என்று திருவாதவூர் வாசிகள் நம்புகின்றார்கள்.

## 2

திருவாதவூர் ஒரு காலத்தில் திருவாதூர் என்ற பெயர் பெற்றிருந்ததாம். இப்பொழுதும் கிராமவாசி கள் திருவாதூர் என்றுதான் சொல்லுவார்கள். அக் காலத்திலே இங்கே பல சமயவாதிகளிருந்து தர்க்கம் செய்தனராகக் கருதுகின்றனர். வாதுகள் பல நிகழ்ந்த இடமாகையால் இதற்குத் திருவாதூர் என்ற பெயர் வந்ததாகக் கதை. பாரி என்ற பழந்தமிழ்ச் சிற்றரசன் ஆண்ட பறம்பு நாடும் இதுதான் என்று சிலர் சொல்லுகின்றனர். இப்பொழுதும் திருவாத வூரில் பாரி வேளாளர் என்ற ஒரு வேளாண் வகுப்பி னர் வசித்துவருகிறார்கள். கபிலர் என்ற சங்கப் புலவ ரும் திருவாதவூரில்தான் பிறந்தவர் என்றும் சொல்வர்.

திருவாதவூர்க் கோயில் மிகப் பழையது. திரா விடச் சிற்ப முறையிலேயே கட்டப்பட் டிருந்தது. ஆனால், பிற்காலத்திலே திருத்தி அமைத்தவர்கள் பழைய சிற்ப அழகுகளையெல்லாம் கெடுத்துவிட்டார் கள். முன்னொருபோது நூறுகால் உடையதாயிருந்த மண்டபம் ஒன்று கிழக்குக் கோபுரத்துக்குப் பக்கத் திலே இருக்கிறது. இப்போது அது பழுதடைந்து ஒரு சில தூண்கள் மாத்திரந்தான் எஞ்சி நிற்கின்றன.

திருக்கல்யாண மண்டபம் என அது இப்போது வழங்கப்படுகிறது. இம்மண்டபத்தின் கூரை கல்லிற் செதுக்கப்பட்ட கொடுங்கை அல்லது எழுதகம் என்ற சிற்ப அமைதியுடையது. விட்டங்களும் சலாகைகளும் மேற்கூரையும் சேர்ந்து தனிக்கல்லிற் செதுக்கப்பட்ட இவ்வழகான எழுதகத்தை விசேஷித்த பொலிவுடன் மற்றொரு மாணிக்கவாசக ஸ்தலமாகிய திருப்பெருந்துறையில் (ஆவுடையார்கோயில்) காணலாம். இது ஒரு விசேஷ சிற்ப வேலைப்பாடாகும்.

இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சுவாமிபெயர் திருமறைநாதர் அல்லது வாதபுரீசர். அம்பாள் பெயர் வேதநாயகி அல்லது ஆரணவல்லி. வேதங்கள் பிறந்ததாகச் சொல்லப்படும் ஸ்தலங்களில் இத் திருவாதவூரும் ஒன்றென்பது புராணக்கதை. இங்கே மாணிக்கவாசகருக்கு ஒரு தனிச் சந்நிதி இருக்கின்றது. நல்லதான ஒரு வெண்கல உருவமும் உண்டு. இங்குள்ள நடராஜ விக்கிரகம் கல்லிற் செதுக்கப்பட்டுள்ளது. அவ்வளவு பழைய சிற்பமாகக் காணப்படவில்லை. தூக்கிய பாதம், படம் விரித்த நாகத்தின்மேல் வைத்த பாவனையில் இருக்கிறது. இதே போன்றதொன்று மலையாள நாட்டிலுள்ள வர்க்கலை என்ற ஸ்தலத்திலும் இருக்கக் காணலாம்.

அதோ தென்கிழக்கில் ஒரு கூப்பிடு தொலையில் கட்டிடமொன்று காணப்படுகிறதே, அதுதான் மாணிக்கவாசகர் கோயில். அது கட்டப்பெற்றுச் சில வருடங்களே ஆகின்றன. மாணிக்கவாசகர் பிறந்த வீடு, தோட்டம், கிணறு இவை இருந்த இடமெல்லாம் இதே கோயிலிருக்கும் ஸ்தானந்தான் என்று சொல்லுகின்றனர். இந்த இடம் முன்பு

கற்ருழையும் கள்ளியும் படர்ந்த புதரா யிருந்ததாம். ஒரு கிணறு மாத்திரம் சிறிது வெளியாகத் தோற்றிய தால் அதைச் சுத்தப்படுத்திப் புதர்களையும் வெட்டி, அக் கிணற்றிலிருந்தே ரஸ்தாவும் வகுத்து இப்போ திருக்கும் கோயில் கட்டப்பெற்றதாக ஒருவர் சொன்ஞர்.

3

கிராமத்துப் பெண்கள் சிலர் வந்து அந்தக் கிணற் றிலே தண்ணீர் மொண்டார்கள். நல்ல வெயில் நேரமாகையால், எனக்கும் வறட்சியா யிருந்தது. சிறிது தண்ணீர் வாங்கிப் பருகினேன். அது அமிர் தம்போல் இருந்தது! இந்த அற்புதமான தண்ணீர் வசதியும், ஏராளமான நெல் வயல்களுந்தான் மாணிக்கவாசகர் குடும்பச் சொத்தா யிருந்தனவா ? அப்படியாஞல் அவர் மிகுந்த செல்வச் செழிப்பில் வளர்ந்து பதிஞறு வயதுக்குள்ளே சகல கலைகளையும் கற்கக் கூடிய வசதி பெற்றதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது ?

இப்படியாக என் சிந்தனை அவ்வேளையில் கேட் டுக்கொண்டு மாணிக்கவாசகரின் இளம்பிராயத்தை நோக்கியது.

அப்போது அவருக்கு மாணிக்கவாசகர் என்பது அல்ல பெயர். திருவாதவூரர் என்றுதான் பெற்ருேர் கள் அழைத்தனர். உள்ளூர்ச் சுவாமியின் பெயரைத் தம் ஒரேயொரு மகனுக்கு வைத்ததில் பெற்ருேருக்கு ஒரு தனி இன்பம். தந்தையார் சம்புபாதகிருதர் நல்ல நிலபுலமுள்ள ஆமாத்தியப் பிராமணர். ஊருக் குள்ளேயே ஒரு பெரிய பண்ணையார். வாதவூரரை

ஒரு சிறந்த கல்விமான் ஆக்கவேண்டுமென்பதுதான் தந்தையார் விருப்பம். பையனும் அப்பாவுக்கேற்ற பிள்ளைதான். மிகுந்த வைதிகம். அக்கம்பக்கத்து வீடுகளுக்கு விளையாடப் போவதில்லை. திருநீற்றுப் பூச்சும் கையில் ஏடுந்தான். இல்லாவிட்டால் இவ்வளவு சாமர்த்தியமாகப் பதினாறு வயதுக்குள்ளேயே சகல சாஸ்திரங்களையுங் கற்றுத் தருக்கத்திலும் மகா பண்டிதனாக விளங்கமுடியுமா ?

இந்த இளந் தமிழ்ப் பண்டிதனைப்பற்றித் திருவாதவூரிலும் பக்கத்துக் கிராமங்களிலும் பரந்த கீர்த்தி மதுரையையும் அடைந்து, பாண்டிய மன்னன் அரிமர்த்தனன் காதிலும் விழுந்தது. பாண்டியர்கள் தமிழ் மன்னர்கள். தமிழ் மணம் எங்கே இருந்தாலும் அதை மோப்பம் பிடித்துக் கண்டுவிடுவார்கள். பின்னர் எப்படியாகிலும் தங்கள் ராஜதானி நகரமாகிய மதுரைக்குக் கொண்டுவந்து சேர்க்காமலும் விடமாட்டார்கள். அதனால்தான் மதுரையம்பதியிலே தமிழ்ச்சங்கம் செழித்து வளர்ந்தது. பாண்டிய மன்னரும் போக, தமிழ் முச்சங்கங்களும் அழிந்துபட்டன.

வாதவூரர் கல்வித்திறமையைப்பற்றிக் கேள்விப்பட்டதும் எப்படியாவது அவரை வரவழைத்துத் தமக்கு ஒரு மந்திரியாக்கிக் கொள்ள வேண்டுமென்று பாண்டிய மன்னன் விரும்பினான். செந்தண்மை பூண்டொழுகும் அந்தணச் சிறுவரல்லவா ? வாதவூரர் மந்திரித் தொழிலுக்கு எவ்வகையிலும் குறைந்தவரல்லவே !

உடனே பாண்டியன் ஓர் ஓலை அனுப்பி வைத்தான். உடைவாள் தரித்த சேவகனொருவன் அவ்வோலையையுங் கொண்டு திருவாதவூரர் வீடு நுழைந்



7. பொற்றாமரை வாவி - மதுரை (பக்கம் 30)

தான். வீட்டில் உள்ளவர்கள் திகில் கொண்டார்கள். 'ஆற்றங்கரையில் மரமும் அரசறிய வீற்றிருந்த வாழ்வும்' எப்பொழுதுமே அபாயத்துக் குள்ளானவை அல்லவா? ஓலையை வாங்கிப் படித்துப் பார்த்தார் சம்புபாதசிருதர். உடனே, தாமதமின்றி, புதல்வனை அரச சபைக்கு அனுப்பி வைக்கவேண்டுமென்று அதில் கட்டளை பிறப்பிக்கப்பட்டிருந்தது!

அரசன் இட்டது கட்டளை. அதை மீற யாருக்கு உரிமை உண்டு? என்ன விபரீதம் நடக்குமோவென்று தந்தை மனம் பதைபதைத்தது. தாய் சிவஞானவதியார் மூர்ச்சை அடைந்து விழுந்துவிட்டார். ஆனால், புதல்வர் திருவாதவூரர் சிறிதும் கலங்கினரில்லை. அப்பாவையும் அம்மாவையும் தேற்றிவிட்டுச் சேவகனைப் பார்த்தார். "ஸ்வாமி, வாசலில் பல்லக்குத் தயாராகக் காத்துக் கொண்டிருக்கிறது" என்றான் அவன். பெற்றோரும் உறவினரும் வாழ்த்த, திருவாதவூரர் பல்லக்கிலேறி மதுரையை நோக்கிச் சென்றார்.

## 4

அன்று திருவாதவூரிலிருந்து ஊன் பொதிந்த சரீரத்தோடு வாதவூர்முனிவர் மதுரைக்குச் சென்றார். இன்று வருடந்தோறும் மாணிக்கவாசகர் உருவச் சிலை மதுரைக்கு அதே விமரிசையுடன் எடுத்துச் செல்லப்படுகிறது. ஒவ்வோர் ஆவணி மாதத்திலும் மாணிக்கவாசகர் விக்கிரகம் மதுரைக்குக் கொண்டு செல்லப்பட்டு, புறத்தே வையைக் கரையில், குதிரையிட்ட மண் சுமந்த திருவிழாக்கள் கொண்டாடப் பெற்று வந்தன. மதுரை மீனாக்ஷியம்மன் ஆலயம்

எல்லா இந்துக்களுக்கும் ஜாதி பேதமின்றித் திறந்து விடப்பட்டதிலிருந்து இவ் விழாக்களை இனிமேல் கோயிலுக்குள்ளேயே வைத்து நடத்துமாறு வாதவூர் வேளாண் மக்கள் வற்புறுத்தினார்கள். ஆனால், ஸநாதனிகள் இடமளிக்காது மறுக்கவே, வழக்கமாக நடைபெறும் ஆற்றங்கரைத் திருவிழாவிலும் பங்கு பற்றப் போவதில்லை என்று பாரிவேளாளர் சத்தியாக்கிரகம் செய்யத் தொடங்கினார்கள். முறைமையில் தவறுதல் ஏற்படப் போகின்றதே யென்று பயந்து, கடைசியில் வேளாளர் விரும்பியபடியே, கோயிலுக்குள் மாணிக்கவாசகர் விக்கிரகம் கொண்டு செல்லப்பட்டுத் திருவிழா இப்பொழுது நடந்துவருவதாக ஒரு வாதவூர் விவசாயி என்னிடம் சொன்னார்.

## 5

மேலூரிலிருந்து வந்த பஸ் ஒன்று திருமறைநாதர் கோயில் வாசலில் நின்று அழைத்தது. மத்தியான்னமாகிவிட்டதால் சீக்கிரம் மதுரை போய்ச் சேர்ந்து விடவேண்டுமென்று எனக்கு ஆவலாயிருந்தது. குடலைக் குலுக்கும் அந்த மோட்டார் பஸ்ஸிலேறி ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டேன். பழைய படியும் குலுக்கல்கள், ஏற்றல்கள், தூசிப்படலம், டிரைவரின் சினிமாப்பாட்டு, கண்டக்டரின் 'மருதை ... மருதை' என்ற கூப்பாடு - எல்லாம் நகரத்தின் வேதனைகளைக் குறிக்கும் ஞாபகங்கள்தாம்!

பின்னால் ஒருதரம் திரும்பிப் பார்த்தேன்.

மருதமரச் சோலையின் நடுவே திருமறைநாதர் கோயிற் கோபுரம் தன்னந்தனியே அண்ணாந்து நின்று

கொண்டிருந்தது. புருஷனை இழந்த விதவைபோல ஏங்கிக்கொண்டு நின்ற அந்தக் கோபுரத்தைப் பார்த்த போது, இன்னும் அது வாதவூரரின் வரவை எதிர் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறதுபோல எனக்குத் தோற்றியது. மதுரைக்கு அரிமர்த்தன பாண்டிய னிடம் சென்ற அந்த இளைய மந்திரியார் மீண்டும் திருவாதவூருக்குத் திரும்பப் போவதில்லை என்பதை அந்தக் கோபுரம் அறியுமா?

---

## நான்காம் அத்தியாயம்

ஆடக மதுரை அரசே போற்றி
கூடல் இலங்கு குருமணி போற்றி

**ம**துரைமா நகரில் :

பாண்டியன் அரிமர்த்தனன் கொலு மண்டபத் தில் சகல மரியாதைகளுடனும் ஆஜானுபாகுவாக வீற்றிருக்கின்றான். பக்கத்திலே மந்திரி பிரதானிகள் சபையை அலங்கரித்திருக்கின்றனர். அவர்கள் மத்தி யிலே தேசு நிறைந்த பொலிவோடு கூடி இளம் ஏறுபோல் உட்கார்ந் திருக்கிறார் திருவாதவூரர். மலர்ந்த முகத்தோடு பாண்டியன் அரிமர்த்தனன் சபையை நோக்கிச் சொல்லுகின்றான் :

" சகல சாஸ்திரங்களிலும் பாண்டித்தியம் பெற்ற கலைவாணராக விளங்கும் திருவாதவூரர் நம் ராஜ சபையில் இன்று இருப்பது யாவருக்கும் மகிழ்ச்சியைத் தரும் என்று நம்புகின்றேன். இம் மதிவாணரை நாம் இச்சபையில் நம்முடைய மந்திரி யாக நியமிக்கத் தீர்மானித்துள்ளோம். ஆகையால்,

அவருக்கு ராஜரீக முறையில் **தென்னவன் பிரமராயர்** என்ற பட்டத்தை அளித்து வாழ்த்துகின்றோம்."

இவ்விராஜப் பிரகடனத்தைக் கேட்டுச் சபையில் உள்ளோர் யாவரும் குதூகலித்துப் போற்றினர். ஒரு சிலர் மனம் மாத்திரம் புழுங்கியது. சபையிற் பெரும் பான்மையோர் பௌத்த ஜைனக் கொள்கைகளிற் பற்றுடையவர்களா யிருந்தபடியால், விபூதி உத்தூளனமாகத் தரித்து, எந்த நேரமும் சிவ சிவ என்று சொல்லித்திரியும் திருவாதவூரரின் சைவக் கொள்கை அவர்களுக்கு அடியோடு பிடிக்காமல் இருந்தது. ஆனால், அரசனோ சொக்கநாதரடியவன். நிறைந்த சிவபக்தன். அவனிடம் மந்திரித் தொழில் பார்க்க வந்த மற்றொரு சைவரிடம் துவேஷம் காண்பித்தால், அரசன் என்ன கருதுவானோ என்று பயந்துதான் அநேகர் மௌனம் சாதித்தனர். ஆனால் இதெல்லா வற்றையும் திருவாதவூரர் கவனித்தாரல்லர். ஒரு புன்னகையுடன் மிகவும் பணிவாக எழுந்து நின்று, அரசனை வணங்கி வாழ்த்தித் தம் மந்திரிப் பதவியை ஏற்றுக்கொண்டார்.

மூவேந்தரிலும் மிகச் சிறப்புடையவனாகிய பாண்டியனிடம் மந்திரிப் பதவி வகிப்பதென்றால் சாமானிய கௌரவமா? பட்டுப் பீதாம்பரங்களெங்கே, நவரத்னாபரணங்க ளெங்கே, முத்துச் சிவிகை யெங்கே, பல நூற்றுக் கணக்கான வேலையாட்கள் மெய்காப் பாளர் குடை கொடி ஆலவட்டம் முதலிய விருதுக ளெங்கே - எல்லாம் ஒரே அமர்க்களமான உபசாரமா யிருந்தன. 'தாரகைக் கூட்டங்களோடு விண் மதி வந்து பூமியில் அமர்ந்தது போல' என்று கடவுண்மா முனிவர் என்ற புலவர் வருணித்திருக்கின்றார்.

இப்படி இந்திரபோகமான வாழ்க்கை கிடைக்குமென்று வாதவூரர் எண்ணியிருக்கவில்லை. ஆனால், தமக்கு எதிர்பாராமல் கிடைத்த போகத்தைக் கொண்டு அவர் இறுமாப்பும் பெருமையும் கொண்டாரோ என்றால் அதுவுமில்லை. அவர் தமது கடமையே பெரிதென்றெண்ணி, பாண்டியன் ஒப்படைத்த 'செங்கோல் நடத்தும்' தொழிலைச் சிறப்பாகக் கொண்டு செலுத்தினர். ஏழைகளின் துன்பத்தைக் கவலித்து, அவர்கள் இடுக்கணை நீக்கினர். நாட்டில் பஞ்சம் நீங்க அறச்சாலைகள் நிறுவினர். மக்கள் எல்லாரும் வாதவூரரைத் தெய்வமெனப் போற்றினர்கள். மதுரைமா நகரில் ஒரு புது விளக்கு ஏற்றி வைத்ததுபோல் எங்கும் சந்தோஷம் பிரகாசித்தது.

2

மங்கம்மாள் சத்திரத்தின் வாசலில் ஒரு கிழவன் வந்து எதிர்ப்பட்டான். தோளில் கிடந்த துண்டை எடுத்துக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டே அவன், "சாமி, அசலூர் போலிருக்கு; ஊர் சுற்றிப் பார்க்க வேண்டாமா? மீனாட்சியம்மன் கோயில், மஹால், தெப்பக்குளம், கடைத்தெருக்கள்......எல்லாம் ஒரு தரம் சுற்றிப் பார்த்துவிட்டு வந்துவிடலாமே! ஸார், கோயிலுக்குப் போய் முதலில் சுவாமி தரிசனம் பண்ணிக் கொள்ளலாம்" என்று பீடிகை போட்டான்.

ஊருக்கு ஊர் சத்திர வாசல்களிலும் ரெயில்வே ஸ்டேஷன்களிலும் நின்று பிறவூர்ப் பிரயாணிகளுக்கு வழிகாட்டும் ஆசாமிகளில் இவனும் ஒருவன். ஆனால் மற்றைய 'லைசென்ஸ் பெற்ற கைடுகள்' (Guide)

போன்றவனல்லன் இவன். வற்றி வறண்ட தேகம்; அநேகநாள் பட்டினி கிடந்த சின்னத்தோடு கூடிய முகம்; நெற்றியிலும் மார்பிலும் புயங்களிலும் நிறைய விபூதிப் பூச்சு. நான் மதுரைக்கு வந்த நோக்கத்தை எப்படியோ மோப்பம் பிடித்துவிட்டவன்போல அந்த வழிகாட்டி பழைய சரித்திரக் கதைகள் பலவற்றை அளந்து கொட்ட ஆரம்பித்தான்.

"இன்று முழுவதும் என்னோடு திரியவேண்டும்; கூலி என்ன கேட்கிறாய்?" என்றேன் நான். "அப்படியெல்லாம் கண்டிப்பாக நான் ஏதும் கேட்பது வழக்கமில்லை, சாமி. ஏதோ கொடுத்ததை வாங்கிக் கொள்கிறேன். அசலூர்க்காரர் சவுகரியந்தான் எங்களுக்குப் பெரிசு" என்று சாதுரியமாகப் பதில் சொன்னான் அவன். "சரி புறப்படுவோம், வா" என்று சொல்லி ஊர் சுற்றிப் பார்க்கக் கிளம்பினோம்.

* * * *

இரண்டாயிரம் வருஷங்களுக்கு மேலாகவே சிறப்புற்றுச் செழித்துவளர்ந்த ஒப்பற்ற புராதன நகரான அதேன்ஸ் பட்டினம், மேலைத் தேசக் கலைக்கும் நாகரிகத்துக்கும் இருப்பிடமாய் விளங்கியது. அதே போல் பழமையும் கலைச்சிறப்பும் உடையதா யிருந்த படியால், இந்தியாவுக்கு வந்த மேல்நாட்டு யாத்திரிகர்களும், வர்த்தகர்களும் மதுரைமா நகரைத் தென்னிந்தியாவின் அதேன்ஸ் என்று பாராட்டினார்கள். இத்தகைய சிறப்பு வாய்ந்த மதுரையைத் தம் வாழ்நாளில் ஒரு காலாவது சென்று பார்க்காத தமிழர் புண்ணியப் பேறில்லாதவர்க ளென்றுதான் சொல்லவேண்டும்.

மதுரை என்று சொன்னவுடன் நமக்கு மீனாட்சி யம்மன் கோயிலும், அதற்கருகே அமர்ந்திருக்கும் சுந்த ரேசுவரருடைய ஆலயமுந்தான் முதலில் மனக்கண் முன் தோற்றமளிக்கின்றன. மனுஷனுடைய அகம்பா வத்தைச் சிதறடிக்கத் தக்கதாக வானளாவி, இறு மாந்து நிற்கும் திண்ணிய கோபுரங்களும், வயிரம் மிக்க தனிக் கருங்கல் தூண்களும், அவற்றை அழகு படுத்தும் சிற்ப உருவங்களும் நமது பழந்தமிழ் மூதாதையரின் கலைச்சிறப்பையும் நாகரிக முதிர்ச்சி யையும் எடுத்தியம்பிக்கொண் டிருக்கின்றன.

காசியில் விசாலாட்சியும், காஞ்சீபுரத்தில் காமாட்சியும், மதுரையில் மீனாட்சியும் பாரத நாட் டின் மூன்று முக்கிய சக்தி மூர்த்தங்களாகும். இவற் றில் மதுரை மீனாட்சியம்மன் வரலாறு புராணங்களில் மிக ரஸமாகக் கூறப்பட் டிருக்கின்றது. மதுரையை யாண்ட மலையத்துவஜ பாண்டியன் என்பவனுக்குச் சிவ சக்தியாகிய பார்வதி யம்மையாரே ஒரு பெண் குழந்தையாக அவதரித்தார். சகல லக்ஷணங்களும் இருந்தபோதிலும் அந்தக் குழந்தைக்கு ஸ்தனங் கள் மூன்று படைக்கப்பட் டிருந்தனவாம். இதனைக் கண்ட பெற்றோர் திகிலடையவும், தேவியானவள் கனவில் தோன்றி; இப்பெண் வயது வந்து தனக்கு உகந்த நாயகனொருவனைக் காணும்போது மூன்றாவது ஸ்தனம் தானாகவே மறைந் தொழியும் என்று கூறி மறைந்தனளாம். குழந்தை மீனாட்சி - மீன்போன்ற கண்களையுடையவள் - சகல கலைகளி லும் வல்லவளாகி, தந்தைக்குப் பின் சிம்மாசன மேறி ராஜ்யாதிகாரம் நடத்தும் காலம், ஒருநாள், காட்டிலே வேட்டையாடிக்கொண் டிருக்கையில், ஓர் அழகிய

யௌவன புருஷனைக் கண்டு மோகித்தாள். அவனும் காதலித்தான். அந்த க்ஷணமே மீனாட்சியின் மூன்றாவது ஸ்தனம் மறைந்து, சகல லக்ஷணமும் பொருந்திய மேனியோடு திகழ்ந்தாள் அவள். அந்தக் காதலன் சுந்தரேசுவரராகிய சிவபிரானே என்றும், இவர்கள் திருக்கலியாணத்தை விஷ்ணு மூர்த்தி நேரிலே வந்து நடப்பித்து வைத்தார் என்றும் புராணம் கூறும். மதுரையில், புது மண்டபத்து மேற்புறத் தூண் ஒன்றில் இருக்கும் ஓர் அழகிய சிற்ப வடிவம் இக் கல்யாண சம்பவத்தை மிகவும் தத்ரூபமாக எடுத்துக் காட்டுகின்றது. மதுரைக்குச் சமீபத்தில் ஏழு மைல் தூரத்தில் அழகர் கோயில் என்ற விஷ்ணு ஸ்தலம் இருக்கிறது. வருஷந்தோறும் சித்திரை மாதத்தில் மதுரையில் நிகழும் உற்சவத்தின் போது அழகர் கோயிற் சுவாமி பூம்பல்லக்கில் வந்து சுந்தரேசுவரப் பெருமானுக்கும் மீனாட்சியம்மனுக்கும் திருக் கல்யாணம் செய்துவைத்துவிட்டுச் செல்லும் காட்சி இப்பொழுதும் காட்டப்பெற்று வருகிறது.

## 3

மாலை ஐந்து மணியிருக்கும். கலகலப்பான கடை வீதிகளைக் கடந்து மீனாட்சியம்மன் கோபுர வாசலை அடைந்தோம். பலவித சப்தங்கள், பலவித வாசனைகள், பலவிதக் காட்சிகள். உள்ளேயிருந்து வரும் பூஜாலங்கார வாத்தியங்களின் கதம்ப கோஷம், வாசல் வழியே வந்து தெய்விக நாதமாகச் சுழன்று காதில் ஒலிக்கவும், நேரே கண்ணுக்கெட்டிய தூரம் வரையும் சட்ட விளக்குகள் பிரகாசிக்கும் காட்சியின் பிரபை



6. குருந்த மரம் - ஆவுடையார் கோயில் (பக்கம் 46)

உள்ளத்தை உறுத்தவும், சுகந்த மலர்களின் வாசனை நாசியைத் துளைக்கவும், எல்லாம் சேர்ந்து நம்மைப் பரவசப் படுத்திவிடுகின்றன. தேகம் புளகாங்கித மடைகிறது. சீர்காழிக் குழந்தை ஞானசம்பந்தன் பால்வடியும் அதரத்தோடு தாய்மையின் அன்பில் திளைத்துப்போய் இத்திவ்விய ஸ்தலத்தில் வந்தபோது அனுபவித்த உணர்ச்சியில்தான் நாமும் ஈடுபடுகிறோம்.

*மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை*
*வரிவளைக் கைமட மானி*
*பங்கயச் செல்வி பாண்டிமா தேவி*
*பணிசெய்து நாடொறும் பரவப்*
*பொங்கழ லுருவன் பூதநா யகனால்*
*வேதமும் பொருள்களு மருளி*
*அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த*
*ஆலவா யாவது மிதுவே!*

மீனாட்சியம்மன் கோயிலுக்கு ஒன்பது பிரமாண்டமான கோபுரங்கள் இருக்கின்றன. இவற்றின் கீழ் நின்றுகொண்டு அண்ணாந்து பார்க்கும்போது இக் கோபுரங்கள் மனிதனுடைய கைகளால் நிருமாணிக்கப் பட்டவை என்ற எண்ணமே பொய் என்றுதான் தோன்றும். கொத்துக் கொத்தான சிற்ப வடிவங்களை வைத்துப் புராணக் கதைகளையெல்லாம் கல்லிற் செதுக்கிப் புனைந்திருக்கும் அந்த அழகும், வானளாவிய உயரமும் திண்மையும் செறிந்த அக் கோபுரங்களை, கேவலம், மனிதனால் கட்டி முடிக்க இயலுமா? பூத கணங்களோ அல்லது தெய்வ சிற்பிகளோதான் தமது மந்திர தந்திர சக்திகளை உபயோகித்துக் கட்டியிருக்க வேண்டுமென்று நாம் கற்பனை செய்துகொள்வோம். ஆனால், அவை அப்படி எழுந்தனவல்ல. சாதாரண

மனிதர் கையினால்தான் கட்டப்பெற்றவை. கலை வன்மையுள்ள தமிழர்களால்தான் நிருமாணிக்கப் பட்டவை.

மதுரைமாநகரின் நாற்புறங்களிலும் உள்ள ஆனை மலை, நாகமலை, பசுமலை, பரங்குன்றம் முதலிய மலைகளுக்கு நடுவே மீனாட்சியம்மன் கோயிலின் வெளிப் புறக் கோபுரங்கள் நான்கும் கம்பீரமாகத் தலை தூக்கி நிற்கும் பேரெழிலைப் பார்த்தால் தமிழ் மக்களின் நாகரிக உயர்ச்சியின் சிறப்புத் தோன்றும்.

இக் கோபுரங்களில், வடக்குக் கோபுரம் மொட்டைக் கோபுரம் என வழங்குகின்றது. மேற்குக் கோபுரத்தில்தான் கணக்கில் அடங்காத சிற்ப வடிவங்களைக் காணலாம். புராணக் கதைகளெல்லாம் இதில் மிக அழகாகக் காட்டப்பட்டிருக்கின்றன. தேவாசுரர் திருப்பாற்கடல் கடையும் காட்சி, பரமசிவன் ஆலகால விஷத்தை அருந்தப்போகையில் பார்வதி சென்று அவர் கண்டத்தை அமுக்கிப் பிடிக்கும் காட்சி முதலியன தத்ரூபமாகக் காட்டப் பெற்றிருக்கின்றன. கிழக்குக் கோபுரம் சிறிது பழையதாயிருத்தல் கூடும். இதனடியில், திருபுவன சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் சுந்தரபாண்டியனால் இந்தக் கோபுரம் கட்டுவிக்கப்பட்டது என்ற கல்வெட்டுக் காணப்படுகிறது. இக் கோபுர வாசலின் பக்கத்தில் மதுரை வீரன் கறுப்பண்ணசாமிக்கு ஒரு சிறு கோயில் இருக்கிறது. கொடிய நோய்களும் பீடைகளும் ஏற்படாது நகரத்தைக் காப்பாற்றுவதாகச் சொல்லப்படும் இத் தேவதைக்கு, கள் சாராயம் முதலிய வஸ்துக்களே நிவேதனப் பொருள்கள். சொக்கநாதருக்காவது மீனாட்சிக்காவது ஜனங்கள் அவ்வளவாகப் பயப்பட

மாட்டார்கள், இச் சிறு தெய்வத்துக்குப் பயப்படுவதுபோல!

உட்பிராகாரத்தில் துவஜஸ்தம்பத்துக்கு எதிரிலுள்ள நடராஜ மூர்த்தி காளியுடன் ஆடிய ஊர்த்துவ தாண்டவ நடனத்தைக் காட்டும் ஒரு பெரிய சிலா ரூபம்; பிரமிக்கச் செய்யும் வனப்பு வாய்ந்தது. மற்றொரு பக்கத்திலே காளி தேவியின் நடனம் அதே அளவு சிலையொன்றில் காண்பிக்கப்பட்டிருக்கிறது. இவ்விரண்டு அழகிய சிலைகளையும் கோயிலதிகாரிகள் கலைப்பொக்கிஷங்களாகப் பேணாது அக்கறையின்றி ஒதுக்கிவைத்திருப்பது விசனிக்கத்தக்கது. ஆராதனை செய்ய வருவோர் தாம் நினைத்தபடி வெண்ணெயையும், குங்கும சந்தனங்களையும், வேறு பொருள்களையும் இச் சிலைகளில் எறிந்து அப்பிவிட்டிருக்கிறார்களாதலால் சிலாவடிவங்களின் கலைச்சிறப்பு மறைந்துபோய்க் கிடக்கிறது. எதிரேயுள்ள புது மண்டபத்தினுள்ளும் இவற்றைப்போன்ற இரு சிலைகள் இருக்கின்றன. அவை பொதுமக்களின் சேஷ்டைகளுக் கெல்லாம் இலக்காகி உடைவும் தகர்வும் பெற்றுவருகின்றன. நடராஜரின் அபய ஹஸ்தம் நான் பார்க்கையில் உடைந்தே போயிருந்தது. இது போன்ற துஷ்கிருத்தியங்களுக்கு இலக்காகாமல் சிற்ப வடிவங்க ளெல்லாம் காப்பாற்றப்படவேண்டும்.

சொக்கநாதர் சந்நிதானத்திலுள்ள கம்பத்தடி மண்டபத்திலேயும் ஏராளமான சிற்பங்களைக் காணலாம். இவற்றுள் முக்கியமாக, சிவபெருமானுடைய நானாவித உருவங்களாகிய அநுக்கிரக மூர்த்தம், யோக மூர்த்தம், சாந்த மூர்த்தம், நிருத்திய மூர்த்தம் முதலியன மிக நேர்த்தியாகப் பல தூண்களில் செதுக்கப்

பட்டிருக்கின்றன. கம்பத்தடி மண்டபத்தில் மேற்கே யுள்ள இரு பெரிய தூண்களில் சிவபிரானை ரிஷபா ரூடராகச் சிற்பித்திருக்கும் வடிவங்கள் அழகுடன் பொலிந்து விளங்குகின்றன. பார்வதி சமேதராக ரிஷபாரூடர் இருக்கும் சிலைகள் மிக அருமை. மதுரை யில் இருக்கும் இவை யிரண்டும் பிரசித்தி பெற்றவை. லிங்கத்திலிருந்து சிவபிரான் உற்பத்தியானதைக் குறிக்கும் லிங்கோத்பவ மூர்த்தம் ஒன்றும் இங்கு காணப்படுகிறது.

பிரமாவின் கர்வத்தை அடக்க ஒரு தலையைக் கிள்ளி எறிந்ததாகக் காட்டும் பிரம சிரச்சேத மூர்த் தம், கைலாச பர்வதக் காட்சி, சிவனும் சக்தியும் பாதி பாதியாக விளங்கும் அர்த்த நாரீசுவர மூர்த்தம், கஜ சம்ஹார மூர்த்தம் முதலிய யாவும் விசித்திர மானவை. மீனாட்சி சுந்தரேசுவரரின் திருக்கல்யாணத் தைக் காட்டும் ஓர் அழகிய சிலை கலாரசிகர்களின் மனத்தைக் கவரக்கூடியது. மீனாட்சியம்மனின் வலது பக்கத்தில் மகாவிஷ்ணு நின்று, சுந்தரேசுவரர் பற்றிய கையில் தாரை வார்த்துக் கொடுக்கும் பாவனையும், மீனாட்சியினது முகத்தின் எழிலும், பரமசிவனுடைய பார்வையும் சிற்பியின் கைகளிலிருந்து உயிர்பெற்றுக் காணப்படுகின்றன.

மதுரை, பஞ்ச சபைகளில் ஒன்றாகிய ரஜத சபை அல்லது வெள்ளியம்பலம் எனப்படும். நடனத் திலே பிரியமுள்ளவர் சிவபிரான். ஒருபோது ஆதி சேஷன் இவரது நடனத்தைக் கண்டுகளிக்க விரும்பின னதலால், அந்தக் காட்சியைப் பூலோகத்தில் வந்து மதுரையில் வெள்ளியம்பலத்தில் கொடுத்தருளினார் என்பது புராணக் கதை. சிவனது எழு வகை நடனங்

களில் மதுரையில் ஆடியது ஆனந்த தாண்டவம் எனப் படும். சுந்தரேசுவரர் சந்நிதானத்தின் உட்பிராகாரத் தில் வெள்ளிக் கவசத்தால் மூடப்பட்ட ஒரு பெரிய ஆனந்த தாண்டவ நடராஜ மூர்த்தம் இருக்கிறது. இதி லுள்ள ஒரு சிறப்ப விசேஷ மென்னவெனில், வழக்க மாக இடது காலைத் தூக்கி ஆடும் சிவன், இங்கே வலது காலைத் தூக்கி ஆடவும், இடது கைக்குப் பதி லாக வலது கையால் கஜஹஸ்த முத்திரை பிடிக்கவும் காண்பிக்கப்பட் டிருப்பதாகும்.

அம்மன் சந்நிதானத்துக்குத் தென்கிழக்கு மூலையில் பொற்றாமரை வாவியாகிய திருக்குளம் இருக்கிறது. இந்த வாவியில்தான் ஒருகாலத்தில் பல போலிப்புலவர் கள் மூழ்கிக் கஷ்டப்பட்டார்களோ! இவ் வாவியைச் சுற்றியுள்ள மண்டபத்தின் சுவரிலே சிவபிரானது அறு பத்துநான்கு லீலைகளான திருவிளையாடல்களும் பல வர்ணங்களில் சித்திரிக்கப்பட்டுள்ளன. இச்சித்திரங்கள் யாவும் அக்காலத்தில் வழங்கிய தென்னிந்தியச் சித்திர முறையிலே தீட்டப் பெற்றிருக்கின்றன. சித்திர நிபுணர்களுக்கு இவை ஒரு நல்ல ஆராய்ச்சிக்கு வாய்ப்பாகும்.

பொற்றாமரை வாவியைப்பற்றிய ஒரு கதை :

மதுரையில் தமிழ்ப் புலவர்கள் பலர் வாழ்ந்த காலத்தில், அவர்கள் புலமையை மதிப்பிடும் சமயங் களில், அவர்களுக்குள்ளே பல சண்டைகள் நேர்ந்தன. அவற்றைத் தடுப்பதற்காகச் சோமசுந்தரக் கடவுள் அவர்களுக்கோர் வயிரமணிப் பீடம் கொடுத்தார். பொற்றாமரை வாவியில் மிதந்துகொண்டிருந்த அந்தச் சங்கப்பலகை உண்மையான புலவர்களையும் அவர்கள் நூலையும் மாத்திரம் தன் மீதிருக்க இடமளித்து

போலிப் புலவர்களையும் சாரமற்ற நூல்களையும் குளத்திலே தள்ளிவிடுமாம். மதுரையில் செழித்து வளர்ந்து வந்த மூன்று சங்கங்களுக்கும் அப்பலகை தீர்ப்பளிக்கும் நியாயாதிபதியாக இருந்திருக்கிறது.

பொற்றாமரை வாவிக்கு மேற்கில் இருப்பது கிளி மண்டபம். இதில் அநேகம் கிளிக்கூண்டுகள் தொங்கவிட்டிருப்பதைக் காணலாம். இது பஞ்ச பாண்டவர் மண்டபம் என்றும் சொல்லப்படும். பஞ்ச பாண்டவர் சிலைகளும் திரௌபதியின் சிலையும் மிக அழகாகத் தூண்களில் செதுக்கப்பட்டிருக்கின்றன. புருஷாமிருகச் சிலை ஒன்றும் இங்கே காணப்படுகின்றது.

சுந்தரேசுவரர் ஆலயப் பிராகாரத்தில் இருக்கும் ஆயிரக்கால் மண்டபத்தினுள்ளும் சில அரிய சிற்ப வடிவங்களைக் காணலாம். தளவாய் அரியநாத முதலியார் குதிரைச் சவாரி செய்யும் சிலை, குறவன் குறத்தி சிலைகள் இவற்றில் பிரசித்தமானவை.

அம்மன் சந்நிதியிலிருந்து சுந்தரேசுவரர் ஆலயத்துக்கு வடக்குப் பக்கமாகப் போகும் வாசலில் பிரமாண்டமான விநாயக விக்கிரகம் ஒன்று தனிக் கல்லில் அமைக்கப்பட்டிருக்கிறது. முக்குறுணி அரிசிப் பிள்ளையார் எனக் கூறுவர். ஒரு காலத்திலே, தென் திசை நோக்கி இருக்கும் வெள்ளியம்பல நடராஜர் பார்வையால் மதுரையின் தெற்கேயுள்ள மக்கள் கஷ்டப்பட்டார்கள் என்று அந்த வாசலை அடைத்து, இவ்விநாயக விக்கிரகத்தை அதில் பிரதிஷ்டை செய்துவைத்தார்கள் என்று சொல்லுகிறார்கள். இச்சிலை முன்பு ஒரு முறை மதுரையின் கிழக்கே யுள்ள வண்டியூர்த் தெப்பக்குளம் என்ற பெரிய குளத்தை வெட்டும்

போது அங்கே கண்டெடுக்கப்பட்டதாகக் கூறுவர். மாணிக்கவாசக சுவாமிகள் அரிமர்த்தன பாண்டியனிடம் விடை பெற்றுக்கொண்டு திருப்பெருந்துறைக்கு குதிரை வாங்கச் சென்றபோது, முதலில் இந்தப் பிள்ளையாரையும் பக்கத்திலிருந்த காளி தேவியையும் வணங்கிச் சென்றாரென்று திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தில் கூறப்படுகிறது. தெப்பக் குளத்தினருகே இப்பொழுதும் ஒரு மாரியம்மன் கோயில் காணப்படுகிறது. குறித்த விநாயக விக்கிரகமும் அக்காலத்தில் இங்கேதான் இருந்திருத்தல் கூடும்.

மதுரை க்ஷேத்திரம் மீனாட்சியம்மனுக்கே விசேஷமுடையதாகையால், வழிபாடு செய்ய வருவோர் முதலிலே அம்மன் சந்நிதி வழியேதான் உள்ளே செல்வர். சுந்தரேசுவரரின் கிழக்குக் கோபுர வாசல் வழியாக உள்ளே செல்லும் வழக்கமில்லை. இவ்விரு சந்நிதிகளிலும் இருக்கும் கடைகளிலிருந்து மாத்திரம் வருஷமொன்றுக்குக் கோயிலுக்கு இருபதினாயிரம் ரூபாய்க்கு மேல் வருமானம் கிடைக்கிறதாம். கோயிலின் முழு வருமானமும் வருஷத்தில் ஒரு லக்ஷ ரூபாய்க்கு மேல் இருக்கும். சுவாமிக்கும் அம்மனுக்கும் சொந்தச் சொத்தாயிருக்கும் நகைகள் மாத்திரம் இருபது லக்ஷம் ரூபாய்க்கு மேல் பெறுமானம் உள்ளன என்று சொல்லப்படுகிறது. பல காலங்களில் பல பிரபுக்களும் மற்றவர்களும் தங்க நகைகளை உதவிவந்திருக்கிறார்கள். மதுரையின் முனிஸிபல் கமிஷனராக இருந்த ஓர் ஐரோப்பியர் சில நகைகள் செய்து கொடுத்திருக்கிறார். பிரிட்டிஷ் அரசுக்கு முன்பிருந்த கிழக் இந்திய வர்த்தகக் கம்பனியாரே மீனாட்சியம்மனுக்கு

ஒரு பவுன்மாலை உதவியிருக்கிறார்கள். இந் நகைகளெல்லாம் ஓர் அறையில் பாதுகாப்பாக வைத்துப் பூட்டப் பெற்றிருக்கின்றன. ஏழு பேர் ஒரே வேளையில் வந்து தங்களிடமுள்ள ஏழு தனித் திறவுகோல்களால் திறந்தால்தான் இவ்வறையைத் திறக்க முடியும். இவற்றைப் பொது ஜனங்கள் பார்வையிட வேண்டுமானால் இருபது ரூபாய் கோயிலுக்குக் கொடுத்தாக வேண்டும்.

---

## ஐந்தாம் அத்தியாயம்

**கற்றாரை யான்வேண்டேன்**
**கற்பனவும் இனியமையும்.**

திருவாதவூரிலிருந்து மதுரைக்கு வந்தபோது மந்திரி பிரமராயருக்கு ஓரளவு சந்தோஷமாகவே இருந்தது. மதுரையில் நிம்மதியாக இருந்து மீனாட்சியம்மனையும் சுந்தரேசுவரரையும் வழிபடுவதற்கு ஒரு சந்தர்ப்பம் வாய்த்ததேயென்று அவருக்கு உள்ளூற ஆனந்தந்தான். அதற்கு மந்திரிப்பதவியும் கிடைத்தது, ஏகபோக சௌக்கியமாகிவிட்டது. கிரமந் தவறாது இறைவனையும் இறைவியையும் வழிபடத் தொடங்கினார். சிற்சில சமயங்களில் ஊருக்குள்ளே சென்று குடிகளின் நிலைமையையும் கவனித்து அவர்களுக்கு ஆவன செய்து கொடுத்தார். இவற்றையெல்லாம் விட அவருக்கு இன்பத்தைக் கொடுத்தது மதுரையிலிருந்து தமிழாராய்ந்த புலவர் கூட்டமும், தர்க்க சங்கங்களும், அவர்கள் உறவுந்தான்.



9. அக்னி தீர்த்தம் - ஆவுடையார்கோயில் (பக்கம் 50)

மதுரையில் ஒருகாலத்தில் ஒரு பெரிய கல்விக் கழகம் - தமிழ்ச் சங்கம் - இருந்தது. இடையிடையே வெள்ளப் பெருக்கும் பஞ்சமுந் தோன்றி மக்கள் வாழ்க்கையைச் சீர்குலைத்துவிட்டபடியால் இந்தத் தமிழ்ச் சங்கமும் காலத்துக்குக் காலம் அழிந்து பிறகும் தோற்றியது. இப்படி மூன்று சங்கங்கள் நிலவியதாகச் சரித்திரம் கூறுகின்றது. மூன்ருவது சங்கமாகிய கடைச்சங்கம் மறைந்து அதிலிருந்த புலவர்களும் போனபின்பு அவர்களுடைய சந்ததியார்தாம் மதுரையில் இருந்து தமிழை வளர்த்துவந்தார்கள். கவி புனைவதிலும் காவியம் செய்வதிலும் ஈடுபட்டிருந்தவர்கள் சமயத் தர்க்கங்களிலும் ஈடுபடத் தொடங்கினர்கள். அக்காலத்திலேதான் தென்னுட்டில் பௌத்த சமயத்துக்கும் சமண சமயத்துக்கும் தீவிரமான பிரசார இயக்கம் ஏற்பட்டிருந்தது. அந்த வேளையில் வாதவூர் மந்திரியும் போய்ச் சேர்ந்தார் மதுரையில்.

சமணப் புலவர்களும் பௌத்தப் புலவர்களும், தத்தம் சமய வாதங்களைப் புரிந்து கொண்டு, சைவாகமங்களைக் கண்டித்து வந்ததைச் சிலகாலம் வாதவூரர் கவனித்து வந்தார். அந்தப் பரசமய வாதிகளின் கூற்றுக்களும் பொய்ப்பிரசாரமும் சிவநிந்தையும் நம் சைவ அடியாரின் உள்ளத்தைப் புண்படுத்தின.

**அத்தேவர் தேவர் அவர்தேவர் என்றிங்கன்**
**பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே**

உண்மையான முழுமுதற் கடவுளாகிய தேவனைக் காட்டித்தர ஒரு சற்குரு அகப்பட மாட்டாரா?

'உவலைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாம் சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறும்' என்னை ஓர் உண்மையான ஞானாசிரியர் வந்து ஈடேற்ற மாட்டாரா என்று இங்ஙனம் வாதவூர் மந்திரியார் சமய அறிவு தமக்குப் போதிப்பதற்கும், பிறவித் துன்ப இருளைப் போக்க ஞான தீப ஒளி பெறுவதற்கும் நல்லாசிரியர் ஒருவரை மதுரையெங்கும் தேடி அலைந்தார்.

நாளுக்குநாள் ஊரைச் சுற்றிப் பார்த்தார். சகல செல்வப் பெருக்கோடும் அரச வைபவத்திலிருந்து போகம் அனுபவித்த புத்தர் பெருமான், ஏழைகள் துயரையும் சாதலின் உண்மையையும் நேரே கண்டு ஞானோதயம் வரப்பெற்றதுபோல, வாதவூரரும் உயிர்களின் இன்ப துன்ப வேறுபாடுகளைக் கண்டு தத்துவ விசாரணை செய்யத் தொடங்கினார். உயிர்களெல்லாம் பிறக்கின்றன. பல்வேறு தோற்றங்களை எடுத்துப் பலவித இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றன. மூப்படைந்து இறக்கின்றன. பிறப்பும், பிணியும், மூப்பும், சாக்காடுமா யிருக்கும் இந்த வாழ்க்கை வட்டத்துக்கு ஒரு தொடக்கமோ முடிவோ இல்லையா?

> புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
> பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
> கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
> வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்

உயிர்கள் மாறி மாறிப் பிறந்துழலுவ தல்லாமல் ஒரு முடிவையும் காணவில்லையே!

இம்மாதிரியான உள்ளப் போராட்டத்தோடு வாதவூரர் மதுரையில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்களை யெல்லாம் கண்டு பேசி ஆராய்ந்தார்; சமண முனிவர்

களுடன் வாதாடினார்; பௌத்த பிக்ஷுக்களை உசாவினார். ஆனால் தமது மனத்துக்கு திருப்தியைத் தரத் தக்க விடையளித்து, உயிர்களின் பிறவித் துன்பத்தை நீக்கவல்ல மருந்து இதுதான் என்று சமாதானம் சொல்லவல்ல சற்குரு ஒருவராவது எதிர்ப்படவில்லை. பெரிய ஏமாற்றத்தோடு சுந்தரேசுவரரையும் மீனாட்சியையுந் தவிர வேறு கதி தமக்கு இல்லையென்று பெருமூச்சுடன் வாதவூரர் நித்தியம் கோயிலுக்குச் சென்று வழிபட்டுக்கொண்டு வரலானார்.

## 2

பாண்டியன் அரச சபை ஒருநாள் கூடியிருக்கும் போது தூதுவன் ஒருவன் வந்து பின்வருமாறு விண்ணப்பம் செய்தான்: "மகாராஜாவே, மேலைத் தேசத்திலிருந்து சில வியாபாரிகள் நல்ல உயர்ந்த ஜாதிக் குதிரைகளுடன் திருப்பெருந்துறையில் வந்து இறங்கி யிருக்கிறார்கள். நமது குதிரை லாயத்திலே சில குதிரைகள் கிழமாயும், சில இறந்தும் போய்விட்டதால் குதிரைப்படை வரவரக் குறைந்துகொண்டு வருகிறதாக லாயக்காரர்கள் முறையிட்டார்கள். மகாராஜாவுக்கு இவ்விஷயத்தை உடனே தெரிவிக்க வேண்டுமென்று அடியேன் இங்கு வந்தேன்" என்றான்.

பாண்டியன் அரிமர்த்தனன் முதல் மந்திரி பிரமராயரைப் பார்த்தான். "பிரமராயரே, நமது குதிரை லாயத்திலே குதிரைகள் மாறிப் பல மாதங்களாகின்றன. திருப்பெருந்துறையிலே மேலைத் தேசக் குதிரைகள் வந்து இறங்கியிருப்பதாகத் தூதுவன்

சொல்லுகிறுன். அவை ஈழத்து மார்க்கமாக வந்த அராபிக்குதிரைகளா யிருக்கலாம். அந்த வியாபாரி களிடம் சென்று உத்தம லக்ஷணம் பொருந்திய குதிரை களாகப் பார்த்து விலை பேசி நமக்குத் தேவையான குதிரைகளை வாங்கிவருவதற்கு நீரே செல்லவேண்டும். அசுவ லக்ஷண சாஸ்திரத்தில் நீர் வல்லவர் என்பதை நானறிவேன். அல்லாமலும், சாதுரியமாக வியாபாரி களுடன் சம்பாஷித்து அவர்களிடம் குறைந்த விலைக்கு நல்ல இனக் குதிரைகளாகப் பார்த்து வாங்குவ தற்கும் நீரே சதுரர். ஆகையால், உமக்கு வேண்டிய அளவு திரவியத்தை நமது களஞ்சியத்திலிருந்து பெற் றுக்கொண்டு மெய்காப்பாளருடன் திருப்பெருந் துறைக்குச் சென்று குதிரைகளை வாங்கி வரவேண் டும் " என்றுன்.

அரசன் வார்த்தைக்கு எதிர் வார்த்தை பேச வில்லை மந்திரி பிரமராயர். அன்போடு தலை வணங்கி, பாண்டியன் உத்தரவை நிறைவேற்ற ஒப்புக்கொண்டு தமது ஆசனத்திலிருந்து எழுந்து களஞ்சியத்துக்குச் சென்றுர். சபையோர் கரகோஷம் செய்தனர். மன் னவன் காரியம் வெற்றியடைய வேண்டும் என்று வாழ்த்தினர்.

தமது தேவைக்கு வேண்டிய அளவு திரவியத்தை எடுத்துக்கொண்டு வாதவூரர் புறப்பட்டார். தமது காரியம் வெற்றிபெறவேண்டுமென்று சுந்தரேசுவர ரையும் மீனுட்சியையும் தொழுதுகொண்டு மதுரைமா நகரை விட்டுப் பிரிந்தார். மிக விசேஷமாக அலங் கரிக்கப்பட்ட முத்துச் சிவிகை, குடை, கொடி, ஆல வட்டம் முதலிய விருதுகள், மெய் காப்பாளர்—எல் லாம் ஒரே ராஜ மரியாதைதான். பாண்டிய மன்

னனே நேரில் நின்று வழியனுப்பி வைத்தான். மிகுந்த கௌரவத்தோடும் சிறப்போடும் வாதவூரர் திருப்பெருந்துறைக்குப் புறப்பட்டுச் செல்லுகின்றார்.

இந்த அசாதாரண மரியாதைகளுடன் வாதவூரரின் போக வாழ்க்கையும் முடிவடையப் போகின்றது.

அணைந்துபோகும் சுடரொன்று கடைசியாக ஒரு தரம் துள்ளி மின்னுவதுபோல, வாதவூரரின் லௌகிக வாழ்வும், மந்திரிப் பதவியிலிருந்து போகம் நுகர்ந்த வாழ்வும் கடைசியாக ஒரு க்ஷணம் மாத்திரம் மின்னுகின்றன.

வாதவூர் முனிவரின் வாழ்க்கை நாடகத்திலே முதற் காட்சி முடிந்து திரை விழுகின்றது. அவருடைய லௌகிக வாழ்க்கைக்கு இதோடு முற்றுப் புள்ளி போடப்படுகிறது. இனி அவர் சரித்திரம் வேறு. பாண்டியனுக்காகக் குதிரை வாங்கச் செல்லுகின்றார். சென்று தமது ஞானாசிரியனைக் கண்டு சந்நியாசம் பூண்டுகொள்கிறார். ஆனால், மீண்டும் மதுரைக்குத் திரும்பும்போது அவர் பழைய மந்திரியாகவே காணப்படப் போவதில்லை.

திருப்பெருந்துறைக்குப் போகும் இந்த யாத்திரை வாதவூரருக்கு ஒரு புதிய அனுபவத்தைக் கொடுக்கப்போகிற புண்ணிய யாத்திரை.

---

## ஆறும் அத்தியாயம்

*சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே*
*திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே.*

வாதவூர் முனிவர் திருப்பெருந்துறைக்கு எந்த வழியாகப் போனாரோ நாம் அறியோம். இப்போது

ஆவுடையார் கோயில் என வழங்கும் இந்த ஸ்தலம் தஞ்சை ஜில்லாவில் அறந்தாங்கிக்குத் தென் கிழக்கே ஏழுமைல் தூரத்தில் இருக்கிறது. இது கடற்கரையை அடுத்ததுமல்ல, துறைமுகப் பட்டினமுமல்ல. உள் நாட்டிலொரு சிறு கிராமம். மாணிக்கவாசகர் காலத்தில் ஒருவேளை கடலை அடுத்திருந்ததோ என்னவோ?

அக்காலத்தில் ரெயிலோ மோட்டார் வசதியோ இருந்ததா? கால் நடையாகவோ அல்லது குதிரை முதுகிலோதான் பிரயாணம் செய்யவேண்டும். ஆனால் அரிமர்த்தன பாண்டியன் மந்திரி, ராஜ காரியமாகப் பிரயாணம் செய்கிறாரென்றால், எவ்வளவு தூரமாயிருந்தாலும் அசௌகரியத்துக்கு இடமிருக்குமா? பல்லக்கிலேறிச் சுகமாக உட்கார்ந்து கொள்ள வேண்டியதுதானே? மெய்காப்பாளர்களும் மற்றும் சேவகர்களும் குதிரையேறிச் சென்றிருப்பார்கள்.

எந்த மார்க்கமாகச் சென்றார் என்று சொல்லப்படவில்லை. மதுரையிலிருந்து நேரே கிழக்கே கண்ணை மூடிக்கொண்டு போனால் திருப்பெருந்துறையைச் சேர்ந்துவிடலாம். இடையிலே பெரும்பான்மையும் நன்செய் புன்செய் நிலங்கள் ஆகையால் கஷ்டமொன்றும் இருந்திருக்காது. மதுரையிலிருந்து சிவகங்கைக்கு ஒரு கற்சாலை இருக்கிறது. மாணிக்கவாசகர் அந்த வழியாகப் போய், சிவகங்கைக்கு அடுத்துள்ள **திருக்கானப்பேர்** என்ற ஸ்தலமாகிய காளையார் கோயிலையும் தரிசித்துக்கொண்டு, கிழக்கே சென்று, **திருவாடானை** என்ற ஸ்தலம் வழியாக வடக்கே **திருப்புனவாயிலுக்குப்** போய், அங்கிருந்து திருப்பெருந்துறையை

அடைந்திருக்கலாம் என்று நாம் ஒரு குறிப்பு வைத்துக்கொள்வோம்.

அந்தக் காலத்திலே நெடுந்தூரம் பிரயாணம் செய்பவர்கள் இடையிடையே நீர்த்துறையும் சோலையுமுள்ள சிற்றூர்களில் தங்கி நின்று இளைப்பாறிய பின்னர்த்தான் மறுபடியும் மேலே செல்வார்கள். அத்தகைய இடங்கள் காலக்கிரமத்தில் புண்ணிய க்ஷேத்திரங்களாகி விடுவது ஆச்சரியமல்ல. அன்றியும், வாதவூரர் சிவபக்த ராகையால் திருக்கோயில்களுள்ள வழியாகப் பார்த்துத்தான் சென்றிருப்பார்.

ஆனால், அந்த வழியே நாமும் போவதென்றால் வசதியா யிருக்காது. ரெயிலும் மோட்டாரும்கண் மூடி விழிப்பதற்குள் காதவழி தூரம் போவதற்குத் தயாராயிருக்க, கால் நடையாகச் செல்லவேண்டிய நிர்ப்பந்த மெதற்கு? மதுரையிலிருந்து நான் நேரே ரெயில் மார்க்கமாக மானுமதுரை போய் அங்கிருந்து காரைக்குடியைச் சேர்ந்தேன். அங்கே ஒரு செட்டியார் நண்பர் வீட்டிலே தங்கிச் சிரமபரிகாரம் செய்து கொண்டு அறந்தாங்கிக்குப் பஸ் ஏறினேன்.

## 2

சித்திரை மாதத்துக் கடு வெயிலிலே இராமநாதபுரம் ஜில்லாவில் பஸ் பிரயாணம் எவ்வளவு 'உல்லாச'மா யிருக்குமென்று சொல்லத் தேவையில்லை! சாலையின் இரு பக்கங்களிலுமிருந்து அனல் தகதகவென்று கொட்டிக் கொண்டிருந்தது. கண் விழிக்க முடியாதவாறு தூசிப் படலம் வந்து முகத்திலே மோதியது. பகல் பன்னிரண்டு மணி. ஆனால்

அந்த நேர வண்டியைத் தவறவிட்டால் மறுநாள் வரையும் காத்திருக்க வேண்டுமாகையால் எப்படி இருந்தாலும் வேதனைகளையெல்லாம் ஒருவாறு சகித்துக்கொண்டு பிரயாணத்தை நடத்தவேண்டித்தான் இருந்தது.

அறந்தாங்கியில் இறங்கியவுடன் ஏதாவது மோட்டார் பஸ் அகப்படுமென்றுதான் நம்பிப் போனேன். ஆனால் அங்கிருந்து ஆவுடையார் கோயிலுக்கு ஒரே ஒரு பஸ்தான் போவது வழக்கமாம். அதுவும் காலையிலேயே போய்விட்டதென்ற ஏமாற்றமான சமாசாரம் கிடைத்தது. நேரமோ எக்கச்சக்கமான வேளை. இருட்டிவிட்டால் அறந்தாங்கியில் தங்குவதற்கு நல்ல வசதி கிடைக்குமோ என்பது சந்தேகம். இரண்டொரு சிறு காபி ஹோட்டல்களே இருந்தன. அவையும் பெயரளவில் இருந்தனவன்றி விரும்பத்தக்கன அல்ல. வாசலில் வைக்கப்பட்டிருந்த கொப்பரையையும் தண்ணீரையும் பார்த்தால் சேற்றிலிருந்து தெளிந்தெடுத்த தண்ணீராகக் காணப்பட்டது. ஆனால் இதெல்லாவற்றையும் பிரயாணத்தின்போது பார்க்கமுடியுமா? வந்த களைப்பிலே காபி ஒரு கப் வாங்கிச் சாப்பிட்டுவிட்டுச் சிறிது வேளை உட்கார்ந்திருந்தபோது இரட்டை மாட்டுக் கட்டை வண்டிக்காரன் ஒருவன் வந்து அகப்பட்டான். விசாரித்தபோது, "ஆவுடையார் கோயிலுக்குப் போயிட்டு நாளைக் காலையில் கொணாந்துவிட ரண்டரை ரூபா தரேங்களா, சாமி?" என்று கேட்டான்.

கொஞ்ச நேரம் பேரம் பேசிய பின்னர் ஒன்றரை ரூபாவுக்கு அவன் ஒப்புக் கொண்டான். கடைசி



10. பரிமேலழகர் - ஆவுடையார்கோயில் (பக்கம் 52)

யாக, ஏதோ கட்டை வண்டியாவது கிடைத்ததே என்ற திருப்தியோடு ஏறி, வைக்கோற்புரி போட்டு வைத்திருந்த 'பஞ்சணை'யில் சாய்ந்துகொண்டேன்.

வண்டியும் நகர்ந்தது.

தென்னுலிராமனுக்கு ஒரு குதிரை இருந்ததாம். "முன்னே கடிவாளம் மூன்று பேர் தொட்டிழுக்க, பின்னேயிருந்து இரண்டு பேர் தள்ள...மாதம் போம் காத வழி" அந்தக் குதிரை. அதைவிட இளைத்தவை யல்ல அறந்தாங்கிக் காளைகள்! பத்துப் பேர் முன்னின்று இழுக்கப் பின்னேயிருந்து பத்துப்பேர் தள்ளிக்கொடுத்தாலும் ஆமையைப்போல்தான் அசையப் பழக்கி வைத்திருக்கிறுர்கள் அறந்தாங்கி வண்டிக் காரர்! ஆனுல் காளைகள் தள்ளாடி நடந்தபோதிலும் வழிப் பிரயாணத்தை உல்லாசமாக்குவதற்கு ஏற்ற ஆசாமியாக 'ஏசண்டு கறுப்பையா பிள்ளை' வந்து வாய்த்தார்.

காலங்கண்ட ஒரு கிழவர். ஆனுல் வாய்ச் சாதுரி யத்திலும் தமாஷ் பேச்சிலும் ருசிகரமான கதை கள் சொல்வதிலும் இளம் மட்டங்கள் தோற்றுப் போகும்.

"இந்த ஆவுடையார் கோயிலைப்பற்றிய சங்கதி ஏதாவது உமக்குத் தெரியுமா வண்டிக்காரரே?" என்று கேட்டேன்.

"சகலகுண சம்பன்னரான, வில்லுக்கு விஜயனுன, கொடைக்குக் கர்ணனுன, படைக்கு நகுலனுன, ராஜாதிராஜ ராஜமார்த்தாண்ட ஏசண்டு கறுப்பையா பிள்ளைக்குத் தெரியாத சங்கதியும் இருக்குங்களா, சாமி? ஆவுடையார் கோயிலைப்பத்தி ஆகமமிருக்குங்க. நம்ம மாணிக்கம் குதிரை வாங்கின கதை உங்களுக்குத்

தெரியாதுங்களா, சாமி ? இந்த ஆவுடையார் கோயில் ஆத்மநாதசாமி ரொம்பப் பக்தியான தெய்வமுங்க'' என்று ஆரம்பித்தார் வண்டிக்காரர் 'ஏசண்டு கறுப் பையா பிள்ளை.'

கிளிங் கிளிங் என்றொலித்தன மாடுகளின் கழுத் தில் கிடந்த மணிகள்.

மிருதுவான வைக்கோல் மெத்தைமேல் சாய்ந்து படுத்திருந்த எனக்கு, பள்ளமும் திட்டியும் பழகின பழக்கம்போல் ஏறி விழுந்து ஊசலாடிக்கொண்டு சென்ற அந்தக் கட்டைவண்டி, தொட்டிலிற் போட் டுத் தூங்கவைப்பது போன்ற உணர்ச்சியைத் தந்தது.

வண்டிக்காரனும் தொடர்ந்து கதை அளக்க ஆரம்பித்தான்.

மாணிக்கவாசகர் சரித்திரம் இந்தக் கிராமத்திலே யாருக்கும் சாதாரணமாகத் தெரியும். ஆனால் கதை காலத்துக்குக் காலம் கர்ணபரம்பரையாகப் பலவாறு திரிபு பட்டு வழங்கி வந்திருக்கிறது. திருப்பெருந் துறையிலே மாணிக்கவாசகருக்கு குரு உபதேசம் கிடைத்தது, பின்னர் மதுரையிலே சிவபெருமான் வாதவூரருக்காக நரிகளைப் பரியாக்கியது முதலிய வரலாறுகளெல்லாம் பாட்டுப்பாட்டாக ஆவுடையார் கோயில் கிராமவாசிகள் சொல்வார்கள். காட்டில் திரிந்த நரிகளைப் பிடித்துச் சிவபெருமான் குதிரை களாக மாற்றி மதுரைக்குக் கொண்டு சென்ற வர லாற்றை நமது வண்டிக்காரக் கிழவன் வாயிலிருந்தே கேட்போம்.

**நரிக் குடியிலே நரி பிடித்து**
**வரிக் குடியிலே வரிசையாய் நிறுத்தி**

*ஒக்கூரிலே ஒக்குமைப் படுத்தி*
*சித்தக்கூரிலே சித்த ராக்கி*
*அண்டக்குடி குறுந்தூரிலே குதிரை யாக்கி*
*கன்னங் குடியிலே கண்திறந்து*
*கப்ப லூரிலே கயிறு போட்டு*
*மாறு மதுரையிலே பட்டு லகான் கட்டி*
*பார்த்திப னூரிலே பாத்தியங் கொண்டாடி*
*மதுரையிலே ஆவணி மூலத் தெருவுக்குமுன்*
*பாண்டிய னிடம் ஒப்படைத்தார் சிவபெருமான்.*

கதை எப்படியிருந்தாலும், ஊர்களின் பெயரும் அந்தப் பெயர்களுக்குத் தகுந்தாற்போல் விஷயங்கள் அமைத்துவைத்திருக்கும் ஒழுங்கும் ஆச்சரியப்படத் தக்கவிதமாக இருக்கின்றன அல்லவா? நரிக்குடி, ஒக்கூர், குறுந்தூர் என்ற கிராமங்கள் ஆவுடையார் கோயிலுக்குப் பக்கத்தில் இருக்கின்றன.

வாதவூரர் பாண்டியனைப் பிரிந்து சந்நியாசம் பெற்றவுடனே இறைவன் அவரை ஒரு மான் வயிற்றிலே பிறக்குமாறு அனுக்கிரகித்தாராம். பல அடியார் கூட்டத்தோடு இந்த மானும் சென்று திருப்பெருந்துறையில் ஆத்மநாதரை வணங்கிவந்தது. ஒருவராவது இதில் என்ன விசேஷம் இருக்கிறதென்பதைக் கவனிக்கவில்லை. கடைசியாக ஒருநாள், அடியாரெல்லாரும் ஓலமிட்டு முத்தி பெறவேண்டுமென்று இறைவனை வேண்டிக்கொண்டிருக்க அசரீரியாக ஓர் அழைப்பு வந்ததாம். "மான் நிக்க மாணிக்கவாசக நீ வா" என்ற அந்த வார்த்தைகளைக் கேட்டதும் அடியார் கூட்டத்தில் நின்ற மான் திடீரென விழுந்தது. உடல் மாத்திரம் கிடந்தது; உயிர் போய்விட்டது!

இது வண்டிக்காரன் சொன்ன கதை.

'மாணிக்க' என்ற சொல்லோடு பொருந்த (மான் நிற்க) என்று கிராமவாசிகள் எவ்வளவு ருசிகரமாகக் கதைகள் சொல்கிறார்கள்! இதைக் கேட்டவுடன் எனக்கு, மாணிக்கவாசகர் தமது திருவாசகத்தில் ஓரிடத்தில், தம்மை மாத்திரம் விட்டுவிட்டு மற்றைய அடியார்களை இறைவன் அழைத்துக்கொண்டு போன செய்தியைக் கூறிய மொழிகள் ஞாபகத்துக்கு வந்தன.

*மங்கை நாயகன் மாணிக்க வாசக*
*இங்கு நில்லென் றியம்பி மறைந்தனன்.*

வண்டிக்காரன் வாயிலே மாணிக்கவாசகர் பெயர் மிகவும் அன்னியோன்னியமாக 'மாணிக்கம்' என்று சுருக்கமாகவே வழங்குவதைக் கேட்ட எனக்கு ஆச்சரியமாயிருந்தது. இந்தப் பக்கத்துக் கிராமவாசிகள் அநேகம்பேர் தங்கள் குழந்தைகளுக்கு **மாணிக்கம்** என்ற பெயரிட் டழைக்கிறார்கள். மாணிக்கவாசகர் மீது அவர்களுக்கு அவ்வளவு பக்தி!

ஒரு பள்ளத்தில் விழுந்து குதித்தன வண்டிச் சக்கரங்கள். அரைத் தூக்கத்தோடு கிழவனின் கதைகளைக் கேட்டுக்கொண்டிருந்த நான் திடுக்கிட் டெழுந்தேன். ஒருதரம் மாடுகளை உரப்பிக்கொண்டே அவன், "சாமி, ஆவுடையார் கோயில் இதோ வந்துவிட்டது" என்று ஞாபகப்படுத்தினன். இருட்டிவிட்டது, நாங்கள் திருப்பெருந்துறையைப் போய்ச் சேரும்போது.

---

## ஏழாம் அத்தியாயம்

அந்தண னுவதுங் காட்டிவந் தாண்டாய்
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே.

பல காதவழி தூரம் கடந்து வாதவூரரும் அவரது பரிவாரத்தினரும் திருப்பெருந்துறையில் வந்து முகாம் போட்டார்கள்.

மாவும், பலாவும், கோங்கும், குருந்தும், புன்னையும், புன்கும் நிறைந்த பச்சென்ற நல்ல சோலை. மான் கூட்டங்கள் துள்ளி விளையாடின. மந்திகள் பலாப் பழங்களைத் தின்றுவிட்டு மாங்கொம்பர்களில் பாய்ந்து அவற்றின் கனிகளை உதிர்த்தன. சுகந்த மல்லிகைப் புதர்களில் வண்டுகள் பறந்து மொய்த்து ரீங்காரம் செய்ய, புன்னை மரங்களில் சிறை கோதும் குயில்கள் இருந்து கூவி மகிழ்ந்தன. கிள்ளைகளும் நாகணவாய்ப் புட்களும் போட்டி போட்டுப் பாடின. இளவெயில் விசிறி எறிந்து, பரந்து, முதிர்ந்து கொண்டு வரும் அந்த வேனிற் பொழுதிலே, ' நான் மாத்திரம் புறம் போந்திருப்பதா ?' என்று சொல்லி விரைந்து ஆர்ப்பரித்துக்கொண்டு வருவதுபோல், தென்றலும் வந்து குதித்தது.

மதுரையி லிருந்து பல நாட் பிரயாணக் களைப் போடு வந்த கூட்டத்தாருக்கு இந்த ரமணீயமான சோலையையும் அதன் சூழலையும் விட்டுப் போக மனம் வருமா ? இங்கேயே தங்கிவிட்டு, மறுநாட் காலைப் பொழுதில் கடற்கரைத் துறைமுகத்தை நோக்கிப் பிரயாணப்படலாம் என்று தீர்மானித்து வாதவூர் முனிவரும் மற்றவர்களும் இளைப்பாறினர்.

மாலை வேளையாயிற்று. எங்கிருந்தோ வீசிய இளங் காற்ருேடு கலந்து சாமவேதம் போன்று மனத்தை வசீகரிக்கும் இனிய ஓசை ஒன்று ஒலித்தது. சற்று நேரம் காதுகொடுத்துக் கேட்ட வாதவூரர், இந்த நிர்மானுஷ்யமான சோலைக் காட்டிலே இத்தகைய செவ்விய ஒலி கேட்பதற்குக் காரணமென்ன? என்று யோசித்துச் சேவகன் ஒருவனை அனுப்பி ஆராய்ந்து வருமாறு பணித்தார். சிறிது வேளையில் திரும்பிவந்த சேவகன், "ஸ்வாமி, ஒரு கல்லெறி தூரத்திலே யாரோ ஒரு சடை வளர்த்த சந்நியாசி இருக்கிருர். அவரைச் சுற்றிப் பல சீடப் பிள்ளைகள் உட்கார்ந்து எதையோ பாடிக் கொண்டிருக்கிருர்கள்" என்ருன்.

வாதவூரர் உள்ளம் ஒரு தரம் குளிர்ந்தது. உடல் சிலிர்த்தது. மயிர்க்கூச்செறியத் தொடங்கியது.

யார் அந்தக் குரு? யார் அந்த அடியார்கள்?

முன்னை வினைப்பயன் வேலைசெய்யத் தொடங்கியது. ஏதோ ஓர் ஆச்சரிய சக்தியினுல் தள்ளப்பட்டு வாதவூரர் அந்தஅற்புத ஓசை வந்த திக்கிலே சென்ருர். நன்ருகச் சடைத்து வளர்ந்த ஒரு குருந்த விருக்ஷத்தினடியிலே சடாமகுடமும், ருத்திராட்ச பூஷிதமும், விபூதி தரித்த மேனியும், கையில் ஏடுமாக உட்கார்ந்திருக்கிருர் ஒரு தபோதனர். அவரைச் சூழ்ந்து அடியார்கள் பலர் இமைகொட்டாதிருந்து பாடங் கேட்கிருர்கள்.

எங்கே ஒரு குரு எனக்குக் கிடைப்பார், எங்கே எனது அஞ்ஞான இருளை நீக்க ஒரு ஞான ஒளி கிடைக்கும் என்று மதுரையில் புலவர் கூட்டத்திலும்,

அறநிலைப் பள்ளிகளிலும் தேடியலைந்த வாதவூர் முனிவருக்கு இந்தக்காட்சி எவ்வளவு இன்பத்தைக் கொடுத்திருக்கும்! தமது சந்தேக உள்ளத்தில் ஒரு தெளிவை உண்டாக்க இந்த ஊர் பெயர் தெரியாத குருஸ்வாமியால் ஒரு வேளை முடியுமா என்ற எண்ணத்தோடு பக்கத்தில் சென்று உபசாரத்துடன் வணங்கி, "ஸ்வாமி, ஆருமற்ற இந்தச் சோலையில் வந்து தங்கியிருக்கும் தாங்கள் யாரோ? தங்களைப் பார்த்தால் மிகவும் வயோதிகராகக் காணப்படுகிறீர்கள். நெடுந்தூரம் நடந்து வந்தீர்களா?" என்று கேட்டார்.

தபோதனர் சொன்னார்: "நாங்கள் வடக்கேயிருந்து வருகிறோம். நாடோடிகள். பிச்சை எடுத்து உண்பதும், ஓய்ந்த நேரத்தில் இப்படி ஏதாவது வேத பாராயணம் செய்வதும் எங்கள் தொழிலாகப் போய் கொண்டிருக்கிறது."

கிழவரின் கையி லிருந்த புத்தகம் ஒன்று வாத ஊரரின் கவனத்தை இழுத்தது. "ஸ்வாமி, அதோ தங்கள் கையிலிருக்கும் அந்த நூல் என்ன என்று அறியலாமோ?" என்று கேட்டார்.

ஆசிரியர் முகத்தில் ஒரு புன்னகை தவழ்ந்தது. வாதவூரரின் அறிவு வேட்கையை அவர் உணர்ந்து கொண்டு, "இது சிவஞானபோதம்" என்றார்.

"ஸ்வாமி, அதன் பொருள் எனக்கு விளங்கவில்லையே. சிவம் என்றால் என்ன, ஞானம் என்றால் என்ன, போதம் என்றால் என்ன?"

"அன்பா, சிவம் என்பது ஒரு தனிப் பொருள்; தனக்கு நிகரில்லாத சத்தியப்பொருள். ஞானம் என்பது அப்பொருளை அறிந்துகொள்ளும் மார்க்கம், போதம் என்பது, அறிந்தபின் சரியான முறையில்

அதனை உணர்ந்துகொள்ளுதல். ஆன்மாவானது தனது பூர்வ கன்ம பலனுக்குத் தக்க விதமாகப் பிறவிகள் எடுத்து வரும்போது, சிவம் தனது ஞான சக்தியைக் கொண்டு நல்லறிவைப் போதிக்கும். அந்த அறிவும் பக்குவம் அடைந்த காலத்தில் அச் சிவமே குரு வடிவாக எழுந்தருளி இதுவரை காலமும் அவமே கழிந்துவிட்டதாகையால் இனி மேலாவது நன்னெறிக்கட் செல், என்றுசொல்லி ஆட்கொள்ளும்.''

இங்ஙனம் சிவஞானபோதத்தின் உட்பொருளை விளக்கிய குருஸ்வாமிகள் வாதவூரரைப் பார்த்து, "மெய்யன்பனே, உன்னுடைய பக்தியையும் ஞான வேட்கையும் அறிந்து உன்னை அடிமைகொள்ளவே நான் இங்கு குருமூர்த்தியாக வந்திருக்கிறேன். பிறவிப் பிணியில் இனிமேலும் கிடந்து வருந்தாது உன்னை ரக்ஷிக்க வந்துள்ளேன். உயிர்களெல்லாம் தத்தம் பூர்வ கன்ம வினைக்குத் தக்கவிதமாகப் பிறந்திறந்து வருந்துகின்றன. உனது பிறப்பு வட்டமும் இப் பிறவியோடு முடிவடைகின்றது. ஆகவ, பூர்வ புண்ணிய வசத்தால் உனக்கு இனி எவ்விதச் சுகக் குறைவும் இல்லை. நீ சிலகாலம் இங்கேயே இருந்து ஞானோபதேசம் பெற்றுக்கொள்வாயாக" என்று அன்புடன் மொழிந்தார்.

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் வாதவூரர் மெய்ம்மறந்து, குருமூர்த்தியின் பாதங்களில் வீழ்ந்து வணங்கி ஆனந்தக் கண்ணீராற் கழுவினார்.

**நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க**
**இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்**
**[வாழ்க !**



12. வைகையாற்றங்கரை, மதுரை. (பக்கம் 60.)

என்று பெருமிதங் கொண்டு மெய் சிலிர்ப்ப வாய் குழறப் பாடினார்.

தம்மை மறந்தார்; தம் பதவியை மறந்தார்; தம் கடமையையும் மறந்தார்.

ஜீவன் முக்தரானார்.

ஊசலாடும் காயத்தினுள் உயிரும் உணர்வும் வசித்தபோதிலும் அவை தொழிற்படவில்லை. சகல யோக காரணமாகிய சிவத்துடன் சென்று ஐக்கியப் பட்ட சாயுச்சியமாகிய பக்குவ நிலையை அடைந்தார் வாதவூரர்.

குருமூர்த்திகள் மனமகிழ்ந்து, "உன்னை ஆட் கொண்டேன். இனி அஞ்சவேண்டாம். உன் வார்த்தை கள் யாவும் மணி வார்த்தைகளாயிருப்பதனால் உன்னை நான் மாணிக்கவாசகன் என்றழைக்கின்றேன்" என்று கடாட்சித்தருளினார்.

மாணிக்கவாசகரும் மனம் குளிர்ந்து குருவின் உபதேசங்களைக் கேட்டுக்கொண்டு அங்கேதானே இருந்துவிட்டார்.

---

## எட்டாம் அத்தியாயம்

*ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற்கு ஆயிரம்*
*திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ.*

திருப்பெருந்துறை ஆத்மநாதர் ஆலயத்துள் பிர வேசிக்கும்போதே இனிய சுருதியோடு கூடிய திவ் வியமான திருவாசக படனத்தைக் கேட்டோம். மோகன ராகத்துக்கு ஒரு தனிக் கவர்ச்சி இருக்கிறது. அதுவும் உருக்கமான திருவாசகப் பொருளோடு

சேர்ந்துவிட்டால் பேசவும் வேண்டுமா? அவ்வினிய கானம் மாணிக்கவாசகரின் பரவச நிலையிலேயே நம்மையும் கொண்டுபோய்ச் சேர்த்துவிடுகிறது.

மற்றெந்த ஸ்தலத்திலும் இல்லாத விசேஷமாகத் திருப்பெருந்துறையில் மாணிக்கவாசகருக்குத்தான் பிரத்தியேகப் பெருமை கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆராதனைகளிற் பெரும்பாலானவை மாணிக்க வாசகருக்கே நடைபெறுகின்றன. திருவாசக பாரா யணத்தை எந்நேரமும் இக் கோயிலில் கேட்கலாம். மூலஸ்தானத்திலே லிங்கமாவது வேறு எந்தத் திரு வுருவமாவது கிடையாது. இங்கே சுவாமியும் தேவி யும் அரூபமாய் எழுந்தருளி யிருப்பதாக ஐதிஹ்யம். அதற்காக இரண்டு பீடங்கள் மாத்திரம் வைக்கப்பட் டிருக்கின்றன. இப் பீடங்களுக்கே தூப தீப நைவேத் தியங்கள் யாவும் நடைபெறுகின்றன.

கோயிலில் எங்கே பார்த்தாலும் மாணிக்கவாசக ரின் உருவங்கள் பல வைக்கப்பட்டிருப்பதைக் காண லாம். மற்றைய ஆலயங்களிலே, நாம் உள்ளே போகும்போது நந்தி தேவரையும், வெளியே வரும் போது சண்டேசுவரரையும் தரிசிப்பது வழக்கம். இவர்களே ஆலயக் காவலாளர்கள். ஆனால் திருப் பெருந்துறையில் இந்தத் தெய்வங்களுக்கே இட மில்லை. மாணிக்கவாசகர்தாம் வாயில் காப்பாளராக வும் இருக்கிறார்.

மாணிக்கவாசகர் சந்நிதிதான் இக்கோயிலில் விசேஷமானது. ஓர் அழகான பெரிய திருவுருவம் இருக்கிறது. மேற்குப் பார்த்த சந்நிதி; இதற்கு ஆகம விதிப்படி ஆதி சைவர்கள் பூஜை செய்து வருகிறார் கள். ஆனால், மூலஸ்தானத்துக்கும் அம்மன் சந்நிதிக்

கும் வைதிகப் பிராமணர்களால் பூஜை நடைபெறு கிறது. இவர்கள், தில்லையில் மூவாயிரவர்கள் பரம் பரையைப்போல, இங்கே முந்நூற்றுவர் பரம்பரை யில் வந்தவர்களாகச் சொல்லிக் கொள்ளுகின்றனர்.

திருப்பெருந்துறைச் சுவாமியின் பெயர் ஆத்ம நாதர்; அம்மன் யோகாம்பிகை. மாணிக்கவாசகருக்கு இறைவன் ஆசாரிய வடிவினராக வந்து உபதேசித் ததைக் காட்டக் குருமூர்த்தி என்ற சுவாமி சந்நிதி (தக்ஷிணாமூர்த்தி) தனியாக இருக்கிறது. அதனருகே குருந்த மரம் ஒன்றும் நிற்கிறது. இதனடியில்தான் மாணிக்கவாசகர் திருவடி தீக்ஷை பெற்றார் என்பதுஓர் ஐதிஹ்யம். தக்ஷிணாமூர்த்தி வாசலில், பேயால் பைசா சத்தால் பீடிக்கப் பட்டவர்கள் வந்து பழி கிடந்து தங்கள் நோயை அகற்றிச் செல்வது வழக்கமாக இருக்கிறது.

மாணிக்கவாசகர் சந்நிதிக்கு எதிரே யோகாம் பிகையின் சந்நிதி கிழக்கு நோக்கி இருக்கிறது. யோகத்தில் இருக்கும் அம்மையாகையால் சுற்றிவரச் சலாகை யடித்த சுவர் மூடியிருக்கிறது. தீபாராதனை ஆகும்போது மாத்திரம் வெளிச்சம் சிறிய துவாரங் களுக்கூடாகத் தெரியும். மாணிக்கவாசகருக்கும் அம்மனுக்கும் ஒரே வேளையில் ஒரே விதமாகத் தீபா ராதனை நடைபெறுகிறது.

கோயிலின் தென்புறத்திலுள்ள அக்கினி தீர்த்தம் என்ற தெப்பக் குளம் மிகவும் விசேஷம் பெற்றதாகக் கூறுவர். மாணிக்கவாசகரை விட்டு, அவருடன் கூடவிருந்த அடியார்கள் முத்தியடைந்தபோது இந்தக் குளத்திலே கிளம்பிய அக்கினிப் பிழம்பிலேதான் மூழ்கி மறைந்தார்கள் என்று சொல்வர். அதனு

லேயே இது 'அக்கினி தீர்த்தம்' என்று வழங்குகின்றது.

ஆவுடையார்கோயிலின் விசேஷம் அதன் சிற்பத்தில் இருக்கிறது. சுவாமி சந்நிதிக்கு முன்னால் இருக்கும் கனகசபை என்ற மண்டபம் முழுவதும் கொத்துக் கொத்தாக மிகவும் அருமையான சிற்ப உருவங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. சிவபெருமான் மாணிக்கவாசகருக்காக நரிகளைப் பரிகளாக்கித் தாமும் குதிரைச் சேவக ராஞர் என்பதைச் சித்திரிக்கும் ஓர் அழகான பரிமேலழகர் சிற்பம் இருக்கிறது. இதன் பெருமையை வேறெங்கும் காணமுடியாது. இது இருக்கும் மண்டபம் 'குதிரைச்சுவாமி மண்டபம்' என்று வழங்குகிறது. இதைவிட, குறவன் குறத்தி வடிவங்கள், பிற ஆலயங்களிற்போல, மிக அழகுபட இரு தூண்களிற் செதுக்கப்பட்டிருக்கின்றன. குறத்தியின் கண்களிற் காணப்படும் 'வலைவீசும்' பார்வையும், அவள் உடலின் நெளிப்பும், கையிலிருக்கும் கூடையின் இழைப்பும் மிக ஆச்சரியப்படத்தக்க கலை நுட்பம் வாய்ந்தன. மதுரைக் கிருஷ்ண தேவராயரும் தேவியும் இங்கே சிலா ரூபமாக அமைக்கப் பட்டிருப்பதால் இவ்வாலயம் அவர்கள் காலத்திலே புதுப்பித்துக் கட்டப்பெற்றதென்று ஊகிக்கலாம்.

இவற்றை யெல்லாம் தவிர, திருப்பெருந்துறையிலுள்ள 'கொடுங்கை' என்ற எழுதகந்தான் மிகவும் பிரசித்திபெற்ற சிற்ப அமைதி. தனிக் கல்லிலேயே உத்தரங்களும் சலாகைகளும் மேற்கூரையும் சேர்ந்த மாதிரியாகப் பொளிந்து அமைக்கப்பட்டிருப்பது வியக்கத் தக்கது. சங்கிலித் தோரணங்களும், தூண்களும், விதானங்களும் கல்லிலே மிக

அழகாகச் செதுக்கப் பட்டிருக்கின்றன. அநேகமாக யாவும் கேரள சிற்ப முறையிலேயே காணப்படுகின்றன.

## 2

ஆவுடையார் கோயிலை மேற்பார்வை பார்க்கும திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த சின்னச் சாமியார்—மடாதிபதியாகிய தம்பிரானின் அடியார்க்கடியார்—மிக உபசாரமாக அன்றிரவு எனக்கு வேண்டிய வசதிகள் யாவும் செய்து தந்து சாப்பாட்டுக்கும் ஒழுங்கு செய்துவைத்தார். நல்ல சாதமும் அறுசுவையோடு கூடிய கறி வகைகளும் சாப்பிட்ட பின்னர், கோயிலிலிருந்து பிரசாதம் வந்து சேர்ந்தது. மற்றைய கோயிற் பிரசாத மென்றால் வெறும் பச்சையரிசிப் பட்டைச் சாதம் அல்லது சர்க்கரைச் சாதமாயிருக்கும். ஆனால் இங்கே அப்படியல்ல. நல்ல புழுங்கலரிசிச் சாதம், அரைக்கீரைச் சுண்டல், நாவில் நீர் ஊறவைக்கும் பாகற்காய்ப் புளிக் கறி, அப்பம், பிட்டு, வடை இவை யெல்லாம் பரிமாறப்பட்டன. இவைதாம் ஆவுடையார் கோயில் ஆத்மநாத சுவாமிக்கு நித்தியமும் நிவேதிக்கப்படுகின்றன. உப்புப் புளி இல்லாமல் மற்றைய சுவாமிகள் சாப்பிடுவதுபோல் ஆவுடையார் கோயிற் சுவாமி சாப்பிடாமல், நல்ல சம்பூரண போஜனந்தான் சாப்பிட்டுச் சுகித்திருக்கிறார்!

இன்னம் ஒரு விசேஷ மென்ன வென்றால், கோயில் உக்கிராண அறையில் எத்தனையோ வருஷ காலமாக ஒரே நெருப்புத்தான் இன்னும் எரிந்து கொண்டிருக்கிறதாம். புதிதாக ஒரு நாளும் தீ மூட்டப்

படுவதில்லையாம். கோயில் ஆரம்பித்த நாளில் அடுப்பில் இடப்பட்ட நெருப்பே இன்னும் எரிந்து கொண்டிருக்கிறது: நித்தியமும் எத்தனையோ படி யரிசி சமைத்துக் கறி வகைகளுடன் முந்நூற்றுவர் பிராமணர்களுக்கும் மற்றும் கோயில் சிப்பந்திகளுக்கும் பரிமாறப்படுகிறது. கோயிலுக்கு ஏராளமான மானியம் இருக்கிறது.

## 3

திருப்பெருந்துறையில் குதிரை வாங்க வந்த மந்திரி திருவாதவூரர் என்னவானார்?

நாட்கள் சென்றன; வாரங்களும் கடந்து மாதங்களாயின. ஆனால் மாணிக்கவாசகர் அசையவில்லை. குருநாதரின் பாத சேவையிலேயே ஈடுபட்டிருந்தார்.

ஒரு நாள், பாண்டியன் சேவகன் ஒருவன் வந்து மாணிக்கவாசகரிடம் ஓர் ஓலையை நீட்டினான். அதை அவர் வாங்கிப் படித்துப் பார்த்தார்.

> "தென்னவன் எழுதும் ஓலை. தென்னவன் பிரமராயரே காண்க. கிழக்குத் துறையில் குதிரைகள் வாங்கிவருமாறு கொண்டு சென்ற பொருளையெல்லாம் நீர் தொலைத்துவிட்டு, சந்நியாசி வேஷம் போட்டுக்கொண்டிருப்பதாகக் கேள்விப்படுகிறேன். உமது கடமையில் தவறியது மன்றி, ராஜ பொக்கிஷத்தைத் துர்விநியோகம் செய்த குற்றத்துக்கும் ஆளாகிவிட்டீர். ஆகையால், இவ்வோலை கண்டதும் உடனே புறப்பட்டு வரவேண்டியது. இது பாண்டியன் அரிமர்த்தனன் கட்டளை"

என்றிருந்தது. இந்த ஓலையைக் கண்ட பின்னர்த் தான் மாணிக்கவாசகர் தமது நிலையை உணர்ந்தார். ஆம், குதிரை வாங்குவதாக அரசனுக்கு வாக்களித்து

விட்டு வந்து எத்தனையோ நாட்களாகிவிட்டன. அரசனுடைய பொருளெல்லாம் குருநாதர் சேவையில் செலவாகி விட்டது. இப்போது திரும்பிப் போய் மன்னனிடம் என்ன பதில் கூறுவது? அரசனோ ஏற்கனவே கோபங்கொண்டிருக்கிறான். சமாதானம் சொல்லிக் கேட்கப் போவதில்லை. ஆகையால் எல்லாவற்றிற்கும் குருநாதரையே நாடவேண்டுமென்று தீர்மானித்தவராய், நல்ல சந்தர்ப்பமாகப் பார்த்து, சகல விவரங்களையும் சொல்லி, மன்னனுக்குக் குதிரைகள் எப்படியாவது கொண்டுபோய்ச் சேர்க்க வேண்டுமே, அதற்கென்ன செய்வதென்று வருந்தினார்.

அப்பொழுது குருநாதர் புன்னகைசெய்து, தமது மெய்யன்பரைப் பார்த்து, "மாணிக்கவாசக, நீ சென்று பாண்டியனிடம் அதிவிரைவில், வருகிற ஆவணிமூல தினத்தன்று, உயர்ந்த ஜாதிக் குதிரைகள் மதுரை வந்துசேரும் எனச் சொல். சிவசேவையில் செலவிட்ட பொருள் ஒருபோதும் வீண்போகாது. அதற்காக வருந்த வேண்டாம். உனது திருப்பணி எனக்காகச் செய்யப்பட்டதல்ல. திருப்பெருந்துறைக்குச் செய்யப்பட்டது. இந்த க்ஷேத்திரமே உனது பெயரை என்றென்றைக்கும் ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கும். அரிமர்த்தன பாண்டியனுக்கும் அதனால் புண்ணியம் உண்டு. அவன் இதனை இப்பொழுது உணரமாட்டான்" என்று சமாதானம் சொல்லி அனுப்பினார். மாணிக்கவாசகரும் உவகையோடு, தம் குருநாதன்மீது வைத்திருந்த பக்தியாலும் நம்பிக்கையாலும் தைரியம் கொண்டு புறப்பட்டார்.

மதுரையிலிருந்து செல்லும்போது கண்ட ஆடையாபரணங்களும் அலங்காரங்களும் திரும்பிவரும் பிரயாணத்தில் காணப்படவில்லை. உலக விசாரங்களைத் துறந்த தவயோகியாகப் பாண்டியன் சமுகத்தில் வந்துசேர்ந்தார் வாதவூரர்.

---

## ஒன்பதாம் அத்தியாம்

*நரியைக் குதிரைப் பரியாக்கி*
*ஞால மெல்லாம் நிகழ்வித்துப்*
*பெரிய தென்னன் மதுரையெல்லாம்*
*பிச்ச தேற்றும் பெருந்துறையாய்.*

ஏற்கனவே அரிமர்த்தனன் உணர்ச்சியையும் சிந்தையையும் கலக்கி வைத்திருந்தார்கள், பொறுமை கொண்ட உத்தியோகஸ்தர்கள். மாணிக்கவாசகர் வந்து சேர்ந்ததும் அவருடைய கோலம் மன்னனின் சந்தேகத்தை வலியுறுத்தியது. மீற்றும் அதிகரித்தது. அலங்கார புருஷனாகச் சென்ற மந்திரி ஆண்டியாகத் திரும்பினால் அரசன் சந்தேகிக்கத்தானே செய்வான்?

அரச சபை கூடியது. விசாரணையும் ஆரம்பமானது. முதல் மந்திரியாகிய தென்னவன் பிரமராயரை விசாரித்து வழக்குத் தீர்க்க யாருளர்? அரசன் கேட்ட வினாக்களுக் கெல்லாம் தகுந்த பதிலளித்து, இன்னும் பத்துத் தினங்களுக்குள்ளே குதிரைகள் வந்துசேரும் என்று மாணிக்கவாசகர் உறுதிமொழி கூறினார்.

பத்துத் தினங்களில் எட்டு நாட்கள் ஓடிக் கழிந்தன. இதற்குள் மற்றைய மந்திரிகளில் ஒருவன் அரசனிடம் போய், "அரசே, திருவாதவூரர் குதிரைகள் வந்து சேருமென்று வாக்குக் கொடுத்தது சுத்தப்



13. செம்மனச் செல்வி மண்டபம் - மதுரை (பக்கம் 62)

பொய். நாங்கள் திருப்பெருந்துறைக்கு ஒற்றர்களை அனுப்பி விசாரித்துப் பார்த்ததில் அங்கு ஒரு குதிரை யாவது காணப்படவில்லை. திருப்பெருந்துறையி லிருந்து இங்கு வந்து சேருவதற்குக் குறைந்தது ஒரு வாரமாவது செல்லும். இன்னும் இரண்டே நாட்களில் தமது வாக்குறுதியை எங்ஙனம் நிறைவேற்றப் போகி ருர் பிரமராயர்?" என்று சூழ்ந்தான். அரசன் தன் ரகசிய ஒற்றனைச் சில காதவழி தூரத்துக்கு அனுப்பி உண்மை அதுதான் என்று கண்டதும், மாணிக்கவாசகரை அழைத்து, வைகைக் கரையில் சுடுமணலில் நிறுத்திவைத்துத் தண்டித்தான்.

'ஆத்திரக்காரனுக்கு புத்தி மட்டு' என்று சொல்லுவார்கள். திருவாதவூரர் சொன்ன கெடு இன்னும் முடியவில்லை. அதற்குள் அவர் நிச்சயமாகத் தமது வாக்குறுதியை நிறைவேற்றுவார் என்று பாண் டியன் உணரவில்லை. ஏற்கனவே சந்தேகம் நிறைந்த மனத்துக்கு எவ்வித சமாதானமும் உண்டாகாது.

அந்த வேளையில்தான் திருவாதவூரர் தாம் சொன்ன தவணையை எடுத்துக்கூறி, அதுவரையும் பொறுத்திருக்குமாறு அரசனை வேண்டி நின்ருர். முதல் அத்தியாயத்தில் நாம் சொன்ன காட்சி இது தான். மாணிக்கவாசகர் விடுதலைபெற்றுச் சென்ருர்.

## 2

சொல்லப்பட்ட ஆவணி மூல தினமும் வந்து சேர்ந்தது.

மதுரைமா நகரின் பக்கத்திலே உள்ள பரந்த வெளியிலே நூற்றுக்கணக்கான உயர்ந்த ஜாதி அரபிக் குதிரைகள் மிடுக்குடன் நின்று கர்ஜித்தன. மாலைச்

சூரியனின் பொன்னிறக் கிரணங்கள் அந்தப் பரி களின் மேனியிற் பட்டு மின்னித் தெறித்தன. போர் வீரரையொத்த சாரதிகள் அந்தக் குதிரைகள்மீது ஆரோகணித்திருந்தனர். இவர்களுக்கெல்லாம் தலை வன்போன்ற ஒருவன் அலங்காரமான தோற்றத் துடன் தனக்கென விசேஷமாகத் தெரிந்தெடுத்த ஒரு பரியின் முதுகில் உட்கார்ந்து, சுற்றிச் சுற்றி மேற் பார்வை போட்டுக்கொண்டு வட்டமிட்டு வந்தான். அவனுடைய கம்பீரமான தோற்றமும் பெருமிதம் நிறைந்த பார்வையும் யாரையும் லட்சியம் செய்ய மாட்டாத காட்சியைத் தந்தன.

பாண்டியன் அரிமர்த்தனன் வந்தான். ஒருதரம் குதிரைக் கூட்டத்தைச் சுற்றிப் பார்த்தான். அவை களின் கர்ச்சனை வானைப் பிளந்தது. அசுவ லட்சணங் களில் மிகவும் பாண்டித்தியம் பெற்ற மந்திரி வாத ஊரர் அரசன் கூடவே சென்று ஒவ்வொரு குதிரையின் விசேஷத்தையும் சொல்லிக்கொண்டு வந்தார். அரசன் மட்டில்லாத ஆனந்தமடைந்து குதிரைச் சேவகர் தலைவனுக்கு ஓர் உத்தரீயம் வழங் கியபோது, அந்தச் சாரதி குதிரை மீதிருந்தபடியே அரசனென்றும் மதியாது தன் கைத்தடியை நீட்டி அதன்மேல் அந்த உத்தரீயத்தை ஏற்றான். இது பாண்டிய மன்னனுக்கு அளவற்ற ஆத்திரத்தைத் தந்தது. இவ்வளவு கேவலமாகவும் அலட்சியமாக வும் மரியாதையின்றி நடந்துகொள்ளும் ஆசாமி யார்? அந்நிய நாட்டவனாயிருந்தபோதும் அரசர் சமுகத்தில் நடந்துகொள்ளத் தெரியாத கர்வியாயிருக் கிறானே யென்று மன்னன் சீற்றங்கொண்டான். ஆனால் மந்திரி பிரமராயர், "இது அந்த அந்நிய

நாட்டு வணிகரின் மரியாதையைக் குறிக்கும் வழக்கம்" என்று சொல்லிச் சமாளித்துவிட்டார்.

குதிரைகளெல்லாம் அங்கீகரிக்கப்பட்டன. வாதவூரரின் திறமையைப் பாராட்டினான் மன்னன். பொழுதும் அஸ்தமித்தது.

அடியார்க் கடியவரான பொன்னம்பலவாணரே - மாணிக்கவாசகருக்குக் குருந்த மரத்தடியில் சிவதீக்ஷையளித்த குருநாதரே - தமது வாக்கை நிறைவேற்ற வேண்டியும் தம் அடியாரின் குறையைத் தீர்க்கவேண்டியும் ஆவணி மூல தினத்தன்று மதுரைமா நகரில் குதிரை கொண்டுவந்தார். காட்டில் திரிந்த நரிகளையெல்லாம் பிடித்துப் பரிகளாக்கிப் பூத கணங்களையெல்லாம் வருவித்துப் பாகர்களாக அமர்த்திக்கொண்டு, தம் பக்தனை ஆட்கொள்ள வேண்டியே இந்த மாயக்கோலங் கொண்டார். ஆனால் அன்றிரவே, தமது கடமை முடிந்துவிட்டதென்று கண்டதும் அந்த லீலா விநோதர் மறைந்து விட்டார். பூத கணங்களும் மறைந்தன. இரவோடு இரவாகக் காட்டு நரிகளும் மாயை நீங்கி, ஊரடங்கித் துயில்கொள்ளும் சமயம் பார்த்துச் சுய ரூபங் கொண்டு ஊளையிடத் தொடங்கின! அது மாத்திரமா? அரசன் லாயத்திற் கட்டப்பட்டிருந்த நிஜக் குதிரைகளையே அந்த நரிகள் கடித்துத் தொந்தரவு செய்ய ஆரம்பித்தன.

பொழுது விடிவதற்கு முன்னரே இந்த நரிகளின் அட்டகாசம் மதுரைநகர் முழுவதையும் எழுப்பி விட்டது. ஏற்கனவே சூழ்ச்சி செய்த மந்திரிமார், மாணிக்கவாசகர்தாம் இத்தகைய சூழ்ச்சி செய்து மந்திர தந்திரத்தால் மன்னனை ஏமாற்றிவிட்

டார் என்று பாண்டியனிடம் முறையிட்டனர். பாண்டியனும் உடனே ஆத்திரங் கொண்டவனாய் மந்திரி பிரமராயரைச் சிறையிருத்தினான்.

---

## பத்தாம் அத்தியாயம்

கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண் டக்கோவால் மொத்துண்டு
புண்சுமந்த திருமேனி பாடுதுங்கா ணம்மானாய்.

இந்தக் குதிரையிட்ட செய்தி சிவபெருமானது அறுபத்து நான்கு திருவிளையாடல்களில் ஒன்றாகக் கூறப்பட்டுள்ளது. மதுரைக் கோயிலின் உட்பிராகாரத்தில் குதிரையிட்ட மண்டபம் என்ற ஒரு சிறு கட்டிடம் காணப்படுகிறது. அதன் மேல்தட்டில் சித்திரிக்கப்பட்டிருக்கும் சில பழைய சித்திரங்களிலும் நரியைக் குதிரை செய்த திருவிளையாடல் காணப்படுகிறது. பொற்றாமரை வாவிக்கு எதிராகவுள்ள சுவரில் தீட்டப்பட்டிருக்கும் பழைய வர்ணச் சித்திரங்களிலும் இத் திருவிளையாடலைக் காணலாம். சிதம்பர க்ஷேத்திரத்தில் கனகசபையைச் சுற்றியுள்ள மண்டபத்தின் கீழ்ப் பகுதிகளில் சில மாடங்களிலும் வாதவூரருக்கு உபதேசித்த காட்சி, நரியைக் குதிரை செய்த காட்சி, பிட்டுக்கு மண் சுமந்த கதை முதலியன கல்லில் செதுக்கப்பட் டிருக்கின்றன.

* * * * *

மாணிக்கவாசகரின் மந்திரிப் பதவி நீங்கும் காலம் வந்துவிட்டது. சிறையிலிருந்தபடியே அவர் தம் வாழ்வை நினைந்து வருந்தலானார். திருப்பெருந்

துறையிலே குருந்த மரத்தடியிற் கண்ட குரு நாதனையே மனத்தால் தியானித்துப் பூஜித்தார்.

யானேதும் பிறப்பஞ்சேன்
இறப்பதனுக் கென்கடவேன்
வானேயும் பெறில்வேண்டேன்
மண்ணாள்வான் மதித்துமிரேன்
தேனேயும் மலர்க்கொன்றைச்
சிவனேயெம் பெருமானெம்
மானேயுன் அருள்பெறுநாள்
என்றென்றே வருந்துவனே.

இந்த வருத்தத்தை அறிந்த இறைவனே பாண்டியனைத் தண்டிக்கக் கருதி மதுரையில் வையையாற்றைப் பெருக்கெடுத்தோடச் செய்தார்.

இதுவும் ஒரு பெரிய கதை. வையைப் பெருக்கம் மதுரைமா நகரையே அழித்துவிடத் தக்க பிரவாகமாகப் பரவியது. குடிகளெல்லாரும் கதி கலங்கிப் போய் அல்லோல கல்லோல முற்றனர். முன்னொரு காலத்தில் நிரபராதியான கோவலனைப் பாண்டியன் கொலை தீர்த்தபோது மதுரைமாநகரைத் தீயுண்ணச் செய்தாள் பத்தினித் தெய்வமாகிய கண்ணகி. அப்போது மதுரை மக்கள்,

மன்னவர் மன்னன் மதிக்குடை வாள்வேந்தன்
தென்னவன் கொற்றம் சிதைந்த திதுவென்கொல்

என்று புலம்பினர். அதுபோல, இன்று மதுரையை வையைவெள்ளம் அழிக்க முற்பட்டது. செய்வதின்னதென்றறியாது கலங்கியவனாய்ப் பாண்டியன் ஆற்று வெள்ளத்தை அணைகோல முற்பட்டு, நகரிலுள்ள ஒவ்வோர் ஆணும் பெண்ணும் தத்தம் பங்காக வெள்ளத்தில் ஒரு பகுதியை அடைக்கவேண்டுமென்று பறை

அறைவித்தான். அவர்களும் அரசன் கட்டளையை ஏற்றுத் திடு திடுவென்று கருமத்தில் இறங்கினர்.

மதுரையில் ஒரு கிழவி இருந்தாள். செம்மனச் செல்வி என்பது அவள் பெயர். ஆருமற்ற ஒருத்தி. பிட்டு விற்றுச் சீவனம் செய்பவள். அவளுடைய பங்கு மாத்திரம் அடைக்கப்படவில்லை. அவள்தான் என்ன செய்வாள்? பாவம்! நரை திரை விழுந்த பருவம். வேறு உதவியும் இடையாது. கூலிக்கு யாரையாவது பிடிக்கலாமோ வென்றால் கொடுப்பதற்குப் பணம் இல்லை. இந்த நிலைமையில்தான் 'ஆருமற்றவர்க்குத் தெய்வந் துணை' என்ற பழமொழி உண்டாகி யிருக்க வேண்டும். அந்தக் கிழவி வேறு யாரை நம்பி யிருந் தாள்? சோமசுந்தரர் கோயிலிலே போய்ப் பழி கிடந் தாள். சுவாமியைப் பார்த்து அழுது விட்டு வெளியே வரும்போது, நல்ல தைரியசாலியாகக் கையில் கூடை யும் மண்வெட்டியும் கொண்டு ஓர் ஆண்மகன் எதிர்ப் பட்டான். எதிர்ப்பட்டவனும், "அம்மா, கூலி யுண்டா?" என்று கேட்டானாயின் கிழவியின் சந் தோஷத்தைச் சொல்லி முடியுமா?

"மகனே, என்னிடம் பணம் எதுவும் இல்லை. ஆனால் உண்பதற்கு நல்ல பிட்டு மாத்திரம் தருவேன். வைகைப் பெருக்கில் என்னுடைய பங்கை அடைத்துக் கொடுப்பாயா?" என்று பரிதாபமாகக் கேட்டாள். "எனக்கும் அதுதான் தேவை. பசியோ தாங்கமுடிய வில்லை. ஏதோ கொடு; உண்டபின் ஒரு நொடியில் அடைத்துத் தருகிறேன்" என்று சொல்லி அந்தக் கூலியாள் உட்கார்ந்தான். கிழவி அவித்துக்கொடுத்த பிட்டை வயிறார உண்டுவிட்டு வைகைக் கரைக்குப் போனான்.

நல்ல வெயில். எல்லாரும் மிகுந்த சிரத்தை யோடு ஆற்று வெள்ளத்தை அணைகோலும் வேலையில் ஈடுபட்டிருக்கின்றனர். ஆனால் செம்மனச் செல்வி யின் கூலியாள் மாத்திரம் பிட்டு உண்ட களைதீர ஒரு வேங்கை மரத்தடியில் நிம்மதியாகத் தூங்கிக் கொண் டிருந்தான்!

உடனே அரசனுக்குத் தகவல் கொடுக்கப்பட் டது. எல்லாரும் தத்தம் கடமைகளைச் செய்து வரு கிறார்களா என்று தானே நேரில் நின்று கண்காணித்து வந்த அரசன் பிரம்பும் கையுமாக வந்தான். ஆனால் செம்மனச் செல்வியின் கூலியாள் சிறிதாவது கலக்கமடையாமல் குறும்பு பூத்த முகத்தோடு காட்சி யளித்தான். அரசனுக்கு வந்த கோபத்தில் பளீர் என்று தீட்டினான் அவன் முதுகில்! அவ்வளவுதான்.

தார்மேனின் றிலங்குபுய வழுதி மேலும்
தன்மனைமங் கையர்மேலும் அமைச்சர் மேலும்
ஆர்மேலும் சென்றுபொரும் சேனை மேலும்
அயன்மேலும் ஆன்மேலும் அறவோர் மேலும்
தேர்மேல்வெம் பகன்மேலும் மதியின் மேலும்
சிறந்துளவிந் திரன்மேலும் தேவர் மேலும்
பார்மேலும் கடல்மேலும் மரங்கள் மேலும்
பட்டதரன் மெய்யிலடி பட்ட போதே.

கூலியாளுக்கு அடித்த அடி மன்னவன் முதுகி லேயேபட்டது; அவன் அரண்மனையிலுள்ள மங்கையர் பட்டனர்; மந்திரிகள் நொந்தனர்; உலகத்திலுள்ள யாவர்க்குமே பட்டது. அடிபட்ட கூலியாளை மாத் திரம் அங்கே காணவில்லை!

கொந்தளித்துக் கொண்டிருந்த வெள்ளமும் மந்திரத்தாற் கட்டுண்ட பாம்புபோல் ஒடுங்கியது. என்னே விந்தை !

இத்தனையும் ஒரு கணப் பொழுதினுள்ளே நிகழ்ந்துவிட்டன. அப்பொழுதுதான் மன்னவன் உணர்ந்தான், இதுவெல்லாம் சகலலோக நாயகனின் திருவிளையாடலென்று. ஊரை வெறுத்து, பதவியை வெறுத்து, செல்வத்தையும் வெறுத்து, இறைவனடியொன்றே தஞ்சமென்று பிடித்திருந்த மெய்யடியார் ஒருவரைத் துன்புறுத்தியதற்காகவே இத்தனை கஷ்டங்களும் நேர்ந்தனவென்று பாண்டியன் உணர்ந்தான். ஆகாசவாணி ஒன்று, " பாண்டிய, கவலற்க ! மாணிக்கவாசகரின் தெய்வபக்தியை இவ்வுலகிற் காட்டி மெய்ப்பிக்கவே நாம் இத்திருவிளையாடலைப் புரிந்தோம் " என்றறைந்தது.

தெய்வ லீலைகளெல்லாம் இப்படித்தான். சிறந்த அடியாரொருவரின் மேம்பாட்டையும் தகுதியையும் உலக மக்களுக்குக் காண்பிக்க வேண்டுமானால், மறை முகமா யிருந்து தெய்வம் அவ்வடியாருக்குத் துணை புரிந்து, காட்சியளவில் அவருக்கு இன்பத்தையும் எதிரிக்குத் துன்பத்தையும் கொடுப்பதே இயல்பு.

மாணிக்கவாசகர் தகுதி யறியாது, அவர் மன நிலையை உணராது துன்புறுத்தியதற்கு வருந்திய பாண்டியன் இரந்து மன்னிப்புக் கேட்டான். வாதவூர் முனிவரும் கருணையுடன் நோக்கிவிட்டு, தாம் இனி மதுரையிலிருக்க முடியாதென்றும், திருப்பெருந்துறையில் கண்ட குருநாதரை மீண்டும் தரிசிக்க வேண்டும் என்றும் சொல்லித் தம் இறுதிப் பிரயாணத்தை ஆரம்பித்தார்.



15. திருவிடைமருதூர். (பக்கம் 76)

அரிமர்த்தனன் நெஞ்சு குமுறியது. தெய்வ உள்ளம் படைத்த ஒரு துணைவரை இழந்தோமே, என்று துன்புற்றான். ஆனால், மாணிக்கவாசகரை அவனால் தடுத்து நிறுத்திவைக்க முடியவில்லை. அவர் சித்தம் செல்லும் செலவை ஏற்றுக்கொண்டான். இரு கை கூப்பி நின்று வாயார வாழ்த்தி, கண்களில் அருவி பாய, மெய்ந்நடுங்க, அவன் மாணிக்கவாசகரைப் போற்றினான். அவரும் விடை பெற்றுக்கொண்டு ஏகினார்.

செல்வத்தை விட்டுப் பதவியை விட்டுப் புகழை விட்டு உலகப் பற்றையே விட்டு மாணிக்கவாசகர் திருப்பெருந்துறைக்கு வந்து தம் குரு மூர்த்தியை மீண்டும் தரிசித்து உள்ளம் பூரிப்படைந்தார்.

*வேண்டேன்புகழ் வேண்டேன்செல்வம்*
*வேண்டேன்மண் ணும் விண் ணும்*
*வேண்டேன்பிறப் பிறப்புச்சிவம்*
*வேண்டார்தமை நாளும்*
*தீண்டேன்சென் று சேர்ந்தேன்மன் னு*
*திருப்பெருந்துறை இறைதாள்*
*பூண்டேன்புறம் போகேன் இனிப்*
*புறம்போகலொட் டேனே*

என்று சொல்லிக் குருமூர்த்தியின் பாதங்களில் சரண் புகுந்தார் மணிவாசகர். குருமூர்த்தியும் மனம் கசிந்து, "நீ இங்கேயே இருப்பாயாக. இங்குள்ள ஒரு குளத்தில் ஒருஜோதி தோன்றும். அதில் ஏனைய சீடர்கள் மூழ்குவார்கள். ஆனால் நீ மட்டும் இன்னும் சிலகாலம் இங்குத்தானே இருந்து உன் மணிவாசகத்தை இசைத்து மக்களுக்கெல்லாம் அருளி, அதன் பின்

தென்திசைக்கண் உள்ள உத்தரகோசமங்கை என்ற ஸ்தலத்திற் சென்று அட்டமா சித்திகள் பெற்றுக் கொண்டு, மற்றும் பல ஸ்தலங்களில் போய் எம் திருக் கோலத்தைக் கண்டு இறுதியில் சிதம்பரம் சேர்ந்து, அங்கே புத்தரை வாதில் வென்று சைவத்தின் பெரு மையைத் தாபித்து அங்கேதானே எம் திருவடி சேர் வாய்" என்று கட்டளையிட்டு மறைந்தார்.

மாணிக்கவாசகர் குருந்த மரத்தடியில்தானே ஒரு தெய்வ பீடம் அமைத்துவைத்து நிம்மதியாக இருந்து வழிபாட்டுச் சில நாட்களில் பல திருவாசகப் பாடல் களைப் பாடி முடித்தார். ஒரு நாள் அக்கினி தீர்த்தத் தில் ஒரு ஜோதி தோன்றியது. பிற அடியாரெல் லாரும் அதில் குளித்து மறைந்தனர். மாணிக்கவாச கர் தாம் மாத்திரம் தனித்து விடப்பட்டதை நினைந்து வருந்தி,

*செழுக்கமலத் திரளனநின் சேவடிசேர்ந்*
*தமைந்த*
*பழுத்தமனத் தடியருடன் போயினர்யான்*
*பாவியேன்*
*புழுக்கணுடைப் புன்குரம்பைப்*
*பொல்லாக்கல்வி ஞானமிலா*
*அழுக்குமனத் தடியேன் உடையாய்உன்*
*அடைக்கலமே*

என்று பாடி அழுதார். பின்னர் இறைவன் பணித்த கட்டளையை நினைவுகொண்டு உத்தரகோசமங்கை என்ற ஸ்தலத்தை நோக்கி யாத்திரையை ஆரம்பித்தார்.

---

## பதினோராம் அத்தியாயம்

**உத்தர கோச மங்கையு ளிருந்து**
**வித்தக வேடம் காட்டிய இயல்பும்.**

ஆவுடையார் கோயில் வீதியில் வண்டிக்காரக் கிழவன் கறுப்பையாபிள்ளை அதிகாலையிலேயே வண்டியைப் பூட்டித் தயாராக வைத்திருந்தான். நான் எழுந்து சென்று, மாணிக்கவாசகருடன் கூடவிருந்த அடியார்கள் குளித்து முக்திபெற்ற அக்கினி தீர்த்தத்திலே ஸ்நானம் செய்துகொண்டு சுவாமி தரிசனமும் செய்துவிட்டு, பண்டார சந்நிதியின் பிரதிநிதியான 'சின்னச் சாமி'யாரின் அன்புகலந்த காபி பலகாரங்களையும் சாப்பிட்டபின் மறுபடியும் வண்டியில் ஏறி அறந்தாங்கிக்கு வந்தேன்.

அறந்தாங்கியிலிருந்து காரைக்குடிக்கு மீண்டும் பஸ் பிரயாணம். காரைக்குடியில் செட்டியார் நண்பர் ஒருவர் வீட்டில் விருந்துண்டபின், மறுநாளே தெற்கு நோக்கி இராமநாதபுரத்துக்குப் பிரயாணப் பட்டுவிட்டேன்.

உத்தரகோசமங்கை என்ற ஸ்தலத்துக்கு இராமநாதபுரம் மார்க்கமாகப் போவதுதான் சுலபம் என்று ஒரு நண்பர் சொல்லி வைத்திருந்தார். நானும் அதையே பின்பற்றி, ஒரு மத்தியான்னத்தில் இராமநாதபுரத்தை அடைந்தேன். கிடைக்கக் கூடிய நேரத்தைப் பிரயாணத்திலேயே கழிக்கவேண்டு, மென்று தீர்மானித்திருந்தேனாகையால், இராமநாதபுரத்தில் ஒரு ஹோட்டலிலே சிறிது வேளை தங்கி இளைப்பாறி, காபி மாத்திரம் சாப்பிட்டுவிட்டு

ஜட்கா ஒன்றை அமர்த்திக்கொண்டு, அதே பிற்பகல் உத்தரகோசமங்கைக்குப் புறப்பட்டேன்.

இராமநாதபுரத்துக்குத் தென்மேற்கில் ஐந்து மைல் தூரத்தில் இருக்கிறது உத்தரகோசமங்கை என்ற க்ஷேத்திரம். தென்னாட்டில் உள்ள சகல சிவ க்ஷேத்திரங்களைப்பற்றியும் அப்பர், சுந்தரர், திருஞான சம்பந்தர் ஆகிய நாயன்மார் மூவரும் தங்கள் தேவாரங்களில் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் உத்தரகோச மங்கையைப் பற்றி மாணிக்கவாசகர் மாத்திரம் தமது திருவாசகத்தில் குறிப்பிட்டிருக்கிறா ரன்றி, தேவாரங்களில் எங்கும் காணப்படவில்லை. இருந்தும் உத்தர கோசமங்கை ஒரு பழம் பதியாகவே இருக்கிறது.

2

எனது ஜட்கா வண்டிக்காரனே ஒரு பயில்வான் மாதிரி. நல்ல கட்டுமஸ்தான தேகம். முறுக்கு மீசை. புஜத்திலே மஞ்சள் நூலில் ஓர் அக்ஷரக் கூடு. குதிரையைத் தட்டிவிட்டு ஒருதரம் சீட்டியடித்துக் கொண்டே அவன் குதித்து வண்டியின் ஏர்க்காலில் ஏறியபோது, கண்மூடி விழிக்கு முன்பாகவே நான் உத்தரகோசமங்கையில் சேரலாம் என்று தோற்றியது. அன்று பொழுது சாய்வதற்கு முன்பு இராமநாதபுரத்தில் கொண்டுவந்து சேர்த்துவிடுவதாக அவன் ஏற்கனவே சொல்லியிருந்தான். அதில் அரைவாசி நேரத்திலேயே காரியம் ஆகிவிடும் என்று எனக்குச் சந்தோஷமாயிருந்தது!

நேர்பாதையில் போகாமல் கொஞ்ச தூரத்தில் வண்டி குறுக்குப்பாதையில் இறங்கிய போதுதான்

எனக்குக் கொஞ்சம் சந்தேகம் தட்ட ஆரம்பித்தது. அதற்கு மேல் குதிரை களைத்துப் போய்த் திடீரென நடக்க முடியாமல் இடக்குப் பண்ணத் தொடங்கியதும் எனக்குப் பயமுங்கூட ஏற்பட்டது. கால் நடையாக நடந்தாலும் இரட்டிப்புத் தூரத்தைக் கடந்திருக்கலாம். ஆனால் குதிரைவண்டி பிடித்தும் ஆமை வேகத்தில்கூடச் செல்லமுடியவில்லை! போதாக் குறையாக வானம் கறுத்து மழையும் சிறுகத் தூற ஆரம்பித்தது. இது எனது கலவரத்தை மேலும் அதிகப் படுத்திவிட்டது. தன்னந் தனி வழி. முன்பின் அறியாத ஆசாமி வண்டிக்காரன். என்னை வெட்டிக் காட்டிலே எறிந்துவிட்டு எனது தோல் பெட்டிகள் இரண்டையும் விலை பெற்ற காமெராவையும் வேறு பொருள்களையும் கொண்டு கம்பி நீட்டிவிட்டால் யார் அவனைக் கண்டுபிடிப்பது? எனக்குத் திகில்தான் அதிகரித்தது.

குறித்த இடத்தைப் போய்ச் சேருவதென்பதும் சமீபத்தில் நடைபெறும் காரியமாகத் தோன்றவில்லை. இராமநாதபுரத்துக்குத் திரும்பிவிடலாமென்றாலோ பாதி தூரம் வரையில் வந்துவிட்டோம். அதன்பின் திரும்புவது புத்தியென்று நினைக்கவில்லை. இப்படி இரண்டுங் கெட்டான் நிலைமையில் எனது கோபமும் ஆத்திரமும் கலவரமும் பொங்கின.

குதிரையோ எந்த நிமிஷமும் கீழே குப்புற விழுந்து சாவதற்குத் தயாராகக் காணப்பட்டது. முனகிக்கொண்டே மழைத்தூற்றலில், பாதையற்ற பாதையில், கரடும் முரடும் கள்ளிப் பற்றையும் நிறைந்த வழியில், கொஞ்சம் இழுத்துப் பார்க்கும்; அப்புறம் கல்லுப் போல் நின்றுவிடும்.

சவுக்குக்குப் பதிலாக நல்ல துவரங் கம்பு கொண்டு தாக்குவான் வண்டிக்காரன். குதிரை மீதல்ல, எருமை மாட்டின் முதுகில் அடிப்பதுபோன்று எண்ணிக்கொண்டுதான் அவன் வாட்டுவான். அவ்வளவு கருணை! பின்னர்ச் சிறிது தட்டித் தடவிக் கொடுப்பான். காதல் வார்த்தையும் பேசி, தானே ஒரு கை பிடித்து வண்டியை நகர்த்திக் கொடுப்பான். சில கஜ தூரம் போகும். அவ்வளவுதான், மறுபடியும் கற்சிலை!

இத்தனைக்கும் எனது பொறுமை எவ்வளவுதான் காத்திருக்கும் என்று நினைக்கிறீர்கள்? உள்ளத்தில் பொங்கிய ஆத்திரத்தின் வேகத்தைப் புழுங்க வைத்துக்கொண்டே நானும் கீழே இறங்கி, வண்டியையும் தள்ளிக் கொடுத்து, நல்ல மழையிலே நனைந்து கொண்டு இரவு பத்து மணிக்குத்தான் உத்தரகோச மங்கையைப் போய்ச் சேரவேண்டிய விதியிருந்தது!

## 3

ஒரு காலத்தில் பாண்டியர் தலைநகரமாயிருந்த உத்தரகோசமங்கை இப்போது ஒரு கிராமம். கோயில் ஒன்றுதான் அங்கே விசேஷம். அதைக்கூட முறைப்படி கவனிப்பார் இல்லை. இராமநாதபுரம் ஜமீந்தாருக்குச் சொந்தமான கிராமமாகையால் கோயிலும் அவர் கண்காணிப்பிலேயே இருக்கிறது. 'தெங்குலவு சோலைத் திருவுத்தரகோசமங்கை' என்று மாணிக்கவாசகர் பாடிவைத்தார். ஆனால், பெயரளவில் மாத்திரம் இரண்டொரு தென்ன மரங்கள் கோயிற் பிராகாரத்தில் காணப்படுகின்றன.

மழையிலும் இருட்டிலும் போய்ச் சேர்ந்த எனக்கு எங்கே தங்குவது, என்ன செய்வது என்று ஒன்றும் தோன்றவில்லை. வண்டிக்காரனுக்கு மாத்திரம் முன்னர் ஒரு தடவை வந்த ஞாபகம் இருந்தது. 'காபி கிளப்' என்று போர்ட் போடப்பட்டிருந்த இரண்டு சிறு கடைகளும் அந்த வேளையில் மூடப்பட்டுவிட்டன. பசியோ வயிற்றைப் பிடுங்கியது. அத்துடன் நாவறட்சியும் கூட. "மெதுவாகக் கோயிற் பக்கம் போனால் ஓரணாவுக்குப்பட்டைச் சாதம் கிடைக்கலாம்" என்று வண்டிக்காரன் சொன்னான். அப்பொழுதுதான் அர்த்த ஜாமப் பூசை முடிந்து கத வடைக்கும் சமயம். துணிகரமாக உள்ளே போய்ப் பார்த்தபோது, நான்கு பிராமணர்கள் பலத்த வாய்ச் சண்டையில் ஈடுபட்டிருந்தார்கள். எதற்காக என்று காத்திருந்தால், மூன்று வடையை நான்கு பேர் எப்படிப் பங்கிட்டுக்கொள்வது என்ற சிக்கலான பிரச்னை என்று தெரியவந்தது! ஒரு வடைக்காக அவர்கள் வாய்ச் சொற்களும் அர்ச்சனைகளும் அநாகரிகமாயிருந்தன. மெதுவாக ஓர் அர்ச்சகரைப் பிடித்து அவர் கையில் ஓர் அணாவைக் கொடுத்து இரண்டு பட்டைச்சாதம் வாங்கியதோடு அவர்கள் சண்டைக்குக் காரணமாயிருந்த ஒரு வடையையும் விடுவித்துக்கொண்டு வெளியேறினேன்.

வண்டியும் குதிரையும் அங்கிருந்த சத்திரத்தின் வாசலில் கட்டப்பட்டிருந்தன. வண்டிக்காரனுக்கு ஒரு பட்டையைக் கொடுத்துவிட்டு மற்றதை உதிர்த்து நான் வாயிற் போட்டேன். ஆனால் அது என்னவோ மாதிரியிருந்தது. அப்படியே அதை ஜட்காக் குதிரைக்குத் தானம் செய்துவிட்டு, பக்கத்தில் யாரோ ஒரு

நல்ல மனிதன் அன்போடு உபசரித்துத் தந்த பச்சைத் தண்ணீரை மட்டும் அருந்திவிட்டு, அந்தச் சத்திரத்தின் தாழ்வாரத்தில் உட்கார்ந்து கொண்டேன். களைப்பு அதிகமாயிருந்தது.

அன்று இராப்பொழுதை எப்படியுங் கடத்திவிட்டால் மறுநாட் காலை கோயிலைச் சுற்றிப்பார்த்து விட்டுத் திரும்பிவிடலாம் என்று தீர்மானம். "சத்திரத்தின் மேல்மாடி படுக்க வசதியாயிருக்கும்; கீழே தாழ்வாரத்தில் மழைச் சாரலடிக்கப் போகிறது. சத்திரத்தின் சாவி அதோ இருக்கும் போலீஸ் இன்ஸ்பெக்டர் வீட்டில் கேட்டால் தருவார்கள்" என்று அங்கு நின்றவர்களில் ஒருவர் சொன்னார். ஆனால் அந்த இன்ஸ்பெக்டர் வீட்டில் போய்க் கதவைத் தட்டியதும் அவருடைய சம்சாரம் ஒரு பயங்கரத் தொனியில், "ஐயா இப்போது சாப்பாட்டுக்கு ஆயத்தம்; யாரும் பார்க்கமுடியாது. நாளைக் காலையில் வா, போ" என்றாள். எவ்வளவோ கேட்டுப் பார்த்தும் பிரயோசனப் படவில்லை. அந்தப் புண்ணியவதி சத்திரத்தில் இருக்க என்னை அநுமதிக்கவில்லை.

மழைச் சாரலையும் பொருட்படுத்தாமல், கொண்டு சென்ற படுக்கை விரிப்பால் நன்றாக உடம்பை மூடிக் கொண்டு இராமநாதபுரம் ராஜாவின் அந்த யாத்திரைக்காரருக்கு உதவாத சத்திரத்தின் வெளித்தாழ்வாரத்தில் ஒதுங்கி உட்கார்ந்து எப்படியோ அன்று இராப்பொழுதைக் கழித்துவிட்டேன். அந்த அநுபவத்தை என் வாழ்நாளில் என்றும் மறக்க முடியாது.

பொழுது விடிந்ததும் மழையும் சிறிது எனக்காக இரங்கி விட்டுக்கொடுத்தது. கோயில் முழுவதை



16. பிருகதீசுவரம் - தஞ்சாவூர் (பக்கம் 82)

யும் சுற்றிப் பார்த்துவிட்டுச் சுவாமி தரிசனம் செய்து கொண்டு, மறுபடியும் தாமதித்தால் பசிவாட்டும் என்று பயந்து மூட்டை கட்டினேன்.

## 3

மற்றும் பல ஸ்தலங்களைப்போல உத்தரகோச மங்கையைப் போய்த் தரிசிக்கும் யாத்திரிகர்கள் மிகவும் குறைவு என்றுதான் சொல்லவேண்டும். பழைய ஸ்தலமாயிருந்தும் பிராபல்யம் பெறாமல் இருப்பதன் காரணம் என்னவென்று தெரியவில்லை. இந்தக் கோயிலில் பாண்டியர் மதுரை நாயக்க மன்னருடைய கல்வெட்டுக்கள் பல காணப்படுகின்றன. சிறந்த சிற்ப அழகும் இங்கிருக்கிறது. இக் கோயிலில் சுவாமி பெயர் மங்களேசுவரர். இதற்குள்ள ஸ்தல புராணமொன்றில் உத்தரகோசமங்கை என்ற பெயருக்குக் காரணம் கூறப்பட்டிருக்கிறது.

சிவபிரான் ஒரு முறை பார்வதி தேவிக்கு வேத மந்திரத்தை உபதேசித்துவிட்டு மீண்டும் கேட்ட போது அவள் மறந்துபோய் விட்டாளாம். அதனால் கோபங்கொண்ட சிவபிரான் பூலோகத்தில் புகலூர் என்ற ஸ்தலத்தில் போய் அவதரிக்குமாறு சபித்து விட்டு, தாமும் ஒரு பிராமணராகப் பிறந்து பார்வதியை மணந்தபின், மீண்டும் வேத மந்திரோபதேசம் செய்து வைத்தாராம். உத்தரம்—விடை; கோசம்—வேதம்.

உத்தரகோசமங்கையில் நடராஜர் கோயில் ஒன்று தனியாக இருக்கிறது. இதிலிருக்கும் நடராஜ விக்கிரகம் மிகப் பெரியது. நிரந்தரமாக இதற்குச் சந்தனக்

காப்பிடப்பட் டிருக்கிறது. இவ்வுருவம் மரகதத் திருலாயதென்றும், கண்பார்வைக் காகாதென்றும் வருஷத்தில் ஒரே ஒரு நாள் — மார்கழி மாதத்துத் திருவாதிரையின்போது — மாத்திரம் சந்தனக் காப்புக் கழற்றப் பெற்று அபிஷேகாதிகள் நடந்தபின் மீண்டும் புதிய காப்பிடப் படுமென்றும், அந்த வேளையில் அர்ச்சகர் கண்கள் மூடிக் கட்டப்பட்டிருக்குமென்றும் கோயில் அதிகாரி ஒருவர் சொல்லக் கேட்டேன். இதில் எவ்வளவு உண்மை இருக்கிறதென்று தெரியவில்லை. நமது சமய சம்பிரதாயங்களில், "சொன்னால் தலைவெடிக்கும்" ரகசியமும் ஒன்று. உத்தர கோசமங்கை நடராஜ விக்கிரகத்தை ஊனக் கண்ணால் பார்த்தால் ஒளி மறைந்துபோகும் என்ற நம்பிக்கை இருந்துவருகிறது.

மாணிக்கவாசகர் உத்தரகோசமங்கையில் வந்ததும் அங்கே அட்டமாசித்திகள் என்ற கலைகளில் பாண்டித்தியம் பெற்றார். தமது திருவாசகத்திலேயே கீர்த்தித் திருவகவல் என்ற பதிகத்தில், பல ஸ்தலங்களில் சிவனது மெய்க்கீர்த்திகளைப்பற்றிக் கூறும் போது,

> உத்தர கோச மங்கையு ளிருந்து
> வித்தக வேடம் காட்டிய இயல்பும்

என்று கூறியிருப்பதால் இங்கேயும் இறைவனது குரு வடிவம் காணப்பெற்றுப் பல கலைகள் பயின்றிருத்தல் கூடும். திருவாசகத்திலே **நீத்தல் விண்ணப்பம்** என்ற பதிகம் உத்தரகோச மங்கையில்தான் பாடப்பட்டது என்று சொல்லுவார்கள். ஒவ்வொரு பாட்டிலும்

'உத்தரகோச மங்கைக்கரசே' என்று விளித்துப் பாடப்பட்டிருக்கிறது.

* * * * *

நாம் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கும் என்பார்கள். அதுபோல, நம்மைச் சுமந்து செல்ல வண்டி பிடித்தால் சில வேளைகளில் வண்டியை நாமே சுமந்து செல்லவேண்டியும் ஏற்பட்டுவிடுகிறது! உத்தரகோசமங்கையிலிருந்து ரெயில்பாதை வரையுமுள்ள மூன்று மைல் தூரத்தையும் கடந்தபோது நான் ஏறிச் செல்வதற்குப் பிடித்த ஜட்காவை நானே தள்ளிக் கொடுத்துக் குதிரையின் வேலையைப் பார்க்க வேண்டி நேரிட்டது. முதல்நாள் இரவு பெய்த மழையிலே பாதை முழுவதும் ஒரே சேறாயிருந்தது. வண்டிச் சக்கரங்கள் புதைய ஆரம்பித்து விட்டன. அதனால் குதிரை இழுக்க வெட்கப்பட்டுக் கொண்டு முனகியது. எப்படியாவது ரெயிலைப் பிடிக்கவேண்டியிருந்ததால், இந்தக் கஷ்டங்களை யெல்லாம் கவனிக்காது ஒருவாறு சகித்துக்கொண்டு வந்து, வண்டிக்காரனுக்குப் பணத்தைக் கொடுத்தனுப்பிவிட்டு, உத்தரகோசமங்கை ரெயில் ரோட்டிலே, தனுஷ்கோடியில் இருந்து வந்த வண்டியைக் கண்களால் கண்டபோதுதான் எனக்கு நிம்மதி ஏற்பட்டது.

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்

*இடைமருதனில் ஈண்ட இருந்து*
*படிமப் பாதம் வைத்தஅப் பரிசும்.*

உத்தரகோசமங்கையி லிருந்து மாணிக்கவாசகர் அடுத்தாற்போல, 'தன்னிக ரில்லாத் தெய்வத்

தலம் பல வணங்கி நீங்கிச் சென்னிநன் ஞட்டி லெய்தித் திருவிடைமருதூர் சேர்ந்தார்' என்று கடவுள்மா முனிவர் கூறுகின்றார். எந்தப் பாதையில் திருவிடைமருதூருக்குச் சென்றார் என்பது தெரியவில்லை. பரமக்குடிக்குப் போய் அங்கிருந்து சிவகங்கை, புதுக்கோட்டை, தஞ்சாவூர் மார்க்கமாக ஒருவேளை போயிருப்பாரோ? ஆனல், இந்த வழியாக ரெயிலும் பஸ்ஸும் கட்டை வண்டியும் ஏறிக் கஷ்டப்படாது, ஒரேயடியாக நான் ரெயிலேறித் திருச்சிராப்பள்ளி சேர்ந்து அங்கிருந்து கும்பகோணம் போய்த் திருவிடைமருதூரை அடைந்தேன.

'நாட்டுக் கோட்டைச் செட்டியார் மக்கள் இல்லையென்ருல் தமிழ் நாட்டில் இன்று பெரும்பான்மையான கோயில்கள் உருப்படியாக இருக்கவும் முடியாது; அதைப்பார்க்க யாத்திரிகர்கள் போகவும் மாட்டார்கள்' என்பது எனது அபிப்பிராயம். நகரத்தார் என்று சொல்லப்படும் இந்த வள்ளல்கள் தென்னட்டுக் கோயில்களைச் சீர்திருத்தி அமைக்கும் திருப்பணி வேலையில் முழுமனத்துடன் ஈடுபட்டதனல்தான் பல கோயில்கள் இன்று சிதைவுருது காப்பாற்றப் பட்டிருக்கின்றன. அத்துடன், யாத்திரை செய்வோருக்கு வசதியாக இவர்கள் ஆங்காங்கே கட்டி வைத்திருக்கும் சத்திரங்களில் தங்கிக்கொண்டே ஊர் சுற்றுவதாயிருந்தால் நமது வாழ்க்கை முழுவதுமே பிரயாணமயமா யிருக்காதா என்ற ஆவல்தான் நமக்குத் தோன்றும். எனது பிரயாண காலத்தில் எங்கே போய்த் தங்குவது, எதைச் சாப்பிடுவது என்ற பிரச்னையே எழுவதில்லை. பிரயாணத்தை உண்மையாக ரஸிக்க வேண்டுமேயானல் சாப்பாட்டு ருசி தேட

லாகாது; படுக்கை வசதியையும் பார்க்கலாகாது. அந்த இரு வசதிகளையும் கவனித்திருப்போனயின் உத்தரகோச மங்கையை எட்டியும் பார்த்திருக்க முடியுமா ?

ஆனால் திருவிடைமருதூரில் அப்படிக் கஷ்டமொன்றும் இல்லை. நகரத்தாருடைய சத்திரம் ஒன்றிருக்கிறது. அதில் தங்குவதற்கு வசதி நமது சொந்த வீட்டிலும் பார்க்க மேலானது. அங்குள்ள கிணற்றின் நீரை வாரி வாரி இறைத்துக் குளித்துக் கொண்டிருக்க, உள்ளம் பூரிப்படைந்த அநுபவத்தை மாத்திரம் மறக்கமுடியாது.

'திருவாரூர்த் தேரழகு, திருவிடைமருதூர்த் தெருவழகு' என்று சொல்வார்கள். தமிழ் நாட்டுக் கோயில்களின் திருவிழாச் சிறப்பில் தேர் அழகில் திருவாரூரும், வீதியில் திருவிடைமருதூரும் சிறந்து விளங்கியவை. இந்தத் திருவிடைமருதூரின் வெளிப் பிராகாரத்தை வலம் வருவதை அசுவமேதப் பிரதக்ஷிணமென்று சொல்வார்கள். அதுவே புனிதமானது என்பர். இருக்கையை விட்டுத் தேர் புறப்பட்டால் ஒரு சுற்றுச் சுற்றிக்கொண்டு மீண்டும் அந்த இடத்தை வந்துசேர மாதக் கணக்காகுமாம்.

கும்பகோணத்துக்கு வடகிழக்கில் ஆறுமைல் தூரத்தில் இருக்கும் இந்தத் திருவிடைமருதூருக்கு மத்தியார்ச்சுனம் என்ற ஒரு பெயருமிருக்கிறது. ஸ்ரீசைலம் என்ற மல்லிகார்ச்சுனத்துக்கும் அம்பாசமுத்திரத்தின் பக்கத்திலுள்ள ஸ்புடார்ச்சுனத்துக்கும் இடையில் இருப்பதால் இது மத்தியார்ச்சுனம் என்று வழங்கப்படுகிறது. மருத மரத்திடையில் ஒரு லிங்கம் தோன்றிய

காரணத்தால் இடைமருது என்ற பெயர் பெற்றது. ஆனால் வடமதுரையில் யசோதையிடம் வளர்ந்த கிருஷ்ணன் இரு மருத மரங்களுக்கிடையே உரலைக் கட்டியிழுத்து அம்மரங்களை வீழ்த்திய கதையையும் சம்பந்தப்படுத்தி, இத்திருவிடைமருதூரில் அம்மாதிரி வடிவம் ஒன்றும் செய்துவைத்திருக்கிறார்கள்.

இந்த ஸ்தலம் விசேஷம் பெற்றதற்குக் காரணம் இங்குள்ள லிங்கந்தான். இது மிகவும் பெயர்பெற்றது. ஆகையால் திருவிடைமருதூர் சுவாமி மகாலிங்கம் என்று அழைக்கப்படுவார். இன்னொரு விசேஷம் இந்த ஸ்தலத்தின் அமைப்பு. ஒவ்வொரு சிவன்கோயிலிலும் கணேசர், சுப்பிரமணியர், தக்ஷிணாமூர்த்தி, நந்திகேசுவரர், நவக்கிரகங்கள் முதலிய தேவர்கள் இருப்பது வழக்கம். திருவிடைமருதூர் ஆலயத்தினுள் இந்த விக்கிரகங்கள் வைக்கப்பட்டிருப்பதன்றி, சுற்றுப் புறங்களிலுள்ள கிராமங்களில் இத்தேவர்களுக்குத் தனித்தனி ஆலயங்கள் கட்டப்பெற்றும் இருக்கின்றன. கணேசருக்குத் திருவலஞ்சுழியும், சுப்பிரமணியருக்குச் சுவாமிமலையும், தக்ஷிணாமூர்த்திக்கு ஆலங்குடியும், நந்திகேசுவரருக்குத் திருவாவடுதுறையும், நவக்கிரகங்களுக்குச் சூரியனார் கோயிலும் திருவிடைமருதூரைச் சுற்றியுள்ள பிரசித்திபெற்ற ஸ்தலங்களாகும்.

## 2

திருவிடைமருதூரின் அற்புதத்தை அதிகப்படுத்தும் ஒரு தனி விசேஷம் என்னவெனில் பிரம்மஹத்தி தோஷத்திலிருந்து ஒரு சோழமன்னன் விடுபட்ட வரலாறு. மன்னன் ஒருமுறை ஆராயாது பிராமணன்

ஒருவனைக் கொலை செய்ததால் அந்தப் பிரம்மஹத்தி யின் பீடையால் துன்பப்பட்டுப் பல ஸ்தலங்களுக்கும் சென்று வழிபட்டான். ஆனால் எங்கும் அந்தச் சாபம் கழியாது, இறுதியில் அவன் திருவிடைமருதூர் வந்து உள்ளே சுவாமியைத் தரிசிக்கும்போது கோயிலின் வாசலிலே பிரம்மஹத்தி, அரசன் திரும்பிவரும் வரை யும் காத்திருந்தது. ஆனால், அரசன், சுவாமியின் அருள் பெற்றுப் பின்வழியாக வெளியேறிவிட்டான். அரசன் வருவான் வருவான் என்று பிரம்மஹத்தி இன்னுந்தான் காத்துக்கொண் டிருக்கிறது. ஏமாந்து போய் உட்கார்ந் திருக்கும் பிரம்மஹத்தியின் நிலையைக் காட்டித் திருவிடைமருதூர்க் கிழக்குக் கோபுரவாசலில் ஒரு சிலை இருக்கிறது. பைசாசச் சேஷ்டைகளால் பீடிக்கப்பட்டவர்கள் பலர் இங்கு வந்து தங்கள் வியாதிகளை அகற்றிச்செல்வது இன் னும் வழக்கமாய் இருந்துவருகிறது.

இதனைச் சோழப் பிரம்மஹத்தி என்றுதான் வழங்குகின்றனர். ஆனால் புராணங்களிலே வரகுண பாண்டியனுடைய பிரம்மஹத்தி தோஷம் இங்கு நீங்கியதாகக் கூறப்பட்டிருக்கிறது.

சாமகண் டத்தன் தன்னைத் தாவருச் சித்த தென்னர்
கோமகன் பிரம சாயை குறைத்ததிப் பதியாம்

என்று திருவிளையாடற் புராணத்தில் காணப்படு கிறது. வேம்பத்தூர் நம்பி திருவிளையாடலிலும் வரகுண பாண்டியனையே குறிப்பிட்டு, ' நீதி வாயிலி னின்றது நீண்மதிற் புறத்தாங் கேத மேதர வருந்திற விரும்பிரமகத்தி " என்று கூறப்பட்டிருக்கிறது.

திருவிடைமருதூர் அம்பாள் பெயர் பிருஹத்குசாம்பாள்; தமிழிலே பெருமுலைநாயகி. அம்மன் கோயிலுக்குப் போகும் வழியிலே மூகாம்பிகையம்மன் சந்நிதி யொன்றிருக்கிறது. அம்மன் தவத்திலிருக்கும் பாவனையில் பக்கத்திலேயே மேரு மலையும் காட்டப் பெற்றிருக்கிறது.

'ஏதம் தீர்க்கும் இடைமருதா' என்று அப்பர் சுவாமிகள் பாடியுள்ளார். சம்பந்தரும் சுந்தரரும் இங்கு வந்து தரிசித்திருக்கிறதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. பிற்காலத்தில் வாழ்ந்த மகானாகிய பட்டினத்தடிகள் திருவிடைமருதூரில் சிலகாலம் வசித்து வழிபட்டதாக வரலாறுண்டு. பத்திரகிரி மகாராஜா என்ற அரசன் பட்டினத்தடிகளின் சீடனாக அவருடன் பல ஸ்தலங்களுக்கும் சென்று வணங்கிவிட்டு ஈற்றில் திருவிடைமருதூருக்கு இருவரும் வந்தனர். கிழக்குக்கோபுர வாசலில் பட்டினத்தடிகளும், மேற்குப் புறத்தில் பத்திரகிரியாரும் உட்கார்ந்து தவம் செய்ததாக வரலாறு. அதை ஞாபகப்படுத்த இப்போது இவர்கள் சிலைகள் முறையே கிழக்குக் கோபுர வாசலிலும் மேற்குக் கோபுர வாசலிலும் வைக்கப்பட்டிருக்கின்றன.

## 3

"இடைமருதுதனில் ஈண்ட இருந்து படிமப் பாதம் வைத்த அப்பரிசும்' என்று மாணிக்கவாசக அடிகள் தம் அநுபவத்தைச் சொல்லியிருக்கிறார். சைவ சித்தாந்த தத்துவத்தின்படி மனிதன் தபசில் மேம்பட்ட போது, அதாவது, அறிவிலும் நெறியிலும் பக்குவ

மடைந்த காலத்தில், அந்த ஜீவனுக்கு இறைவன் குரு வடிவாக வந்து, ஐம்புலன்களின் வயப்பட்டுப் பெரும் பகுதியான வயது வீணுகக் கழிந்துவிட்டதேயென்று உபதேசிப்பார். இதனை உணர்ந்த ஆன்மா (ஜீவன்) உண்மை நிலையை உணர்ந்து பழைய பற்றுக்களைக் களைந்து இறைவன் பாதங்களைச் சேரும். இதுதான் சைவ சித்தாந்தத்தில் கண்ட ஒரு தத்துவம்.

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே

என்பது சிவஞானபோதத்தில் எட்டாவது சூத்திரம். ஆகவே, ஞானசிரிய வடிவில் தோன்றி மக்களை ஆட்கொள்ளுதல் இறைவனது அருட் குணங்களில் ஒன்று. திருப்பெருந்துறையில் மாணிக்கவாசகருக்குக் காட்சியளித்த இறைவன் அங்குத்தானே அவருக்கு உண்மை யறிவைப் போதித்து, உயர்ந்த லட்சிய மாகிய திருவடி தீக்ஷையும் செய்துவைத்தார். அதாவது, இறைவன் திருப்பாதங்கள் மாணிக்கவாசகரின் சென்னிமீது சூட்டப்பட்டன. அந்தப் பாத தரிசனமே மாணிக்கவாசகருக்குப் பல ஸ்தலங்களில் கொடுக்கப் பட்டது. திருவிடைமருதூரிலும் நிகழ்ந்த பாதக் காட்சியை மாணிக்கவாசகர் தமது பாடலிற் குறிப் பிட்டுச் செல்லுகின்றார்.

* * * *

சத்திரத்துத் திண்ணையில் உட்கார்ந்து இளைப் பாறிக் கொண்டிருக்கையில் ஒரு பையன் வந்தான். அவனுக்குத் திருவிடைமருதூரைப்பற்றித் தெரிந்த

விஷயங்கள் வேறு எந்தச் சரித்திரத்திலும் காணமுடியாது. சற்று நேரத்துக்குள் எனது கவனத்தை வாங்கி அவன் கதை கதையாக அளக்க ஆரம்பித்தான். திருவிடைமருதூர்த் தேர் ஓட முடியாது நின்ற விவரம் முதல், திருவாவடுதுறைப் பண்டாரசந்நிதி வாழ்க்கை வரையில், அவன் வாயிலிருந்து பொழிந்தன. திருவிடைமருதூர்ப் பரிபாலனம் திருவாவடுதுறையைச் சேர்ந்தது. அம்பலவாண பண்டார சந்நிதிக்குப் பின் வந்த பரம்பரை ஆதீனகர்த்தர் மேற்பார்வை பார்த்து வருகிறார். வருஷந்தோறும் தைப் பூசத்தின்போது இங்கு நடைபெறும் உற்சவத்தில் சுவாமிக்கு நடக்கும் ஆராதனையைக் காட்டிலும் மடாதிபதிக்கு நடக்கும் உபசார வைபவந்தான் சிறப்பா யிருக்குமாம்!

அன்று மாலை மகாலிங்கத்தின் தரிசனம் பெற்றுக் கொண்டு, சோழப் பிரம்மஹத்தியிடமும் விடை பெற்றுக்கொண்டு, பட்டினத்தடிகளையும் ஒருதரம் பார்த்துவிட்டுத் தஞ்சாவூருக்கு ரெயிலேறி விட்டேன்.

---

## பதின்மூன்றும் அத்தியாயம்

*தென்னாடுடைய சிவனே போற்றி!*
*எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!*

தண்ணீரும் காவிரியே, தார்வேந்தன் சோழனே, மண்ணாவதும் சோழ மண்டலமே' என்று தமிழ் மூதாட்டி ஔவைப் பிராட்டியார் சொன்னார். அந்தச் சோழவள நாட்டின் தலைநகராகவும், தமிழரின் கலைகளுக்கும் நாகரிகத்துக்கும் இருப்பிடமாகவும், சோழர், நாயக்கர், மகாராஷ்டிரர் ஆகிய மன்னர்

அரசிருக்கையாகவும் சிறந்து விளங்கிய நகரம், தஞ்சா வூர். செழித்த காவிரிப் பிரதேசத்தில் நடுநாயகமா யிருந்து, இன்று தென்னிந்தியாவில் யாத்திரை செய்பவர்களுக்கு ஒரு குளிர்ந்த உணர்ச்சியைத் தந்து கொண்டிருக்கிறது. தஞ்சாவூர் ஸ்டேஷனில் இறங்கித் தெரு வீதிகளை மாத்திரம் சுற்றிக்கொண் டிருந்தால் போதும், மனத்திலே ஒரு திருப்தியான உணர்ச்சி ஏற்பட்டுவிடும். ஒரு பக்கம் பூக்கடைகள், இன்னொரு பக்கம் பச்சென்ற காய்கறிகளும வெற் றிலை முதலிய பொருள்களும், வேறொரு பக்கம் கண் ணைப் பகட்டும் கனி வர்க்கங்கள். இப்படியாக எங்கே பார்த்தாலும் கண்ணுக்குத் திருப்தி தரும் அழகிய காட்சியாயிருக்கும்.

தஞ்சாவூரிலே 'ராஜா சத்திரம்' ரெயில்வே ஸ்டேஷனுக்கு மிகவும் சமீபத்தில் இருக்கிறது. எட் டணு வாடகைக்கு நல்ல வசதியான அறை ஒன்று தந் தார்கள். மாலை வேளையில் வெந்நீர் போடுவித்து ஸ்நானம் செய்துகொண்டு, பக்கத்தில் உள்ள ஒரு ஹோட்டலில் பசிதீரச் சாப்பிட்டுவிட்டு, அன்றிரவை நிம்மதியாகத் தூங்கிக் கழித்தேன்.

மாணிக்கவாசகர் யாத்திரைக்கும் தஞ்சாவூருக் கும் சம்பந்தம் இல்லை யென்றாலும் நாம் போகும் வழியிலே யிருக்கும் நமது தமிழ் மூதாதையரின் ராஜ தானியைப் பார்க்காமல் போகமுடியுமா? தமிழ் மொழிக்கு மதுரை நகர் எவ்வளவு உருக்கொடுத் ததோ, அதுபோலத் தஞ்சை நகர் தமிழர்கலைகளுக்கு உருக்கொடுத்திருக்கிறது. சங்கீதத்துக்கும் நாட்டியத் துக்கும் சிற்பத்துக்கும் சித்திரத்துக்கும் தஞ்சாவூ தான் தலைசிறந்து விளங்கியது. சோழமன்னரும் பல

வரும் போட்டி போட்டுக்கொண்டு தமிழ் நாட்டிலே சிற்ப அமைதியுடன் பல கோயில்களைக் கட்டினார்கள். தமிழரின் கலைச் சிறப்பை இன்னும் வானளாவ உயர்த்தி வைத்துக்கொண்டிருப்பவை அவர்கள் கட்டி வைத்த கோபுரங்கள் என்று சொல்லிவிடலாம்.

தஞ்சை நகரிலுள்ள ஸ்ரீ பிரகதீசுவரர் ஆலய விமானத்தைப்போலத் திராவிட நாகரிகத்தையும் கலைச் சிறப்பையும் எடுத்துக்காட்டும் சிற்பச்சின்னம் வேறு கிடையாது என்று பெருமையாகப் பாராட்டுவார்கள். 'ஸ்ரீராஜராஜன்', 'சிவபாத சேகரன்' என்று தில்லை வாழ்ந்தணர்களிடம் விருதுபெற்ற ராஜ ராஜ சோழன் ஏழு வருட காலம் அமைதியாக இருந்து கட்டுவித்தான், இந்த அரிய திராவிட பொக்கிஷத்தை. இந்த ராஜராஜ சோழன் தான் கடல் கடந்து சீனம், சாவகம், கடாரம் வரை படையனுப்பி நாடு கொண்டு, ஈழம் என்ற இலங்கையிலே சிங்கள அரசரை வென்று, அங்கே பொலன்னருவையில் தன்று ஆட்சிப் பீடத்தை அமைத்து ஒரு பெரிய சிவன் கோயிலையும் கட்டிவைத்தான். பொலன்னருவைச் சிவன் கோயிலின் சிற்ப அமைதியும் பிரசித்தி பெற்றது. அக் கோயில் இப்போது சிதைந்து போய்க் கிடந்தாலும் அதிற் கண்டெடுக்கப்பட்ட செப்புத் திருவுருவங்கள் கொழும்பு நூதனப் பொருட்காட்சிச் சாலையில் பக்குவப்படுத்தி வைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள்ளே நடராஜர் உருவமும் சமய குரவர் நால்வர் உருவங்களும் மிகவும் பிரசித்திபெற்ற வடிவுள்ளன என்று சிற்ப நூலறிஞர் ஆனந்த குமாரசுவாமி எழுதியுள்ளார். நால்வர் உருவங்களிலும்

சுந்தர மூர்த்தியின் உருவமும் மாணிக்கவாசகர் உருவமும் அபூர்வப் பொலிவுள்ளன.*

தஞ்சாவூரில் ஆரம்பித்த கதை பொலன்னருவையில் போய் முடிந்ததை வாசகர்கள் மன்னித்து விட்டு, நமது யாத்திரையில் தொடர்ந்து வருமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். திருவிடைமருதூரி லிருந்து மாணிக்கவாசகர் திருவாரூருக்குச் சென்றார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்தத் திவ்விய ஸ்தலத்தைத் நாடிச் செல்லும்போதுதான் நாமும் தஞ்சாவூரைப் பார்த்தோம். இங்கிருந்து ரெயிலேறி, கிழக்கே திருவாரூருக்குச் செல்வோம், வாருங்கள்.

---

## பதின்மூன்காம் அத்தியாயம்

*தேனமர் சோலைத் திருவா ரூரில்*
*ஞானந் தன்னை நல்கிய நன்மையும்*

தென்னிந்தியாவிலே எந்தனையோ பகுதிகளில் ரெயில் பிரயாணம் செய்திருக்கிறேன். ஆனால், தஞ்சாவூர் போன்ற அழகும் சிறப்புமுள்ள ஒரு ஸ்டேஷனைக் காணவில்லை. பல பாதைகள் சந்திக்கும் இந்த 'ஜங்ஷன்' ஒரு தனிக் கௌரவம்பூண்டுக் காணப்படுகிறது. முல்லை, மல்லிகை, இருவாட்சி, சம்பங்கி, மருக்கொழுந்து, வெட்டிவேர் முதலியவற்றின் வாசனை ஒரு பக்கம்; இவற்றைக் கதம்பமாகச் சூடிக்கொண்டு ஜடைகள் புரள ஒய்யாரமாகப் பிளாட்பாரத்தில் பவனிவரும் தமிழ் நாட்டு மாதர்களின் அழகு ஒரு பக்கம்; பண்டங்கள் விற்போர் ஆலாபனை போட்டு

---

*முகப்புப் படம் பார்க்க.

வரும் ஓசை இன்னொரு பக்கம் - எல்லாம் சேர்ந்து நம்மைச் சொப்பன லோகத்தில் கொண்டுபோய் வைத்துவிடுகின்றன.

ஸ்மார்த்த வைஷ்ணவ சௌராஷ்டிரப் பெண் மணிகளின் வகைவகையான உடையழகைப் பார்ப்பதா, அல்லது பாடசாலை மாணவிகள் கையில் குலுங்கும் வளையல் நாதத்தைக் கேட்பதா, அல்லது ஸ்தல யாத்திரை செய்யச் செல்லும் புதுக் குடும்பங்களின் வேடிக்கைக் காட்சிகளைப் பார்ப்பதா, அல்லது வண்டிக்குள் முதலிடம் பெறுவதற்காக முட்டித் தள்ளும் பேர்வழிகளைப் பார்ப்பதா?

"ஆலங்குடி பாக்கு வெட்டி, உருட்டுப் பொம்மே, தஞ்சாவூர்த் தலையாட்டிப் பொம்மே......." என்று கத்திக்கொண்டு பிளாட்பாரத்தில் செல்லுகின்றான் ஒரு பொம்மை வியாபாரி. "சூடான மெதுவடை, மசாலவடை காபீ!" என்று அடித்தொண்டையால் ஆகார சாதகம் செய்கிறான் ஒரு காபி கிளப் பையன். "கொடி மிந்திரிப் பழம் கொய்யாப் பழம் மாம்பழம்!" என்று ஒருவன் பல்லவி ஆரம்பிக்க, வேறொருவன் அதற்குப் போட்டி போடுவது போல, "திராக்ஷைப் பழம் கமலாப் பழம் மாம்பழம்!" என்று உச்சஸ்தாயியில் கதறி, கூட ஒரு சங்கதி போடுகின்றான்!

ரெயில் வண்டிக்குள்ளேயே உட்கார்ந்து சாளர வழியாக எட்டிப் பார்த்து இந்த ஓசைகளைக் கேட்டுக் கொண்டிருந்தாலே போதும்; எல்லாம் சாப்பிட்ட திருப்தி ஏற்பட்டு விடும்! அவ்வளவு அழகாக அந்த வியாபாரிகள் ராகம் போட்டுக் கூறிச் செல்வார்கள்.

எல்லா வேடிக்கைகளையும் காட்சிகளையும் பார்த்து அநுபவித்துக்கொண்டே சற்று நேரத்தில் திருவாரூர் போய்ச் சேர்ந்துவிட்டேன்.

## 2

சோழமன்னர் ராஜதானியாகத் தஞ்சாவூர் சிறப்புற்றிருந்ததுபோலவே, திருவாரூரும் ஒரு காலத்தில் மேம்பட்டு விளங்கியது. தஞ்சாவூர் கலையில் கவனம் செலுத்தியது. ஆனால் திருவாரூரோ சமயத்தில் ஈடுபட்டிருந்தது. பூங்கோயில் என்று சிறப்புப் பெற்றிருந்த திருவாரூர்த் தியாகராஜர் சந்நிதியில், தமிழ் நாட்டின் பல பாகங்களிலுமிருந்து சிவனடியார்கள் பலர் வந்து அடிக்கடி கூடுவார்கள்; வழிபாடு செய்வார்கள்; சமய வாதங்கள் பல புரிவார்கள். நமது சைவ சமய இலக்கியங்களி லெல்லாம் திருவாரூர் ஓர் அற்புதமான ஸ்தலமாகவே கூறப்பட்டிருக்கிறது. திருவாரூரில் பிறப்பதும், தில்லையைத் தரிசிப்பதும், காசியில் இறப்பதும் மோக்ஷம் என்று சொல்வர். அத்தகைய பெருமை கொடுத்திருக்கிறார்கள் இந்த ஸ்தலத்துக்கு நம் முன்னோர்கள்.

ரெயில்வே ஸ்டேஷனி லிருந்து திருவாரூர்க் கோயில் ஒரு மைல் தூரம் இருக்கும். நான் அங்கே போய் ஸ்டேஷனில் இறங்கியபோது செட்டியார் நண்பர்கள் இருவர் யாத்திரைக்காக வந்திருந்தார்கள். மூவருமாக ஒரு வண்டி பேசி, கோயில் கமலாலயம் எல்லாவற்றையும் பார்த்துவிட்டு அடுத்த ரெயிலுக்கே திரும்பலாம் என ஒழுங்கு செய்துகொண்டு புறப்பட்டோம்.

## 3

மநுநீதிச் சோழன் கதையை எல்லாரும் அறிந்திருக்கலாம். திருவாரூரி லிருந்து அவன அரசாட்சி செய்த காலத்தில், வாசலிலே ஆராய்ச்சி மணி ஒன்றைக் கட்டி வைத்திருந்தான். குடிகள் தமக்கு ஏதாவது குறை நேர்ந்தவிடத்து அந்த மணியை அடித்து முறையிட்டால், அரசன் உடனே விசாரணை செய்து பரிகாரம் செய்யும் வழக்கம் இருந்ததாம். ஆனல் இந்த மநுநீதிச் சோழன் காலத்திலே ஆராய்ச்சி மணி அடிக்கப்பட வேண்டிய பிரமேயமே நேரவில்லை யென்ருல் அவனுடைய செங்கோல் வழுவாத ஆட்சியைப்பற்றி வேறு சாட்சியும் வேண்டுமா ?

அப்படி இருந்தும் ஒருநாள் எதிர்பாராத விதமாக அவனுடைய ஆராய்ச்சி மணி அடித்துக் கேட்டது ! கலவரமடைந்த அரசன் காவலாளியை அனுப்பிப் பார்த்தபோது உக்கிரங்கொண்ட பசு வொன்று தனது கொம்பினல் மணியை முட்டி அசைத்தது என்று கண்டான் ! இது அவனைத் தூக்கி வாரிப் போட்டது. நேர்ந்த விபரீதம் என்னவென்று மேலும் விசாரித்துப் பார்த்தபோது, அவனுடைய ஒரேயொரு புதல்வனுகிய இளங்குமரன் தேரோட்டிச் செல்லுங்கையில் பசுவின் கன்று குறுக்கே வந்ததாகவும், சக்கரத்தில் அகப்பட்டு மடிந்து போய்விட்டதாகவும் தெரிந்தது. இந்த அபசாரத்தைப் பொறுக்க மாட்டாத மன்னன், 'அன்னியன் ஓர் உயிர் கொன்ருல் அவனைக் கொல்லுதல் கடன்' என்று கூறி,



19, கமலாலயம், திருவாரூர். (பக்கம் 90)

*ஒருமைந்தன் தன்குலத்துக் குள்ளானென் பதுமுணரான்*
*தருமம்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்*
*மருமம்தன் தேராழி யுறவூர்ந்தான் மனுவேந்தன்.*

ஒரே யொரு புதல்வன் தான் பட்டத்துக்குள்ளான் என்பதையும் பாராது உடனே அவனைத் தேர்க்காலில் அகப்படுத்திக் கொல்வித்தான்.

இந்த வரலாற்றைக் காண்பிக்க ஒரு கல்லுத் தேரும், அதன் சக்கரத்தினடியில் ஒரு சிறுவனின் சிலையும் திருவாரூர்க் கோயிலின் வடகிழக்குப் புறத்தில் காணப்படுகின்றன. இவற்றினருகே, ஒரு பசுவும், இறந்து கிடக்கும் கன்றின் உருவமும் இருக்கின்றன.

இத்தகைய நீதி தவறாத சோழமன்னர் அரசிருக்கையா யிருந்த திருவாரூரில், பிறந்தவர் பிறவாப் பெரும்பதியில், சிவனடியார் கூட்டத்தவர் அந்தக் காலத்திலே போய்க் குழுமி யிருப்பார்கள். ' தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கு மடியேன் ' என்று ஆரம்பித்துச் சுந்தரமூர்த்தி நாயனார் இந்த ஸ்தலத்திலேதான் திருத்தொண்டத் தொகையைப் பாடினார். அத்திருத்தொண்டத் தொகையை ஆதாரமாகக் கொண்டு சைவ நாயன்மார் அறுபத்து மூவர் வரலாற்றைச் சேக்கிழார் என்ற பெரும்புலவர் பெரிய புராணம் என்னும் காவியமாகச் செய்தார்; அதில் அவர் திருவாரூரையே திருநகரமாக வைத்து அழகு படப் பாடியிருக்கிறார். சுந்தரமூர்த்தி நாயனார் பரவையார் என்ற பெண்ணை இந்தத் திருவாரூர்ப் பூங்கோயிலில்தான் கண்டு காதலித்து மணந்துகொண்டார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் தவிர, அப்பர் என்ற திருநாவுக்கரசரும் தரிசித்த இடங்களில் திருவாரூர் விசேஷ ஞாபகம் பெற்றிருக்கிறது. இந்த ஸ்தலத்தில்

தான் அவர் தம் நாவன்மையைக் காட்டும் திருத்தாண்டகங்கள் பல பாடிவைத்துச் சாகாவரம் பெற்றார். திருஞானசம்பந்தரும் இப்பதியைத் தரிசித்துள்ளார்.

கமலாலயம் என்ற பெரிய தெப்பக்குளம் ஒன்று கோயிலின் மேற்குப் புறத்தில் இருக்கிறது. ஒரு காலத்தில் தாமரை படர்ந்து காணப்பட்டிருக்கலாம். அதன் காரணமாகவே கோயிலும் கமலாலயம் அல்லது பூங்கோயில் என்ற பெயர் பெற்றிருத்தல் கூடும். ஆனால் இப்பொழுது திருக்குளத்துக்கு மாத்திரம் கமலாலயம் என்ற பெயர் நிலைத்து நிற்கிறது. மிகப் பெரிய குளம். மத்தியில் அழகான கோயிலொன்றும் இருக்கிறது.

'திருவாரூர்த் தேரழகு' என்று சொல்வார்கள். தென்னிந்தியாவிலேயே திருவாரூர்த் தேர் போன்ற பெரிய தேரை வேறு எங்கும் பார்க்க முடியாது. ஆனால், துரதிருஷ்ட வசமாக, சிலகாலத்துக்கு முன்பு அந்தத் தேர் நெருப்புப் பற்றி எரிந்துபோய்விட இப்போது வேறொரு தேர் செய்யப்பட்டிருக்கிறது. இது முந்திய தேரைப்போல அவ்வளவு பெரியதல்ல.

நான் போயிருந்த காலம் தேர்த் திருவிழாவுக்குச் சில நாட்கள்தான் முன்பாகையால் தேருக்கு வேண்டிய ஆயத்தங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கக் கண்டேன். தேரின் இரு பக்கங்களிலும் பக்கத்துக்கு எட்டுக் குதிரைகளும், மத்தியில் இருபது இருபத்தைந்து கஜ நீளமுள்ள பெரிய மலைப் பாம்பின் உருவமொன்றும் கிடைசரியிலும் மூங்கில் காகிதங்களிலும் தயாராகிக் கொண்டிருந்தன. சுமார் ஆயிரம் ரூபாய் இந்தத் தேரின் சோடனைக்காக மாத்திரம் செலவாகுமாம். கோயிலைச் சுற்றித் தேர் நகர்ந்து வரப் பத்து நாட்கள் செல்லும்.

## 4

திருவாரூர் சப்த விடங்க ஸ்தலங்களுள் ஒன்று என்று சொல்வர். 'விடங்கர்' என்பது கை புனையாது தானே தோன்றிய உருவம். பொளியப் படாத சிலை என்பது பொருள். சோழர்களில் முன்னோனாகிய முசுகுந்தச் சக்கரவர்த்தி இந்திரனுக்குச் செய்த ஓர் உதவிக்குப் பதிலாகத் தியாகராஜ விடங்க மூர்த்திகள் ஏழிடங்களில் தோன்றின. அவை: திருவாரூர், நாகபட்டினம், திருநள்ளாறு, திருக்காறாயில், திருக்கோளிலி, திருவாய்மூர், வேதாரணியம் என்பவை. ஒவ்வோரிடத்திலும் சிவனது வெவ்வேறு வகையான நடனரூபங்கள் காட்டப் பெற்றுள்ளன. திருவாரூர்க் கோயிலின் வெளிப் பிராகாரம் முழுவதும் ஏராளமான லிங்கங்களைக் காணலாம்.

மற்ற ஆலயங்களிற் போலவே திருவாரூரிலும் சிற்ப அழகு பரிமளிக்கிறது. சோழர் காலத்துக் கல்வெட்டுகளும் பல இங்கே காணப்படுகின்றன.

கோயில் முழுவதையும் சுற்றிப் பார்த்துவிட்டுத் திரும்புகையில், இங்கிருந்து மேற்கே ஒரு மைல் தூரத்தில் 'தக்ஷிணாமூர்த்தி மடம்' என்று ஒரு விசேஷ ஸ்தலம் இருப்பதாகவும் அதையும் பார்த்துவிட்டுத் திரும்பலாம் என்றும் ஒரு நண்பர் சொன்னார். திருவாரூரைத் தரிசிக்க வந்த மாணிக்கவாசக சுவாமிகள் இறைவனது தியாகராஜத் திருக்கோலத்தைக் கண்டு, அவர் ஞானந் தன்னை நல்க அதனைச் செவிமடுத்து, அங்கேதானே சில நாள் தங்கிப் பெறுதற்கரிய சிவஞான அருளைப் பெற்றுக்கொண்டு புறப்பட்டிருப்

பார் ; அவ்வளவுதான். ஆனால், ஊர் சுற்றப் புறப்பட்ட நாம் பக்கத்திலுள்ள காட்சிகளைத் தவறவிட்டால் பின்னர்ப் பார்ப்பது அரிதல்லவா ? ஆகையால் தக்ஷிணாமூர்த்தி மடத்தையும் பார்த்துவிடலாம் என்று போனோம். ஏறக்குறைய நூறு வருடங்களுக்கு முன்பு வசித்த ஒரு சாமியாரின் சமாதி இருக்கிறதாகச் சொன்னார்கள். வியாழன்தோறும் விசேஷ பூஜையும் அன்ன தானமும் நடைபெறுகின்றன. அந்த வைபவத்தையும் பார்த்துவிட்டு ரெயிலேறி விட்டோம்.

---

## பதினைந்தாம் அத்தியாயம்

### கழுமல மதனிற் காட்சி கொடுத்தும்

திருப்பெருந்துறையிலே மற்றும் அடியார்களின் பிறவித் துன்பத்தைப் போக்கியருளி மாணிக்கவாசகரை மாத்திரம், " நீ போய் வேறு பல ஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு சிதம்பரத்தில் வந்து என்னை அடைவாய் " என்று இறைவன் பணித்த காரணம் யாதோ நாம் அறியோம். ஆனால், மாணிக்கவாசகரே தமது திருவாசகத்தில் திருவண்டப்பகுதி கூறுங்கால், அங்கும் இங்கும் எங்கும் அலைந்து தேடித் திரிந்து ஈற்றில், ' ஒளிக்கும் சோரனைக் கண்டனம் ' என்று தாம் இறைவனைக் கண்டுபிடித்த அநுபவத்தைக் கூறியுள்ளார்.

இங்ஙனம் இறைவனைக் காணவேண்டிச் சிவ ஸ்தலங்கள் தோறும் அவர் செய்த யாத்திரையில் தமக்கு 'மறையோர் கோலம் காட்டி யருளிய' அந்தக்

குருநாதனைச் சும்மா விட்டு வைக்கவில்லை. ஒவ்வோ ரிடத்திலும் ஒவ்வொரு கலையைப் பயின்றுகொண்டு, திருவாரூரில் ஞான சித்தியையும் பெற்று, அடுத்தபடி எங்கே அந்தக் குருநாதன் சேவையில் வேறு ஏதாவது பேறு பெறலாம் என்று சிந்தித்தவராய் நேரே வடக்கு நோக்கினார். சோழ நாட்டிலேதான் சிவ ஸ்தலங்களுக்குக் குறைவேது? முதல் அவர் கருத்திற்பட்டது பிரமபுரம் என்ற சீர்காழி.

'சோழ வளநாடு சோறுடைத்து' என்ற வாக்கியத்தின் உண்மையை அறிய வேண்டுமானால் திருவாரூரிலிருந்து வடக்கே செல்லும் பாதையில் சீகாழி வரையும் போகவேண்டும். தமிழ் நாட்டின் உயிர் நாடியாயிருக்கும் காவிரி யாற்றின் இரு கிளை களுக்குள் அகப்பட்ட செழிப்பான பூமி. கண்ணுக் கெட்டிய தூரமெல்லாம் ஒரே நெல் வயல்களின் அழகான காட்சி. பச்சைப் பசேலென்ற மரகதக் கம்பளம் விரித்துவிட்டது போன்ற எழில்.

மாயவரம் ஜங்ஷனில் வாங்கிச் சாப்பிட்ட இரண் டணாப் பொட்டலத் தயிர்ச்சாதத்தின் வாசனை அகலு முன், அந்த ஞாபகத்துடன் சீகாழி ஸ்டேஷனில் போய் இறங்கியதும் நான் கண்ட காட்சி, வரிசை வரிசையாக அரிசி மூட்டைகள் ஏற்றப்பட்டிருந்த ரெயில்பெட்டிகளானால், 'சோழவளநாடு சோறு டைத்து' என்று சொன்னதில் என்ன தப்பு?

வைத்தீசுவரன் கோயில், சீகாழி முதலியன நெல் வயல்களுக்குப் பெயர்பெற்ற ஊர்கள். தென்னாட்டில் பெரும் பகுதியான நெல்லும் அரிசியும் இங்கிருந்து தான் இலங்கைக்கும் வேறிடங்களுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இலங்கையிலிருந்து சென்ற

எனக்கு, மாணிக்கவாசகர் யாத்திரையில் பல நாட்களாக மனம் லயித்துப் போய், வீடு வாசலையும் சொந்த ஊரையும் மறந்து, தன்னந்தனியே சீகாழி ஸ்டேஷனில் போய் இறங்கியதும் பக்கத்திலே அரிசி மூட்டைகளாகவே ஏற்றப்பட்டிருந்த ரெயில் பெட்டிகளின் மேலெல்லாம் சுண்ணும்புக் கட்டியினுல் ' சிலோன் ' என்று அடையாளம் போடப்பட்டிருந்ததைப் பார்த்ததும் ஊரைப்பற்றியும் வீடு வாசலைப் பற்றியும் உற்ருர் உறவினர் நண்பரைப் பற்றியும் ஞாபகம் தோன்ற ஆரம்பித்தது. எனக்குச் சோறு தரும் சோழவளநாட்டை என் கண்கொண்டு பார்த்த திருப்தியும் ஏற்பட்டது !

## 2

தமிழுக்கும் பொதிய மலைக்கும் என்ன சம்பந்தமுண்டோ அத்தகைய தொடர்பு சைவத்துக்கும் சீகாழி ஸ்தலத்துக்கு முண்டு. 'வேத நெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க' வந்த சிவஞானக் கன்ருகிய திருஞானசம்பந்தர் பிறந்த ஸ்தலம் சீர்காழி. இறைவன் தாயும் தந்தையுமான அம்மையப்பர் வடிவில் உலக முய்யக் காட்சி கொடுத்த பழம்பதி. சம்பந்தரும் சுந்தரரும் நாவுக்கரசரும் இதற்குப் பல தேவாரப் பதிகங்கள் பாடிச் சூட்டியிருக்கிருர்கள். சீகாழிக்குப் பன்னிரண்டு பெயர்கள் வழங்கின.

**பிரமபுரம் வேணுபுரம் புகலிபெரு வெங்குருநீர்ப்**
**பொருவில்திருத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமுன்**
**வருபுறவஞ் சண்பைநகர் வளர்காழி கொச்சைவயம்**
**பரவுதிருக் கழுமலமாம் பன்னிரண்டு திருப்பெயர்த்தால்**

என்று சேக்கிழார் பெரியபுராணத்தில் காணப்படு கிறது. பிரமபுரம் அடியிலும், தோணிபுரம் இடை யிலும், சட்டைநாதம் அதன் மேலுமான தலம் என்று சொல்வார்கள்.

உலகமெல்லாம் ஒரு காலத்தில் பெருவெள்ளத் திலே மாள, நோவா என்பவனது தோணி மாத்திரம் மிதந்த கதை மேல்நாட்டுப் புராணங்களில் காணப்படு கிறது. அதுபோல் நம்முடைய ஐதிகத்திலும், சகல லோகமும் அழிந்துபோகும் பிரளய காலம் என்று ஒன்றுண்டு. அப்போது உலகம் முழுவதும் ஒரே வெள் ளப் பெருக்கில் அழிந்து போக, இறைவன் ஒருவனே ருத்திர மூர்த்தியாக நின்று சுடுகாட்டில் நர்த்தனம் புரிவான்.

*பெருங்கடல் மூடிப் பிரளயங் கொண்டு பிரமனும்போய்*
*இருங்கடல் மூடி இறக்கும் ; இறந்தான் களேபரமும்*
*கருங்கடல் வண்ணன் களேபர மும்கொண்டு கங்காளராய்*
*வருங்கடல் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே.*

பிரமனும் விஷ்ணுவும் இறந்துபோவார்கள் ; படைத் தலும் காத்தலும் உலகத்தில் அற்றுப்போக, ருத்திர மூர்த்தியே மீண்டும் உலகம் தோன்றுதல் வேண்டி நின்று சிருஷ்டி நடனம் புரிவான். அப்படிப்பட்ட பிரளய வெள்ளத்திலே, நோவாவின் கலம்போல இந்தச் சீகாழி என்ற ஸ்தலம் தோணியாக மிதந்த தென்று சொல்வர். அதனால் **தோணிபுரம்** என்ற பெயர் பெற்றது.

*நிலையும் பெருமையும் நீதியும் சால அழகுடைத்தாய்*
*அலையும் பெருவெள்ளத் தன்று மிதந்தஇத் தோணிபுரம்*

என அப்பர் சுவாமிகள் பாடினர். இத்தலத்து இறைவன் பெயர் தோணியப்பர்.

ஏறக்குறையப் பதின்மூன்று நூற்றுண்டுகளின் முன்பு சீகாழியில் சிவபாதவிருதயருக்கும் பகவதியாருக்கும் பிறந்த குழந்தை யொன்று சைவ உலகத்தையே அதிரச் செய்துவிட்டது. புத்தமும் சமணமும் இருந்த இடம் தெரியாது அகன்றுபோகக் காரணமாயிருந்தது. சீகாழிப்பதிக்கு என்றுமில்லாப் பெருமையை நிலைக்கச் செய்துவிட்டது. அந்த அற்புதக் குழந்தையின் பெயர் திருஞானசம்பந்தன். மூன்ருண்டு நிரம்பப் பெருத அந்தப் பிள்ளையாரோடு தாயும் தந்தையும் தோணியப்பர் சந்நிதியிலுள்ள பிரம்ம தீர்த்தத்தில் நீராடச் சென்றார்கள். சென்று, குழந்தையைக் கரையிலே விட்டுவிட்டுப் பெற்ருர் இருவரும் குளத்திலே மூழ்கிய வேளை, பிள்ளை பசியால் அழுதது. முன்னை வினையில் பழுத்த பேறுள்ள குழந்தையாகையால், அந்த அழுகையைக் கேட்டுச் சிவபிரானே உமாதேவியாரோடு தோன்றி அம்மையாரைக் கொண்டு ஒரு பொற் கிண்ணத்தில் திருமுலைப் பாலைக் கறந்து ஊட்டச் செய்தார். பிள்ளையின் அழுகை தீர்ந்தது; தெய்வப் பெற்ருரும் மறைந்துவிட்டனர்.

நீராடிக் கரைசேர்ந்த பெற்ருர், குழந்தையின் அதரங்களில் புத்தம் புதிய பால் வடிந்துகொண்டிருக்கக் கண்டு சந்தேகித்து வினவியபோது, குழந்தை சிறிதும் தயக்கம் இல்லாமல் கோபுரத்தைச் சுட்டிக் காட்டிவிட்டு,கண்டார்அதிசயிக்கும்வண்ணம் "தோடுடைய செவியன் " என்று அடியெடுத்துத் தீந்தமிழில் அழகான பாடல்களைப் புனைந்து தேவாரமாகச் சூட்டியது. சர்வலோக மாதாவின் ஞானப்பால் உண்ட



21. விருத்தாசலம். (பக்கம் 100)

காரணத்தால் அந்தக் குழந்தை ஞானசம்பந்தன் என்ற பெயரைப் பெற்றது. சைவம் தழைக்க வந்த ஒரு பிறவி அது.

ஞானசம்பந்தர் சைவ சமயாசாரியர் நால்வரில் ஓர் இடம் பெற்றவர். அவர் பாடிய தேவாரப் பதிகங்களில் பரந்து பட்ட கல்விப் பயிற்சியின் சின்னம் காணப்படினும், பயிலாதே சுயமாகப் பாடுந் திறன் படைத்தவராகவே பலர் நம்புகின்றனர். அவர் காலத்திலே சமண சமயம் வலுவுற்றிருந்தது. சைவத்துக்கும் சமணத்துக்கும் இடையிலிருந்த போட்டியில் இருபக்கத்திலும் பழிக்குப் பழி நடவடிக்கைகளும் அதிகம் இருந்தன. இதுகாரணமாக ஓரிடத்திலே பல சமணர்கள் கழுவேற்றப்பட்டதாகச் சொல்வர். இன்றும் சீகாழியிலே 'சமணர் கழுவேற்ற விழா' ஒன்று நடைபெறுகிறது.

## 3

'சிந்தித் தெழு மனமே நினையா முன் கழுமலத்தை' என்று நாவுக்கரசர் சொன்னதுபோல் அம்மையப்பரை மனத்தில் தியானித்துக்கொண்டு, பிரமதீர்த்தத்தில் மூழ்கி ஞானசம்பந்தர் ஞாபகத்துடன், ஞானம் வரப் பெறுவிட்டாலும் அந்த எண்ணமே ஒரு புனித சக்தியைத் தரும் என்ற நம்பிக்கையோடு, தோணியப்பரையும் வழிபட்டுக்கொண்டு நானும் புறப்பட்டேன்.

மாணிக்கவாசக சுவாமிகள் சீகாழிக்கு வந்து போனதாகக் கூறும் புராணம், திருவாசகத்தில் பிடித்த பத்து என்ற பதிகத்தை அவர் அங்கிருந்து பாடினார் என்று குறிப்பிடுகிறது.

*அம்மையே அப்பா ஒப்பிலா மணியே*
*அன்பினில் விளைந்தவா ரமுதே*
*பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்*
*புழுத்தலைப் புலையனேன் றனக்குச்*
*செம்மையே யாய சிவபதம் அளித்த*
*செல்வமே சிவபெரு மானே*
*இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்*
*எங்கெழுந் தருளுவ தினியே.*

இது அந்தப் பிடித்த பத்து என்ற பதிகத்தில் ஒரு செய்யுள். சீகாழிச் சுவாமி பெயர்களில் ஒன்று **அம்மையப்பர்** என்பதாகையால் மாணிக்கவாசகர் 'அம்மையே யப்பா!' என்று விளித்துப் பாடினர். இதே பதிகத்தில் அவர்,

*பால்நினைந் தூட்டும் தாயினும் சாலப்*
*பரிந்துநீ பாவியே னுடைய*
*ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி*
*உலப்பிலா ஆனந்த மாய*
*தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த*
*செல்வமே சிவபெரு மானே*

என்று சொல்லிப் பாடுவது, இறைவன் எந்த உயிரையும் எவ்வளவு அன்புடன் அருள் கொடுத்துக் காக்கத் தயாராயிருக்கிறார் என்ற தத்துவத்தைக் காண்பிக்கிறது. மாணிக்கவாசகர் தம்முடைய அருமையான திருவாக்காகிய திருவாசகம் முழுவதிலும், கடைப்பட்டுக் கிடந்த தம்மை வலிய அழைத்து இறைவன் அருள் தந்ததாகவே குறிப்பிடுகின்றார். அதற்குத் தம்முடைய தகுதி போதாதென்று பகிரங்கமாகவே,

*நான்தனக் கன்பின்மை நானும்நா னும்மறிவோம்*
*தானென்னை ஆட்கொண்ட தெல்லாரும் தாமறிவர்*

என்று சொல்லுகின்றார்.

சீகாழிப் பதியில் இவ்வாறு தம் குருநாதனின் வடிவைத் தியானித்து மாணிக்கவாசகர் பாடிக் கொண்டு சில நாள் தங்கிப் புறப்பட்டார். அடுத்தது, வடக்கே தில்லை ஸ்தலமாகிய சிதம்பரத்தின் கோபுரம் தென்பட்டது. நேரே அங்கே போய்விடலாமென்ற விருப்பம் ஏற்பட்டதாயினும், இன்னும் பல ஸ்தலங்களைப் போய்த் தரிசித்துக்கொண்டு, இறுதியில் வந்து தம் பிற்கால வாழ்க்கையைச் சிதம்பரத்தில் கழிக்கலாமென்று விரும்பி மேற்குத் திசையைநோக்கி, திருமுதுகுன்றம் என்ற விருத்தாசலத்துக்குப் போனார்.

---

## பதினாறும் அத்தியாயம்

*சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று*
*பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்*

சீகாழியிலிருந்து ரயிலேறிக் கடலூர் மார்க்கமாக விருத்தாசலம் போய்ச் சேர்ந்தேன். வடநாட்டிலுள்ள காசிக்குச் சமானமாகச் சொல்லப்படும் இந்தப் பதி, தென்னாட்டிலே மிக விசேஷமுடைய தொன்றாகக் கருதப்படுகிறது. காசிக்குச் செல்ல முடியாதவர்கள் முதுகுன்றத்தைத் தரிசித்து அயலிலே யோடும் மணிமுத்த நதியில் மூழ்கினால் தாம் விரும்பிய பலனைப் பெறுவார்கள்.

பழைய கோயில்; பெரிய கோபுரங்களைக் கொண்டது. வன்னியும் கிணறும் பெற்ற திருவிளையாடல் ஞாபகமாக உட்பிராகாரத்திலே ஒரு வன்னி மரமும்

இணறும் காணப்படுகின்றன. இந்த மரத்தின் பக்கத் தால் பிரதக்ஷிணம் செய்பவர்கள், கைக் கெட்டக்கூடிய கிளைகளிலிருந்து இலைகளை யுதிர்த்து அர்ச்சனை செய் யும் வழக்கமிருந்து வருகிறது. ஒருகாலத்திலே இந்தக் கோயிலைப் புதுப்பித்துக் கட்டிய பிராமணர் திருப்பணி வேலைக்குப் போதிய பணமின்றிக் கவலைப்பட்டபோது, பழமலைநாதர் கனவில் தோன்றி, வன்னி மரத்திலுள்ள இலைகளை யுதிர்க்கும்படி ஏவினாராம். அப்படியே அந்த பக்தர் செய்ய, இலைகள் யாவும் பொன்னாக மாறிய தென்றும் அந்தப் பொன்னைக்கொண்டு அவர் திருப் பணியைச் செய்து முடித்தார் என்றும் கதையுண்டு. அந்த ஞாபகத்திலேயே இன்றும் வழிபாட்டுக்குச் செல்பவர்கள் வன்னி மரத்திலிருந்து இலைகளை உருவி உருவி அர்ச்சித்து வருகிறார்கள். எப்பொழுது பார்த் தாலும் அந்த மரம் இலைகளற்று வெறுமையாகவே காணப்படுகிறது !

விருத்தாசலத்துக்கு மதிப்பைக் கொடுப்பது அதன் பக்கலில் ஓடும் மணிமுத்த நதி. முத்துப் போன்ற நீர், பார்க்க இன்பமாயிருக்கிறது. ஆனால் நான் போனவேளை யென்னவோ, ஆற்றில் ஸ்நானம் செய்வதற்கு அவ்வளவு போதுமான ஓட்டமில்லாம லிருந்தது. இரு கரைகளுக்கு மிடையிலுள்ள ஆற்றுப் படுக்கையையும் வெண்மணலின் விஸ்தீரணத்தையும் பார்த்தால் மாரிக் காலத்தில் மிகப் பெரிய வெள்ள மாகப் பாயும் என்று தெரிகிறது.

> எத்திசையும் திரையேற மோதிக் கரைகள்மேல்
> முத்தி முத்தாறு வலம் செயும் முதுகுன்றரே

என்று சொல்லியிருக்கிறார் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

'ஆற்றிலே போட்டுவிட்டுக் குளத்திலே தேடுதல்' என்று வழங்கும் பழமொழி ஆரம்பித்தது இந்த மணிமுத்த நதியிலிருந்துதான். சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு இறைவனருளால் கிடைக்கப் பெற்ற பொன்னை அவர் விருத்தாசலத்தில் இம் மணிமுத்த நதியிலே போட்டிருந்தார். பின் ஒரு நாள் அவர் திருவாரூரில் தமது காதலி பரவையாரைப் போய்க் கண்டபோது அவள், "என்ன கொண்டுவந்தீர் ?" என்று கேட்டாள். அதற்கு அவர், "முதுகுன்றத்திலே மணிமுத்த நதியில் சிறிது பொன்னைப் போட்டு வைத்தேன். இங்கே கோயிலுக்கு மேற்புறத்திலுள்ள கமலாலயத்திலே அதனை எடுத்துத் தருகிறேன்" என்று சொல்லி, போய்க் குளத்திலிறங்கித் தேடலுற்றார். ஆனால் அதைக் காணவில்லை. பரவையார் பரிகசித்து, "என்ன, ஆற்றிலே போட்டுவிட்டுக் குளத்திலே தேடுகிறீர்களே" என்று சொல்லி நகைத்தாள். ஆயினும், சுந்தரமூர்த்தி உடனே தம் தெய்வத்தை வழிபட்டு வேண்டி அந்தப் பொன்னை அங்கிருந்துதானே எடுத்துக் கொடுத்துவிட்டாராம்.

## 2

மாணிக்கவாசகர் இந்தத் திருமுதுகுன்றம் என்ற விருத்தாசலத்திலே வந்து ஏதாவது திருவாசகப் பதிகம் பாடியதாக எவ்விதச் சான்றுமில்லை. எல்லா யாத்திரிகர்களைப் போலவும் அவர் வந்து மணிமுத்த நதியில் தம் பிறவிப் பாசத்தைக் கழுவிவிட்டு பழமலை நாதரையும் வழிபட்டுக்கொண்டு மற்றும் தலங்களைத் தரிசிக்கப் புறப்பட்டிருப்பார்.

கோயிலின் வடக்கு வீதியில் ஒரு பழைய சத்திரம். அங்கிருந்த காவற்காரன் எனக்கு ஓர் அறை அமர்த்தித் தந்தான். வெளியே ஒரு ஹோட்டலில் போய் ஏதாவது சாப்பிடலாமென்று அறைக் கதவை மூடிக்கொண்டு புறப்படத் தயாராகும்போது, உடல் ஒட்டி வறண்டுபோன பிராமணர் ஒருவர் மிகவும் வறிய உடையுடன் பரிதாபமான நிலையில் காத்து நின்றார். யாரோ பிச்சைக்காரரோ அல்லது வழிகாட்டியோ என்று கருதிக்கொண்டு நான் முதலில் கவனிக்காது போய்விட எத்தனித்தேன். பின்னர், யார் என்றுதான் கேட்டுப் பார்ப்போம் என்று விசாரித்தேன். எங்கேயோ தூர தேசத்துப் பிராமணர்; வறுமை காரணமாக தாமும் தம் மனைவியும் நாலைந்து சிறு குழந்தைகளும் இங்கு வந்து சத்திரத்திலேயே ஒரு மூலையில் 'கிளப்' வைத்திருக்கிறதாகச் சொன்னார். அன்றிராப் போஜனத்தை அங்குத்தானே வைத்துக்கொள்ளும்படி கேட்டுவிட்டு, அப்பொழுது இரண்டு நாட்களுக்கு முன்புதான் ஆரம்பிக்கப்பட்ட கிளப் என்றும், முதலிலே ஏதாவது கொடுத்துதவினால்தான் அதைக் கொண்டு அரிசியோ காய்கறியோ வாங்கிச் சமையல் செய்ய இடம் கொடுக்கும் என்றும் அவர் தெரிவித்தார். 'ஏதோ நடக்கிறது நடக்கட்டும்; யாத்திரைக்கு வந்த இடத்தில் தருமமுமாகிறது, நமக்குச் சாப்பாடுமாகிறது' என்று நினைத்து இரண்டு ரூபாயைக் கொடுத்து, அன்றிராச் சாப்பாட்டுக்கு ஒழுங்கு செய்யும்படி சொல்லிவிட்டு, சற்று நேரம் மணிமுத்த நதியின் வெண்மணற் பரப்பிலே போய் உட்கார்ந்திருந்தேன்.

ஒரு சாண் ஆழத்தில் தெள்ளிதா யோடிக்கொண் டிருந்த அந்த நதியின் நீரும், பரந்த வெளியும், அகண்ட நிர்மலமான ஆகாயமும், மஞ்சள் படிந்த அடிவானமும் எல்லாம் சேர்ந்து அவ்வேளையில் ஒரு நிம்மதியை யளித்தன. ஜன நெருக்கடி நிறைந்த நகரத்தின் மத்தி யில், மோட்டாரும் டிராம் வண்டியும் ரெயிலும் கட கடா என்று மோதிக்கொண்டு சதா இரைச்சலா யிருக்கும் சுற்றுப்புறத்தில், கோயில் என்று கட்டி வைத்துச் சம்பிரதாயத்துக்காக வழிபடுகிறார்களே நம்முடைய மக்கள், அவர்கள் வேண்டிய தெய்விக அருளைப் பெறுவதற்கு ஏற்ற மன நிம்மதியை யடைய முடியுமா? கிராமச் சூழலும், இயற்கை யழகும், பரந்த நீரோட்டமும், நிர்மலமான வானமுந்தான் அத்தகைய மன நிம்மதியை அளித்து, மனித உள்ளத் தைப் புனித மடையச் செய்யும். விருத்தாசலத்தை மாணிக்கவாசகர் தேடிச் சென்ற காரணம், அந்த ஆற்றங்கரையில் உட்கார்ந்து வானத்தைப் பார்த்துக் கனவு கண்டுகொண்டிருந்த எனக்கு அந்த வேளையில் புலனாயிற்று.

சத்திரத்து ஐயர், சாதமும் ஒரு கறியும் ஒரு சாம் பாரும் தயாரித்து வைத்திருந்தார். கொஞ்சம்போல மோரும் இருந்தது. ஏழைப் பிராமணரிடம் நான் அந்த வேளையில் பக்குவமான ஹோட்டல் சாப் பாட்டையோ அல்லது ராஜோபசாரத்தையோ எதிர் பார்க்கவில்லை. ஏதோ கிடைத்ததை வாயில் போட்டுக் கொண்டு அவர்களையும் திருப்திப்படுத்திவிட்டு, மறு நாளே திருவெண்ணெய்நல்லூருக்குப் பஸ் ஏறிவிட்டேன்.

---

# பதினேழாம் அத்தியாயம்

*சிவனென யானும் தேறினன் காண்க !*
*அவனெனை யாட்கொண் டருளினன் காண்க !*

திருவெண்ணெய்நல்லூர் என்ற பெயரைக் கேட்டவுடன் முக்கியமான இரண்டு பெயர்கள் ஞாபகத்துக்கு வருகின்றன. திருநாவலூரில் பிறந்து, இங்கு வந்து சிவபெருமானுடன் வழக்குப் பேசிய சுந்தரமூர்த்தி ; சிவஞானபோதம் என்ற சைவசித்தாந்த சாஸ்திர முதனூலைச் செய்த மெய்கண்டதேவர். இப் பெரியார்களின் ஞாபகமாக, சாஸ்திரத்துக்கும் தோத் திரத்துக்கும் சம்பந்தம் பெற்ற திருவெண்ணெய் நல்லூரைப் போய்ப் பார்ப்பதென்றால் அதில் ஒரு பெருமை யிருக்கத்தான் செய்கிறது.

நம்பி ஆரூரர் என்ற சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பெயர்தான் திருவெண்ணெய்நல்லூருக்கும் அந்த ஸ்தலத்திலுள்ள கோயிலுக்கும் அழியாத பெருமை யைக் கொடுத்துள்ளது. சுந்தரர் மணம் புரிந்து கொள்ளப் போகையில் அதைத் தடுக்கவேண்டி வந்த சிவபெருமான், ஒரு கிழப்பிராமண வடிவுகொண்டு வந்து, " இவன் எனக் கடிமை யாகையால் மணம் செய்தலாகாது ; இவன் தந்தை எழுதித் தந்த ஓலை ஒன்று என்னிடமிருக்கிறது " என்று கூறினார். ஒன்று மறியாத சுந்தரர் கிழவரைப் பார்த்து, " பித்தனே, அப்பாலே போ " என்று சினந்து கூறவும், கிழவர், "பித்தனுயிருந்தா லென்ன, பேயனுயிருந்தா லென்ன ? நீ என் அடிமை அடிமைதான் !" என்றார். சுந்தர மூர்த்தி கோபங்கொண்டு கிழவர் கையிலிருந்த ஓலை



22. திருவெண்ணெய்நல்லூர். (பக்கம் 104)

யைப் பிடுங்கிக் கிழித் தெறிந்தார். ஆனால், கிழவர் இலேசான பேர்வழியாகக் காணப்படவில்லை. "இதைக் கிழித்தெறிந்து விட்டதால் எனக்கு மோசம் ஒன்றும் வந்துவிடவில்லை. திருவெண்ணெய்நல்லூரிலே இதன் மூல ஓலை யிருக்கிறது. அங்கே போய் இந்த வழக்கைத் தீர்த்துக் கொள்வேன்" என்று பிராது தொடுத்தார். எல்லோரும் திருவெண்ணெய்நல்லூர் சென்று, அந்தணர் சபையிலே வழக்குப் பேசியபோது, பிராமணக் கிழவர் மூல ஓலை ஒன்றைக் காட்டிக் கைச்சாத்தையும் வேறு ஒப்பத்துடன் ஒப்பிட்டுக் காட்டி அத்தாட்சிப் படுத்தினார். ஈற்றில் அந்தணர் யாவரும், "நம்பியாரூரர் வெண்ணெய்நல்லூர்ப் பித்தனுக் கடிமை" என்று தீர்ப்பளித்துவிட்டார்கள்.

தம் வீட்டைக் காட்டுவதாகக் கூறிய கிழவனார் திருவெண்ணெய்நல்லூர்க் கோயிலுக்குள்ளே போனவர்தாம், மாயமாய் மறைந்துவிட்டார்!

சுந்தரமூர்த்தி அப்போதுதான் தம்மை ஆட் கொள்வதற்காகவே இறைவன் இத்திருவிளையாடலைப் புரிந்தார் என்று உணர்ந்து, அங்கிருந்தபடியே, பித்தன் என்று தாம் திட்டிய வார்த்தையால் ஆரம்பித்து,

பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூ
[ ரருட் டுறையுள்
அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே

என்று பாடியருளினார். அருட்டுறை யென்பது திருவெண்ணெய்நல்லூர் ஆலயத்துக்குப் பெயர்.

இந்த அற்புதத்தின் காரணமாகத் திருவெண்ணெய் நல்லூர் அழியாப் புகழ் பெற்றுவிட்டது. இக்கோயி லின் சுவர்களிற் காணப்படும் பல கல்வெட்டுக்களில், 'தடுத்தாட்கொண்ட தேவர்', 'ஆளுடைய நம்பி' 'வழக்கு வென்ற திருவம்பலம்', 'ஆவணங்காட்டியாண் டான்' என்ற குறிப்புக்கள் காணப்படுகின்றன. கோயிலின் எதிரிலே சுந்தர மூர்த்திக்கு ஓர் ஆலயம் கட்டப் பட்டிருக்கிறது. சிவபெருமான் சந்நிதி வாயிலுக்கு மேலே இடப வாகனத்தில் இறைவன் எழுந்தருளிய மூர்த்தம் ஒன்று சிலையிலமைக்கப்பட்டி ருக்கிறது. கோயிலின் பிராகாரத்தில் வடகிழக்கு மூலையில் இடிந்துபோய் ஒரு மண்டபம் காணப் படுகிறது. இதனை 'வழக்கு வென்ற திருவம்பலம்' என்று சொல்கிறார்கள். ஆலயச் சுவர்களில் கல் வெட்டுக்கள் அநேகம் இருக்கின்றன.

## 2

சுந்தரமூர்த்தியின் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு. இதற்குப்பின் பதின்மூன்றாம் நூற்றாண் டின் முற்பகுதியில் திருவெண்ணெய் நல்லூரில் சிவ ஞானபோதம் என்ற சைவசித்தாந்த சாத்திர நூலைச் செய்தவராகிய மெய்கண்ட தேவர் பிறந்தார். இதே சிவஞானபோத நூலைத்தான் மாணிக்கவாசகர் திருப் பெருந்துறையில் தக்ஷிணாமூர்த்தியாக எழுந்தருளி யிருந்த தமது குருநாதன் கையிலே கண்டுவிட்டு அது என்ன என்று கேட்டதாக அறிந்தோம். ஆனால், சிவஞானபோதம் என்ற தமிழ் நூல் சமஸ்கிருத ஆகமத்திலிருந்து பெறப்பட்டது. ரௌரவ ஆகமத்தி

லுள்ள பன்னிரண்டு சூத்திரங்களையே தமிழில் கொண்டுவந்ததாக ஆராய்ச்சி செய்தவர்கள் கூறு கின்றனர். மெய்கண்டாருக்கு முன்னரேயே பல நூற் றுண்டுகளாகச் சைவாகமங்களிலிருந்து சித்தாந்தக் கருத்துக்கள் வழங்கிவந்தன. மெய்கண்டார் அவற்றை யெல்லாம் திரட்டித் தமிழிலே மிகவும் நுட்பமான பன்னிரண்டு சூத்திரங்களில் அமைத்து ஒரு தனித் தத்துவ நூலாக்கிவிட்டார். அவருடைய மாணுக்க ராகிய அருணந்தி சிவாசாரியார் என்பவர் சிவஞான சித்தியார் என்ற ஒரு விருத்தி எழுதியுள்ளார். இவை யிரண்டும், மற்றும் இருபாவிருபஃது, உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம் முதலியனவும் சேர்ந்த பதினுன்கு நூல் கள் சைவர்களின் ஒப்புயர்வற்ற தரிசன நூல்கள். சைவசித்தாந்த தரிசனத்துக்கு இணையான அல்லது உயர்ந்த தரிசனம் வேறு எந்த மொழியிலும் காண முடியாது என்று பல அறிஞர்கள் சொல்லியிருக்கிருர் கள். மாணிக்கவாசகர் வாழ்க்கையையும் அவர் திரு வாசகத்தையும் உண்மையாக அறிந்து உணரவேண்டு மானுல், சைவ சித்தாந்தத்தின் உட்பொருளை நன்கறிந்திருத்தல் அவசியம். அப்பொழுதுதான் மாணிக்கவாசகரின் வாழ்க்கைத் தத்துவம் புலனுகும்.

மெய்கண்டார் மடம் என்று ஒரு மடம் திருவெண் ணெய்நல்லூரிலே கோயிலுக்கு மேற்கே தெரு வோரத்தில் இருக்கிறது.

திருவெண்ணெய்நல்லூர் என்ற பெயர், உமா தேவியார் வெண்ணெயினுல் ஒரு கோட்டை கட்டி அதனிடையே பஞ்சாக்கினியை வளர்த்துத் தவம் புரிந்த காரணத்தினுல் ஏற்பட்டதென்பர். பெண்ணை

நதி இதன் வடக்கில் பாய்கிறது. இதற்கு முன்பு அது வேறு வழியாக ஓடியது. அதனை இப்போது மலட்டாறு என்று சொல்வார்கள்.

இந்த ஸ்தலம் பல போர்முனைகளைக் கண்டதாகவும் கூறப்படுகிறது. திருவெண்ணெய்நல்லூர் கி. பி. 1760-ம் ஆண்டிலேதான் ஆங்கிலேயரால் முற்றுகை செய்து கைப்பற்றப்பட்டது.

மாணிக்கவாசகர் திருவெண்ணெய்நல்லூருக்கு வந்தபோது எவ்விதத் திருவாசகப் பதிகமும் பாடியதாகக் கூறப்படவில்லை. ஆனால் தமது சைவ சித்தாந்த அறிவுக்கு மேலும் சந்தேக நிவிர்த்தி பெற்று, ஏற்கெனவே இங்கிருந்த பெரியார்களுடன் கலந்து பேசிச் சென்றிருக்கலாம். மெய்கண்ட தேவருக்கு முன் இருந்தவர்களும் ஆகமங்களறிந்து சித்தாந்தக் கருத்தைக் கற்றவர்களா யிருந்திருத்தல் கூடும். இங்கிருந்து மாணிக்கவாசகர் புறப்பட்டு திருவண்ணாமலைக்குச் சென்றார்.

---

## பதினெட்டாம் அத்தியாயம்

*கண்ணார் கழல்காட்டி நாயேனை யாட்கொண்ட*
*அண்ணா மலையானைப் பாடுதுங்கா ணம்மானாய்.*

திருவெண்ணெய்நல்லூரி லிருந்து திருவண்ணாமலைக்குப் பஸ்ஸிலே போனால் இடையிலே திருக்கோவிலூர் என்ற ஸ்தலத்தைப் பார்க்கலாம். இங்கே ஒரு பெரிய விஷ்ணு ஆலயம் உண்டு. திருவெண்ணெய்நல்லூரும் திருக்கோவிலூரும் வெல்லத்துக்குப் பெயர் போன இடங்கள். எங்கே பார்த்தாலும் ஓரேகரும்புக்

காடாயிருக்கும். இந்த ஊர் மக்கள் மிக அன்னியோன் னியமாக வாழ்பவர்களென்றும், ஒருபோதும் சண்டை சச்சரவிட மாட்டார்களென்றும், இதற்குக் காரணம் கரும்புப் பயிர்ச் செய்கைதானென்றும் பஸ்ஸில் சென்றுகொண்டிருக்கையில் ஒரு பிரயாணி என்னிடம் சொன்னார். அப்படிப் பூசல் ஏற்பட்டால் ஒரு தீக் குச்சி கொண்டு ஒருவரின் ஆஸ்தியையே அழித்து விடலாமாம். கண்ணாடி வீட்டிலே இருப்பவர்கள் கல்லெறிதலாகாதென்பார்கள். கரும்புத் தோட்ட முள்ளவர்கள் அயலாருடன் விரோதம் பாராட்டு தலும் தீங்குதான். எல்லாத் தேசங்களிலும் கிராமம் கிராமமாகக் கரும்புப் பயிர் போட்டுவைத்தால் வெல் லம் கிடைப்பது ஒருபுறமிருக்க, மனிதருக்கிடையே சண்டை சச்சரவுகளும் போய்விடுமல்லவா ?

அழகான இந்தக் கரும்புத் தோட்டங்களையும் பச்சென்ற நெல் வயல்களையும் தாண்டி மாணிக்க வாசகர் திருவெண்ணெய் நல்லூரிலிருந்து வந்து திருவண்ணாமலை சேர்ந்தார். ஆவணி மூலத்திலே நரியைப் பரியாக்கிய திருவிளையாடலும், அதன்பின் மண்சுமந்த திருவிளையாடலும் நிகழ்ந்தபின் புறப்பட்ட வர், நான்கு மாத காலமாகப் பல ஸ்தலங்களுக்கும் சென்று தரிசித்துவிட்டுத் திருவண்ணாமலைக்கு வந்த போது மார்கழி மாதம் பிறந்துவிட்டது.

திருவண்ணாமலை யெங்கும் ஒரே பசுமைத் தன்மை நிலவியது. பொய்கைகளெல்லாம் நீர் நிறைந்து தாமரையும் குவளையும் சடைத்து வளர்ந்து பூத்திருந் தன. அதி காலையிலே வண்டுகளின் ரீங்காரமும் புள்ளினங்களின் ஆரவாரமும் நிம்மதியான வெளிப்

பரப்பில் ஒலித்துக்கொண்டிருக்க, மலைக் கோயிலி லிருந்து மங்களகரமான மணிச்சத்தம் சங்கு சேமக் கலம் சேர்ந்தெழ, இவற்றையெல்லாம் பின்னணியாக வைத்து, இல்லங்கள்தோறும் துயிலெழுந்த பெண்கள் சுருதி கூட்டிப் பாடும் இனிய கீதங்களின் ஒலியும் இசைந்து தெய்வகானத்தைக் கிளப்பின. உதய காலத் திலே இயற்கையின் எழில் மிக்க காட்சி ரமணீயமா யிருக்க, அதற்கேற்றாற்போலக் காதுக்குமின்பங்கொடுக் கும் நாதம் பிறந்தால் இருதயம் பெருமிதம் கொள்வ தியல்பு. மாணிக்கவாசகரும் இந்த ஸ்தலத்தில் வந்து கண்ட காட்சிகளால் பெருமித மடைந்து அவர் திருவாசகத்தில் ஒப்பற்ற பதிகங்களான திருவெம்பாவை திருவம்மானை ஆகிய இரண்டையும் கசிந்துருகிப் பாடினார்.

வைகறைப் போதிலே திருவண்ணாமலையில் பெண் களெல்லாரும் துயிலெழுந்து நீராடச் செல்லுமுன்னர், ஒவ்வொரு வீடாகச் சென்று மற்றும் தம் தோழியர் களைத் துயிலெழுப்பி அழைத்துக்கொண்டு அண்ணா மலையான் புகழைப் பாடிச் செல்வர். இந்தக்காட்சியை வருணிக்கும் மாணிக்கவாசகர், துயில் கொள்ளும் ஒருத்தி மற்றவர்களின் அழைப்பைக் காதிற் போட்டுக் கொள்ளாது வாளா கிடப்பதை அப்பெண்கள் கூற்றாகவே பாடுகின்றார் :

ஆதியு மந்தமு மில்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலி
[போய்

*வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து*
*போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டிங்ஙன்*
*ஏதேனு மாகாள் கிடந்தாள்என் னேயென்னே*
*ஈதேஎந் தோழி பரிசேலோ ரெம்பாவாய்.*

“முதலும் இறுதியுமில்லாத எங்கள் சோதியை நாம் பாடுகின்றோம். அதனைக் கேட்டும், அடி பெண்ணே, இன்னுமா துயில் கொள்ளுகின்றாய்? உன் காதென்ன செவிடா?” என்கிறாள் ஒருத்தி. ஆனால் மற்றொருத்தி பரிகசிக்கிறாள்; “போடி போ; அவள் என்னவானாள் என்று நினைக்கிறாய்? நம்முடைய இறைவன், அவள் காதலன், புகழை நாம் பாடியது தெருப்பக்கத்திலிருந்து அவள் காதிலே பட்டவுடன் பெருமிதம் கொண்டு, ஆனந்த பரவசத்தால் விம்மி விம்மி மெய்ம் மறந்து தன் படுக்கையிலிருந்து அப்படியே புரண்டு கீழே விழுந்து விட்டாளடீ! பாவம், அவள் ஒன்றுமே செய்ய வலியிழந்துபோய்க் கிடக்கிறாள். இதுதானடி விஷயம்!” என்று கிண்டல் செய்கிறாள்.

இப்படியாகப் பெண்களின் விளையாட்டு மொழிகளிலேயே இறைவன் புகழை அமைத்தும், அவ்விறைவனுகிய பதியைத் தேடி ஆன்மாவாகிய பசு ஆவலுறுவதாகக் காட்டியும், மாணிக்கவாசகர் மிக அழகாகப் பாடினார். இத் திருவெம்பாவையில் முதல் எட்டுப் பாடல்கள் தோழியரைத் துயிலெழுப்பும் பாவனையிலுள்ளன. அதன் பின்னருள்ளவை நீராடும் பாவனையிலும் பதியை வழிபடும் பாவனையிலும் உள்ளன.

நமக்கு ஒரு வருஷ காலம் தேவர்களுக்கு ஒரு நாள். இதில் ஆடி மாதம் முதல் மார்கழி வரையும் இராத்திரியாகவும், தை முதல் ஆனி வரையும் பகலாகவும்

கொள்ளப்படும். மார்கழி மாதம் உதய காலம். இவ்வுதய காலமே இறைவனது சிருஷ்டிக்கு ஏதுவான காலம். இறைவன் சிருஷ்டிக்குக்காரணம் அவர் வல்லமை; சிவனது சக்தி. அந்தச் சக்தியின் மூலமே சர்வேசுவரன் எல்லா உயிர்களையும் படைக்கிறான். உயிர்களுடன் ஐக்கியப்பட்டு இரண்டற நிற்கும் சிவன் தனது ஞான சக்தியைக் கொண்டு படைத்தல், காத்தல், அழித்தல், அருளல், மறைத்தல் என்னும் ஐந்து தொழில்களையும் நடத்துவான். இதுவே சைவ சித்தாந்தம். திருவெம்பாவையிலும் மாணிக்கவாசகர் இச் சிவ சக்தி தத்துவத்தையே அமைத்துப் பாடினார். பக்குவ மடைந்த உயிராகிய பசுவைப் பதியாகிய இறைவனது ஞானசக்தி வந்து, அஞ்ஞான இருளாகிய துயிலை அகற்றி அவனை யடையச்செய்யும்.

உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம் [வோம்
உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே பாங்கா
அன்னவரே எங்கணவ ராவார்.

இறைவனுடைய அம்சமே உயிர்களுக்கு ஞானோபதேசம் செய்யும் குரு வடிவு. அக் குருவுக்கு ஆட்படுதலே தெய்வ உண்மையை அறிவதற்கு முக்கிய வழி. மாணிக்கவாசகர் இத் தத்துவத்தைத் தம் திருவாசகம் முழுவதும் கூறியுள்ளார். அவர் வாழ்க்கையே அது தான்.

திருவண்ணாமலையில் அவர் பாடிய இன்னொரு பதிகம் திருவம்மானை. ஆறு பெண்கள் ஒரு வட்டத்தி லுட்கார்ந்து சிறு பந்துகளை உருட்டி விளையாடுவது அம்மானை. இதற்கு அவர்கள் ஒரு கீதமும் பின்னணி



23. மெய்கண்டார் மடம், திருவெண்ணெய்நல்லூர். (பக்கம் 106)



24. திருவண்ணாமலை. (பக்கம் 114)

யாகப் பாடுவர். இங்கே மாணிக்கவாசகர் அவர்கள் கூற்ருகவே, உலக மேடையிலுள்ள நாடக மக்கள் பரம்பொருளாகிய குரு வுபதேசத்தைக் கேட்டு ஆனந்தமுற்றுப் பாடியுதாகப் பாடியுள்ளார். ஒன்று, பிரம விஷ்ணுவுக்கும் எட்டாத சிவம் ; இரண்டு, பிறவிப் பிணி போக்க இறைவன் குரு வடிவாகத் தோன்றியமை ; மூன்று, திருப் பெருந்துறையில் வழி பாடு ; நான்கு, மூவாயிரவரில் ஒருவராய்த் தில்லையில் இறைவன் இருத்தல் - இவைகளே திருவம்மானைப் பதிகத்தில் பாடப்பட்டுள்ளன.

விண்ணுளும் தேவர்க்கு மேலான வேதியனை
மண்ணுளும் மன்னவர்க்கு மாண்பாகி நின்ருனைத்
தண்ணூர் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டானைப்
பெண்ணுளும் பாகனைப் பேணு பெருந்துறையிற்
கண்ணூர் கழல்காட்டி நாயேனை யாட்கொண்ட
அண்ணு மலையானைப் பாடுதுங்கா ணம்மாளுய்.

## 2

எல்லா ஸ்தலங்களிலும் போலவே திருவண்ணு மலையிலும் சத்திரங்களுக்குக் குறைவில்லை. தென் ஞட்டு வேளாளர் மேற்பார்வையிலிருக்கும் 'அப்பர் சுவாமிகள் மடம்' என்ற விடுதியில் போயிறங்கி வெளியே ஹோட்டல் ஒன்றிலே சாப்பாட்டுக்கும் ஒழுங்கு செய்துகொண்டேன்.

தென்ஞட்டிலுள்ள மிகப் பெரிய கோயில்களுள் திருவண்ணுமலைக் கோயில் ஒன்ருகும். இக்கோயிலின் விஸ்தீரணம் ஏறக்குறைய இருபத்தைந்து ஏக்கர் என்று சொல்வர். ஏழு பிராகாரங்களை உடையது. ஐந்தாம் பிராகாரத்திலிருந்து உள்ளே கிழக்குப்

பக்கத்தில் நுழையும்போது எதிர்ப்படுவது 'வல்லாள மகாராஜன் கோபுரம்'. முருகப்பிரான்மீது திருப்புகழ் பாடிச் சாகா வரம் பெற்ற அருணகிரி நாதர் என்ற புலவர் இக்கோபுரத்தின் மீதிருந்துதான் கீழே விழுந்து உயிர்விடத் துணிந்தபோது, அவரை முருகவேள் காப்பாற்றினுர் என்று சொல்வர். இதற்கு வடக்குப் பக்கத்தில் இப்போது முருகக் கடவுளுக்கு ஒரு கோயில் காணப்படுகிறது. கோபுரத்தின் வழியாக உள்ளே சென்ருல் தென் கிழக்கு மூலையில் காணப்படுவது பிரமதீர்த்தம். அதற்குத் தெற்கே உள்ள பெரிய கோபுரத்துக்குத் 'திருமஞ்சனக் கோபுரம்' என்று பெயர். எங்கே பார்த்தாலும் கோபுரங்களே திருவண்ணுமலையில் தலை தூக்கி நிற்கின்றன. மலையினுச்சியிலிருந்து பார்த்தால் அதன் அழகு நன்கு தெரியும்.

திருவண்ணுமலை பஞ்ச பூத ஸ்தலங்களுள் ஒன்று. காஞ்சீபுரத்தில் பிருதிவி லிங்கமும், திருவானைக்காவில் அப்புலிங்கமும், திருவண்ணுமலையில் தேயு லிங்கமும், காளத்தியில் வாயு லிங்கமும், சிதம்பரத்தில் ஆகாச லிங்கமும் உண்டு. திருவண்ணுமலை, தேயுவாகிய நெருப்பைக் குறிப்பது. இங்குள்ள மலை ஆதியில் தீப் பிழம்பாகக் காணப்பட்டு, பின்னர் ஒரு சிறு கல் மலையாயிற்றென்பது புராண வரலாறு. அதன் நினைவாகவே இப்போதும் திருக்கார்த்திகைத் தீபத் திருவிழா நடக்கிறது.

ஒரு காலத்தில் உமாதேவியார் விளையாட்டாக இறைவனது கண்களைத் தமது கரங்களால் ஒரு க்ஷண நேரம் மூடினுர். ஆனுல் அது கோடிக் கணக்கான உயிர்களுக்குப் பல்லூழி கால இருளை உண்டாக்கித் துன்பம் விளைத்தது. அது கண்டு ஆற்ருத சிவபெரு

மான், தமது நெற்றியிலே ஒரு கண்ணையும் அக் கண்ணின் மூலம் ஒளியையும் தோற்றுவித்து உயிர்களின் துன்பத்தைப் போக்கினார். தமது விளையாட்டால் விளைந்த வினையைப் பார்வதி தேவி உணர்ந்து அதற்குப் பிராயச்சித்தமாகப் பூலோகத்திலே காஞ்சிமா நகரில் வந்திருந்து சிவபூஜை செய்தார். அங்கு இறைவர் தோன்றி, "திருவண்ணாமலையில் நம்மைப் பூஜித்து நமது இடப் பாகப் பேறடைவாய்" என்று கூறினார். அம்மையார் திருவண்ணாமலையில் வந்து கடுந் தவம் புரிகையில், கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நக்ஷத்திரத்திலே அந்த மலைமீது ஒரு சோதி உண்டாகி அதில் சிவபெருமான் எழுந்தருளிக் காட்சி கொடுத்தார்.

தேவார திருவாசகங்களிலும் புராணங்களிலும் கூறப்படும் அடி முடி தேடிய முயற்சியும் திருவண்ணாமலைக்கே சம்பந்தப்பட்டுள்ளது. பிரம தேவரும் விஷ்ணுவும் ஒரு காலத்தில் தமக்குள் சண்டையிட்டு, ஒவ்வொருவரும் தனித்தனி தாமே பரம் பொருள் என்று வாது செய்தனர். தேவர்களெல்லாரும் சிவ பெருமானிடம் சென்று இவர்கள் சண்டையை நீக்குமாறு விண்ணப்பித்தார்கள். சிவபெருமான் பிரம விஷ்ணுக்கள் முன்பாக அடியும் தலையும் காணாவொண்ணாத ஒரு பெரிய நெருப்பு மலையாகத் தோன்றினார். இதைக் கண்ட பிரமனும் திருமாலும் தம் எதிரே தோன்றிய நெருப்பு மலையின் முடியையும் அடியையும் முறையே காண வேண்டுமென்றும், அங்ஙனம் கண்டவரே பெரியவர் என்றும் சபதம் செய்து கொண்டு, பிரமன் அன்னப்பறவை வடிவமெடுத்து முடியைக் காணப் பறந்து செல்ல, விஷ்ணு ஒரு பன்றி

வடிவு கொண்டு அடியைக் கண்டுபிடிக்கப் பூமியை அகழத் தொடங்கினர். கடைசியில் இருவரும் தோற்றுப்போக, இறைவன் அவ்விருவருக்கும் தாமே முழு முதற் கடவுள் என்றும், தமது பல பட்ட உருவங்களின் தன்மை இது வென்றும், தம்மை லிங்க வடிவிலும் வேறுருவங்களிலும் வழிபட வேண்டிய அவசியம், வழிபாட்டின் பயன் முதலியன இவை யென்றும் விளக்கினர். பிரமனும் விஷ்ணுவும் தங்கள் சச்சரவுக்குக் காரணமாயிருந்த அஞ்ஞானம் நீங்கப் பெற்றுச் சிவபிரானைத் தோத்திரம் செய்தனர். அவர்கள் தோத்திரத்துக் கிணங்கிச் சிவபிரான் தாம் ஒரு மலையாகவும், அம்மலையின் சாரலில் ஒரு லிங்க வடிவாகவும், உயிர்கள் வழிபடுவதற்கென்றே தோன்றுவதாகவும், தாம் ஒரு பெரிய அக்கினிப் பிழம்பாக உருக்கொண்டதன் நினைவுக் குறியாக ஒவ்வொரு வருஷத்திலும் கார்த்திகை நன்னாளில் அம்மலையின் உச்சியில் ஒரு சோதி விளக்கம் காட்டுவதாகவும், அதைக் காண்போர் திருவடி முத்தி யடைவர் என்றும் கூறி மறைந்தருளினர்.

தேவார திருவாசகங்களில் இக் கதையின் கருத்து மலிந்து காணப்படும். மாணிக்கவாசகர் திருவாக்கில் திருத்தோணேக்கம் என்ற பதிகத்தில் அதனைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

> **பிரமன் அரியென் றிருவரும்தம் பேதைமையால்**
> **பரமம்யாம் பரம் என்றவர்கள் பதைப்பொடுங்க**
> **அரனர் அழல்உருவாய் அங்கே அளவிறந்து**
> **பரமாகி நின்றவா தோணேக்கம் ஆடாமோ.**

## 3

"மலைப் பிரதக்ஷிணம் செய்வதென்றால் வெயிலுக்கு முன்னமே போய்த் திரும்புங்கள்" என்று சொல்லி வைத்தார் மடத்தி லிருந்த பக்தர் ஒருவர். அதிகாலையிலேயே புறப்பட வேண்டிய நான், மலையைச் சுற்றி எட்டு மைல்தானே என்றெண்ணிக் கொண்டு, சிறிது தாமதித்தே புறப்பட்டேன். அதன் பலனைப் பிறகுதான் உணர நேர்ந்தது.

திருவண்ணுமலை 'மலைப் பிரதக்ஷிணம்' ஒரு முக்கியமானது. சிறிது தூரம் வலம் வந்ததும் ஸ்ரீரமண மகரிஷி என்ற துறவியின் ஆசிரமம் எதிர்ப்படும். இங்கே தான் உண்மையான குறிஞ்சி நிலப் பண்பின் சாயல் தோன்ற ஆரம்பிக்கும். எங்கும் பச்சைப் பசேலென்ற சோலைக்காடு. 'தனியவரை முனிவு செயும் சோலை' என்று இறையனர் அகப்பொருளிலோ எங்கேயோ சொல்லப்பட்டிருப்பதாக ஞாபகம்; ஆனல், உலக பாசங்களிலிருந்து விடுபடத் துறவு பூண்டொழுகும் ரமண சந்நியாசி வாசம் செய்யும் அழகான ஆசிரமமும் அதைச் சுற்றியுள்ள குளிர்ச்சிபொருந்திய சோலையும் அவருக்கு 'முனிவு' செய்வதாய்க் காணவில்லை!

இந்த ரமணுசிரமத்தைக் கடந்து சென்றால் பல தீர்த்தங்கள் எதிர்ப்படும். இவையெல்லாம் பெருமையுள்ளனவாகவே கருதுவர்.

சிறிது தூரம் தன்னந் தனியே நடந்து சென்றேன். இரண்டு மாட்டுக்காரப் பையன்கள் எதிர்ப்பட்டார்கள். அரையில் கோவணமும், திறந்த மேனியும், கையிலே ஒரு கோலும், முகத்தில் களங்கமற்ற இயற்கையின் தூய்மையுங் கொண்ட அச்

சிறுவர்களைப் போன்ற துணையை நாம் வேறெங்கும் பார்க்க முடியாது. வெயிலோ அருணாசலத் தழல் போல ஏறிக்கொண்டு வருகிறது. தனியாக மலையைச் சுற்றி எட்டு மைல் நடப்பதென்றால் வெகு சிரமம். காலிலே செருப்பு மில்லை. போட்டுக் கொள்வது மலைப் பிரதக்ஷிணத்திலே மரியாதைக் குறைவு. ஆகையால் வழிப்போக்குக்கு அந்த மாட்டுக்காரப்பையன்களை அழைத்தபோது அவர்கள் முதலில் கொஞ்சம் சந்தே கத்தோடு பார்த்தார்கள். பின்னர் என் கையிலிருந்த காமெராவைக் கண்டதும், ஆஹா, என்று சந்தோஷங் கொண்டு பக்கத்தில் நடந்துவந்தனர்.

வழியிலே மாணிக்க வாசகருக்கென ஒரு சிறு கோயில் கட்டப்பட்டிருப்பதைக் கண்டோம். உள்ளே ஒன்றும் இல்லை. வாசலில் மாத்திரம் எச்சரிக்கையாக 'ஸ்ரீ மாணிக்கவாசகர்' என்று எழுதி வைத்திருக்கிறார் கள். ஆட்டு மந்தைகளின் விடுதியாகவே அது உபயோகப்படுகிறது.

கடும் வெயிலும் வழி நடந்த களைப்பும் நா வறட்சி யையும் பசியையும் கிளப்பிவிட்டன. பக்கத்திலிருந்த சோலை யொன்றில் சிறிது இளைப்பாறிக் கொண்டு, மாட்டுக்காரப் பையன்கள் பிடுங்கித் தந்த மாம்பிஞ்சு களை யெல்லாம் எனது பழைய பள்ளி வயதின் ஞாபகத்துடன் தின்றுவிட்டு, பக்கத்திலிருந்த தினைப் புனத் தின் கிணற்றிலே தண்ணீரும் அள்ளிக் குடித்துவிட்டு, மீண்டும் மலைப் பிரதக்ஷிணம் செய்ய ஆரம்பித்தேன்.

கொஞ்ச தூரம் சென்றதும் எனது வழிநடைத் துணைவர்கள் என்னை இடைமறித்து ஓரிடத்தில் நின்ற படியே, "நமசிவாய" என்று என் பலம்கொண்ட மட் டும் கூப்பிடுமாறு உத்தரவு பிறப்பித்தார்கள். இதே

தடா இது, பசுக் காக்கும் பையன்களுக்கும் பஞ்சாக்ஷரத்துக்கும் என்ன சம்பந்தம்? என்று ஆச்சரியப்பட்டவனாய், நான் அசட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டு நின்றேன். "இல்லை, கூப்பிட்டுத்தானாக வேண்டும்" என்று அவர்கள் பிடிவாதம் செய்தார்கள். நானும் சரி என்று ஒப்புக்கொண்டு, பலமாக 'நமசிவாய' என்று கத்தினேன். என்ன ஆச்சரியம்! சற்று நேரம் கம்மென்று ஒரே அமைதி; அதன் பின்னர் மலைச்சாரலிலிருந்து 'நமசிவாய' என ஒரு குரல் கணீரென்று திருப்பிக் கூப்பிட்டது. குயிலைப் பார்த்துக் கூவென்றால் அதுவும் திருப்பிக் கூவுவது போல, யாரோ அங்கிருந்து கேலி செய்கிறார்களாக்கு மென்று நினைத்தேன் நான். திருப்பித் திருப்பிக் கூப்பிட ஆரம்பித்தேன். மாட்டுக்காரப் பையன்கள் என் அசட்டுத்தனத்தைப் பார்த்து விழுந்து விழுந்து சிரிக்கத் தொடங்கினார்கள். சிறிது நேரம் சென்ற பின் தான் எனக்கு அந்த மர்மம் விளங்கியது. நான் கூப்பிட்ட சத்தமே சென்று மலையில் தாக்கி எதிரொலித்தது! அந்த எதிரொலி திரும்பி வருவதற்கு ஏற்படும் கால தாமதமே எவரையும் மலைக்கச் செய்கிறது.

சில நூற்றாண்டுகளுக்குமுன் திருவண்ணாமலையில் மேற்குப் பக்கத்தில் ஒரு குகையிலே குகைநமச்சிவாயர் என்ற சைவப் பெரியார் ஒருவர் தவம் செய்து வந்தார். அவரிடம் அற்புதமான சித்திகள் பல காணப்பட்டதாகக் கூறுவர். இவருக்கு நமச்சிவாயர் என்ற சீடர் ஒருவர் இருந்தார். அவர் தம் இருப்பிடத்திலிருந்தே ஞான திருஷ்டியால் வேறிடங்களில் நிகழ்ந்த சம்பவங்களை அறிந்து கூற வல்லவராம். திருவாரூரில் நடந்த திருவிழா ஒன்றிலே உருத்திர கணிகை ஒருத்தி

கால் வழுக்கி விழுந்தது, சிதம்பரத்திலே கனகசபையில் திரைச் சீலையில் நெருப்புப் பற்றியது முதலிய பல விஷயங்களை அவர் தெரிந்து சொன்னதாகக் கூறுவர். இவற்றை யறிந்த குகை நமச்சிவாயர், தமது சீடர் தம்மினும் மேம்பட்ட பக்குவம் எய்தியிருப்பதை யுணர்ந்து, அவரைத் தில்லைக் கேகும்படி கட்டளை யிட்டார். இச்சீடருக்குக் குருநமச்சிவாயர் என்ற பெயரும் ஏற்பட்டதாம். இந்த நமச்சிவாயரை அழைப்பதையே மாட்டுக்காரப் பையன்கள் எனக்குக் காண்பித் தார்கள்.

கடைசியாக ஒருவாறு மலைவலம் வந்து கிழக்கு வாசலை அடையும்போது மணியும் பன்னிரண்டு ஆகிவிட்டது. உச்சி வெயில் காந்தியது. அருணாசலம் உண்மையாகவே நெருப்புமலைதான் என்று அப்பொழுது நான் உணர்ந்தேன்.

## 4

தேடிச் சென்று திருந்தடி ஏத்துமின்
நாடி வந்தவர் நம்மையும் ஆட்கொள்வர்
ஆடிப் பாடிஅண் ணாமலை கைதொழ
ஓடிப் போம்நம துள்ள வினைகளே

என்று திருநாவுக்கரசு நாயனார் தமது அண்ணாமலைப் பதிக மொன்றில் கூறுகின்றார். இவரும் ஞானசம் பந்தரும் இத்தலத்தை வந்து தரிசித்துள்ளார்கள். பல பாடல்களும் இயற்றி யிருக்கிறார்கள். சுந்தர மூர்த்தி யும் தரிசித்திருத்தல் கூடும். அவருடைய பாடல்கள் இப்போதுள்ள தேவாரப் பதிகங்களில் கிடைக்க வில்லை. வேறு பல பெரியார்களும் இத் திருவண்ணா



25. மாணிக்கவாசகர் கோயில், திருவண்ணாமலை. (பக்கம் 118)



26. ஏகம்பம், காஞ்சீபுரம். (பக்கம் 112)

மலைத் தலத்தைப்பற்றி மிக விசேஷமாகப் பல வரலாறுகளிற் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

திருவண்ணாமலை பழைய காலத்தில் சோழ மன்னரின் ஆட்சியிலிருந்தது. பின்பு கி.பி. பதினான்காம் நூற்றாண்டளவில், ஹொய்சள வம்சத்தினர் திருவண்ணாமலையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தனர். பிறகு, விஜய நகரத்து ராயர்களும் தஞ்சாவூர் நாயக்க மன்னரும் ஆண்டுவந்தனர். அதன் பின் பதினேழு பதினெட்டாம் நூற்றாண்டுகளில் முஸ்லிம்களும் பிரெஞ்சுக்காரரும் ஆங்கிலேயரும் இவ்வூரை முற்றுகையிட்டு மாறி மாறி வெற்றியும் தோல்வியு மடைந்தனர். இறுதியில், பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில்தான் ஆங்கில ஆளுகைக்குட்பட்டது. பதினெட்டாம் நூற்றாண்டிலே திப்பு சுல்தான் ஆளுகையில் கடும்போர் ஒன்று இப்பகுதியில் நடந்தது. அப்போது திருவண்ணாமலைக் கோயில் மதில்களில் பீரங்கிக் குண்டுகள் பாய்ந்த அடையாளங்களை இன்றும் காணலாம்.

நான் திருவண்ணாமலையைத் தரிசித்த வேளையில் நடந்த உற்சவத்தின்போது, 'மகிழ' மரத் திருவிழா என ஒரு நாளிரவு நடந்தது, என்றுமில்லா விசேஷ அநுபவத்தை எனக்குத்தந்தது. மகிழமரம் திருவண்ணாமலையின் ஸ்தல விருக்ஷம். வீதிவலம் எழுந்தருளிய மூர்த்தி அந்த மகிழ் மரத்தடியில் வந்ததும், அம்மரத்தைச் சுற்றிப் பத்துத் தடவை வந்தார். ஒவ்வொரு பிரதக்ஷிணத்தின்போதும் இசை நூலிற் சொல்லப்பட்ட வாத்தியம் ஒவ்வொன்றை வாசித்தனர். நாதஸ்வரம், ஒத்து, மேளம், தாளம், மிருதங்கம் இவை ஒவ்வொன்றாகத் தனியே வாசிக்கப்பட்டதும்,

கோலாட்டம், பரதநாட்டியம், தேவார படனம் ஆகியவை பவனியில் நிகழ்ந்தன. இந்த மகிழமரத் திருவிழா மிக அற்புதமாயிருந்தது.

அஞ்ஞான இருளை அகற்றும் மெய்ஞ்ஞானச் சுடராக இறைவன் தோற்றுவதற்கு ஒரு சின்னமாக விளங்குகிறது திருவண்ணாமலை. மக்களின் மனவிருளை அகற்றும் ஒளியே கார்த்திகைத் தீபம். அந்த ஞான தீபத்தைத் தேடிச்சென்றார் மாணிக்கவாசகர்.

அண்ணா மலையெம் அண்ணா போற்றி
கண்ணா ரமுதக் கடலே போற்றி

என்று சொல்லித் துதித்தார். திருவெம்பாவையும் திருவம்மானையும் பாடி வழிபட்டார். பின்னர் அங்கிருந்து தமது யாத்திரையில் தொடர்ந்து கற்றோர் தொழுங் காஞ்சிப் பதிக்குச் சென்றார்.

---

## பத்தொன்பதாம் அத்தியாயம்

தேசமெலாம்புகழ்ந் தாடுங் கச்சித்
திருவேகம்பன் செம்பொற் கோயில் பாடி

மாணிக்கவாசக சுவாமிகளின் அடிச்சுவட்டைப் பின்பற்றிப்போன சாட்டிலே, நானும் நமது தமிழ் மூதாதையரின் நாகரிக பீடமாய் விளங்கிய காஞ்சீபுரத்தில் கால்மிதித்த புண்ணியப் பேறுடையனானேன்.

ஆதியிலே தமிழ் நாட்டின் கலை, அரசியல், சமயம், நாகரிகம் யாவற்றிற்கும் உயர்ந்த ஸ்தானம் பெற்றிருந்தது காஞ்சிமாநகரம். பௌத்தம், சைவம், வைஷ்ணவம், ஜைனம் முதலிய சமயங்கள் வளர்ந்த இடம்;

சமயச் சண்டமாருதங்கள் முழங்கிய இடம்; உலக யாத்திரிகர்கள் வந்து தரிசித்த இடம்; தென்னுட்டில் மாத்திரமன்றி அகில இந்தியாவில் - பாரதத்தில் - 'முத்தி தரும் நகர் ஏழில் முக்கியமாம் கச்சி' என்று புகழப்பட்ட ஸ்தலம். ஒரு சம்ஸ்கிருத சுலோகத்திலே கூறப்பட்டுள்ளது அயோத்தி, மாபடித்துரா, மாயா (ஹரித்துவாரம்), காசி, காஞ்சி, அவந்தி (உச்சயினி), துவாரகை என்பன மோக்ஷத்தைத் தரும் ஸ்தலங்கள். இவற்றுள்ளே தென்னுட்டில் குறிக்கப்பட்ட ஸ்தலம் காஞ்சி மாத்திரந்தான். ஆயினும், அது மற்றவை களிலும் பார்க்கப் பலவகையில் மேம்பட்டு விளங்கியது. கலைகளும் நாகரிகமும் சமயக் கோட்பாடுகளும் சம்பந் தப்பட்டிருந்தது. இந்திய தரிசனக் கருத்தும் சமயக் கருத்தும் காஞ்சீபுரத்தில் வளர்ந்தன. இன்று சைவரும் வைஷ்ணவரும் இதனை மதிப்பதுபோலவே ஒரு காலத் தில் பௌத்தரும் ஜைனரும் சக்தி வணக்கமுள்ள சாக் தரும் மதித்திருந்தார்கள்.

## 2

கிறிஸ்து பிறப்பதற்கு ஐந்து நூற்றுண்டுகளின் முன் புத்தர் வடநாட்டிலிருந்து வந்து காஞ்சீபுரத் தில்போதனை செய்து அநேகரைத் தம் மதத்தில் சேர்த் துக்கொண்டார். அதற்கு இரண்டு நூற்றுண்டுகளின் பின்னுல் அசோக சக்கரவர்த்தியும் இங்கு வந்து தரி சித்து நகரின் உள்ளும் புறமும் பலவிகாரைகளைக் கட்டி வைத்தான். மணிமேகலை என்ற ஒப்பற்ற பௌத்தகாவி யத்தில் சொல்லப்பட்டவைகளும், காஞ்சி காமாட்சி யம்மன் ஆலயத்தில் கண்ட சிற்பச் சின்னங்களும்,

இந்நகரில் ஒருகாலத்திலே பௌத்த விகாரைகள் பல இருந்தன என்பதற்குச் சாட்சி பகருகின்றன. ஆனால் இன்று அவை இருந்த இடமும் தெரியாது மறைந் தொழிந்து போயின. திந்நாகன் முதலிய பௌத்த சித்தாந்திகளும் வடநூலறிஞர்களும் ஒரு காலத்தில் இங்கே சிறந்து விளங்கினர். கி. பி. ஏழாம் நூற்றாண்டில் காஞ்சிக்கு வந்து சென்ற ஹியூன் சியாங் என்ற சீன யாத்திரிகன் இதனைப் புகழ்ந்து, கலைப் பெருக்கையும் நாகரிகத்தையும் போற்றியிருக்கிற கட்டுரைகள் இன்னும் இருக்கின்றன.

காஞ்சீபுரத்தில் செழித்து வளர்ந்திருந்த பௌத்த மதத்தை வேரறச் செய்தவர்கள் சைவ நாயன்மாரும் வைஷ்ணவ ஆழ்வார்களும். இவர்களுக்குப் பல்லவ அரசர் தம் கலையார்வத்துடனும் மதாபிமானத்துடனும் ஆதரவளித்தார்கள். பின்பு சங்கரர், ராமாநுஜர் என்ற தத்துவ தர்சிகள் வந்து அம்மதத்தை அடியோடு பெயர்த்தெறிந்துவிட்டார்கள். ஸ்ரீ சங்கராசாரியாரே காஞ்சீபுரத்திலிருந்த பௌத்த மதத்தின் சாயலையும் காணமுடியாது செய்தவர். ஒருகாலத்தில் பௌத்தத்தின் தலைநகராயிருந்த காஞ்சியில் இன்று அப்படியுமிருந்ததா என்று ஆச்சரியப் படத்தக்கதாக, சைவமும் வைஷ்ணவமும் மேலோங்கி நிற்கின்றன. ஸ்ரீ சங்கராசாரியருக்கு காமாட்சியம்மன் கோயிலினுள்ளேயே ஒரு விக்கிரகம் ஸ்தாபித்திருக்கிறார்கள். சாக்த சமயத்தையும் இங்கிருந்து நீக்கிவிட்டவர் சங்கரர்தாம். ஆனால் ஜைனர்கள் மாத்திரம் அற்றுப் போகாமல் இன்றும் காஞ்சியில் இரண்டு மைல் தூரத்திலுள்ள திருப்பருதிக்குன்றம் என்ற இடத்திலே குடியேறியிருக்கிறார்கள்.

ஒரு காலத்தில் புகழ்ப்பெற்ற சோழ மன்னர்கள் ராஜதானியாயிருந்தது காஞ்சீபுரம். கரிகாலன் என்ற சோழன் காஞ்சியிலுள்ள கோயில்கள் சிலவற்றிற்குப் பொன் கொண்டு கூரை சமைத்தான் என்று சொல்வர். அவற்றுள் திருவேகம்பமும் ஒன்று. 'திருவேகம்பன் செம்பொற் கோயில் பாடி' என்று மாணிக்கவாசகரும் பாடியிருக்கிறார். ஏகாம்பரேசுவரர் சந்நிதியிலே ஓர் உருவழிந்த கருங்கல் நாட்டப்பட்டிருக்கிறது. அதுவே கரிகாலனது சிலாரூபம் என்று யாத்திரிகர்களுக்குக் காட்டுவர்.

சோழர்களுக்குப் பின்வந்தவர்களே பல்லவர்கள். அவர்களுடைய அயல் நாட்டு விவகாரங்கள் அவ்வளவு வெற்றியுடையனவா யிருக்கவில்லை. பக்கத்திலிருந்த சாளுக்கியர் கையில் பலதடவை அவர்கள் தோல்வியுற்றனர். ஆனால், பல்லவ மன்னர் கலா விநோதர்கள்; உயர்ந்த ரஸிகத்தன்மை உடையவர்கள். கலைகளில் அவர்கள் காட்டிய சிரத்தைதான் இன்று தமிழ் நாட்டில் கோபுரங்களாகத் திகழ்கின்றது. வடநாட்டு நாகரிகத்தின் பண்பை அவர்கள் தமிழ் நாட்டில் புதிய உருவத்தில் அமைக்க, அதனையே வட நாட்டினர் மீட்டும் தம்மிடையே உபயோகித்தனர். கடற்கரைக் கோயிலாகிய மாமல்லபுரமும், காஞ்சீபுரம் கைலாசநாதர் கோயிலும், வைகுண்டப்பெருமாள் கோயிலும் பல்லவர் சின்னங்களாக இன்றும் நின்று நிலவுகின்றன. பல்லவர்களுக்குப் பின் காஞ்சீபுரம் பிற்காலச் சோழர்களாலும், விஜயநகர நாயக்க மன்னர்களாலும், மகாராஷ்டிரர்களாலும், முகம்மதியர்களாலும் ஆளப்பட்டது.

## 2

ரெயிலிலிருந்து இறங்கி நகரத்தினுள்ளே வண்டியில் போய்க்கொண்டிருந்தேன். கண்ணில் எதிர்ப்பட்ட காட்சிகளெல்லாம் பழந்தமிழர் காலத்துக் காட்சிகளாகவே தென்பட்டன. வெண் சாந்தால் நாமம் சார்த்தி, மலர்ந்த முகத்துடன் வந்த வைஷ்ணவ மக்கள் இராமாநுஜ ஆசாரியரை ஞாபகப்படுத்தினர். விபூதியை நன்ருகக் குழைத்துத் தரித்துச் சந்தன திலகத்துடன் எதிர்கொண்ட சைவ மக்கள், நமது திருநாவுக்கரசரை ஞாபகமூட்டினர். சைவமும் வைஷ்ணமும் பக்கம் பக்கமாக வளர்ந்து சௌஜன்யம் குன்ருது மக்கள் பரஸ்பரமாக வாழும் காஞ்சிபுரத்தைப் பார்ப்பது ஒரு தனி அநுபவம்.

சின்னக் காஞ்சி, பெரிய காஞ்சி என்று காஞ்சீபுரம் இரு கூறுகளாக வழங்கப்படுகிறது. சின்னக் காஞ்சி வைஷ்ணவர் பக்கம்; பெரிய காஞ்சீபுரத்தில் சைவர்கள் வாழுகின்றனர். சின்னக் காஞ்சீபுரத்தில் வரதராஜப் பெருமாள் கோயில் மிகவும் பிரசித்தி பெற்றது. ஹஸ்திகிரி என்று சொல்லப்படும் மேட்டிலே கட்டப்பட்டிருக்கிறது. இங்குள்ள பெருமாளை வரதராஜர் என்றும் ஹஸ்திகிரி அருளாளர் என்றும் சொல்லுவார்கள். வைஷ்ணவ சமயத்தை ஸ்தாபித்த ராமாநுஜருக்கு இந்த வரதராஜப் பெருமாள் அருள் செய்தார் என்றும் சொல்வர். ராமாநுஜர் வரதராஜர் சந்நிதியில் கைங்கரியம் செய்துகொண்டு யாதவப் பிரகாசர் என்ற அத்வைத குருவிடம் வேதாந்தம் கற்றுவந்தார். பிறகு குருவுக்கும் குருவானுர். இவர் காஞ்சீபுரத்திலேயே இல்லறம் நடத்திவரும்போது

மனைவி பொருத்தமில்லையென்று கண்டு துறவியாகி, வைஷ்ணவப் பிரசாரத்தில் தீவிரமாக ஈடுபட்டு அதன் ஸ்தாபகரானார். ஸ்ரீரங்கத்திலேயே இவரது பிரசாரம் நடைபெற்றபோதிலும் வரதராஜப் பெருமாளின் அருளே இவருக்குத் துணைபுரிந்ததென்று குரு பரம்பரைக் கதைகள் தெரிவிக்கின்றன.

வரதராஜ விக்கிரகம் தென்னிந்தியாவிலுள்ள மிகவும் அழகான விக்கிரங்களில் ஒன்று. முகத்தின் அழகிலே சாந்தமும் ஆனந்தமும் கலந்து பொலிவாகக் காட்சி தருகின்றன. போதி சத்துவ விக்கிரகங்களில் தான் அத்தகைய சாந்தத்தைக் காணலாம். இந்த மூர்த்தியின் வசிகர சக்தியைக் குறித்துப் பின்வருமாறு ஒரு கதை வழங்குகிறது:

ஒருசமயம் முகம்மதியர் தெற்கே படையெடுத்து வந்தபோது கோயில் அதிகாரிகள் விக்கிரகத்தை எடுத்துக்கொண்டுபோய்த் திருச்சி ஜில்லாவிலுள்ள உடையார்பாளையத்தில் பாதுகாத்து வைத்திருந்தார்கள். கலகம் அடங்கி விக்கிரகத்தை மறுபடியும் கோயிலுக்குக் கொண்டுவர முயன்றதும், உடையார்பாளையம் ஜமீன்தார் அர்ச்சகரிடம் மூர்த்தியை ஒப்படைக்க இணங்கவில்லை. ஏன் என்று கேட்டதும், "நான் இந்த அழகனை எப்படிப் பிரிவேன்!" என்று பதில் சொன்னாராம். ஆனால் ஜனங்கள் கலகம் பிறப்பிக்கக் கூடும் என்றஞ்சி திருப்பிக்கொடுத்துவிட்டார். இந்த நிகழ்ச்சியின் ஞாபகமாக ஒரு திருவிழா ஒவ்வொரு வருஷமும் நடைபெறுகிறது.

பெரிய காஞ்சீபுரத்திலுள்ள ஏகாம்பரநாதர் கோயிலும் காமாட்சியம்மன் கோயிலும் முக்கியமானவை. இந்த ஏகாம்பரநாதர் கோயில்தான் கச்சி

ஏகம்பம் என்று பழைய புராணங்களிலும் தேவாரங்களிலும் காணப்படுகிறது. சைவ நாயன்மார் எல்லாரும் இதைத் தரிசித்திருக்கிறார்கள். இங்கே சிவனைப் பிரதிஷ்டை செய்திருக்க, சிறிது தூரத்திலுள்ள குமர கோட்டம் என்ற கோயிலில் சுப்பிரமணியக் கடவுளைப் பிரதிஷ்டை செய்துவைத்திருக்கிறார்கள். காஞ்சீபுரத்தில் முருக வணக்கம் எந்தக் காலத்தில் ஆரம்பிக்கப்பட்டதென்று அறிய முடியவில்லை.

சைவர்களின் முக்கிய புராணங்களிலொன்றாகிய கந்தபுராணம் பாடிய கச்சியப்ப சிவாசாரியார் என்ற புலவர் இந்தக் குமரகோட்டத்திலே அர்ச்சகரா யிருந்தவர். ஏகாம்பரேசுவரர் ஆலயத்தின் பின் பிராகாரத்தில் மிகப் பழமையான மாமரத்தின்கீழிருந்தே அவர் தமது கந்தபுராணத்தைப் பாடி முடித்தார் என்று சொல்வர். மாவினடியில் அழகான சோமாஸ்கந்த மூர்த்தி யெழுந்திருக்கிறது. 'காஞ்சி மாவடி வைகும் செவ்வேள் மலரடி போற்றி' என்று கச்சியப்பர் இந்த ஸ்கந்தரையே விளித்துப் பாடினார். முன் ஒருகாலத்தில் பார்வதி தவங்கிடந்தபோது சிவன் இந்த மாமரத்தின் கீழேதான் காட்சி கொடுத்தார் என்றும் கதை உண்டு. கந்தபுராணத்தின் பெருமையால் காஞ்சீபுரம் இன்று பிரசித்திபெற்ற முருகப் பதிகளுள் ஒன்றாகத் திகழ்கின்றது.

காமாட்சியம்மன் கொலுவிருப்பது ஒரு விசித்திரமான கோயில். வாயிலைக் கண்டுபிடிப்பதே கஷ்டம் ஒரு பக்கத்தால் நுழைந்து சுற்றிச் சுற்றி உள்ளே வந்தால் அம்பாள்வீற்றிருக்கும் சந்நிதி தோன்றும். இங்கு அம்மன் விக்கிரகத்தைக் காட்டிலும் அதன் முன்பு



28. கைலாசநாதர் கோயில், காஞ்சிபுரம். (பக்கம் 132)

வைக்கப்பட்டிருக்கும் யந்திரத்துக்கே சகல ஆராதனை களும் நடைபெறுகின்றன.

ஒரு காலத்திலே காஞ்சிபுரத்தில் சாக்த மதம் மேலோங்கி எங்கும் துராக்கிருதமான காரியங்கள் நடைபெற்று வந்தன. வங்காளத்தில் நிலவிய காபாலி கள் வழக்கம் காஞ்சியிலும் காமாக்ஷியம்மனிடம் பரவி, நரபலி முதலிய அசம்பாவிதங்கள் மலிந்தன. அவ்வேளையில் ஸ்ரீசங்கராசாரியார் இங்கு வந்து, தமது வேதாந்தக் கொள்கைகளைப் பிரசாரம் செய்து, காளி வணக்கத்தையும் சாக்த மதத்தையும் அறவே ஒழித் தார். இதுபற்றிப் பொது மக்களிடையே ஒரு புனைகதை வழங்குகிறது.

காளி ரூபத்தில் காமாக்ஷியம்மன் நகர எல்லைக் குள்ளே ஒவ்வோர் இரவும் புறப்பட்டுக் கொடுமை செய்துவந்தாள். சங்கராசாரியர் வந்து அம்மனைச் சாந்தப்படுத்தி, தமது அநுமதியின்றி அவள் கோயிலை விட்டு வெளியே புறப்படுவதில்லை என்று ஒரு வாக்குறுதியும் பெற்றுக்கொண்டார். காமாக்ஷியம்மன் கோயிலினுள்ளே ஸ்ரீ சங்கராசாரியருடைய விக்கிரகம் ஒன்று வைக்கப்பட்டிருக்கிறது. அம்மன் வெளியே புறப்படும்போதெல்லாம் சங்கரர் முன்பாக சிறிது வேளை தாமதித்தே செல்லும் வழக்கம் இன்றும் நிலவுகின்றது. அவரிடம் விடைபெற்றுக்கொள்வதாக ஒரு பாவனை.

சங்கரர் தமது அத்வைத வேதாந்த தரிசனத்தை ஸ்தாபித்து இந்தியா முழுவதிலும் நான்கு ஆசார்ய பீடங்கள் அமைத்தார். அதில் ஒன்று காஞ்சீபுரத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. ஆரம்பத்தில் விஷ்ணு காஞ்சியி லிருந்து, பின் சிவகாஞ்சிக்கு மாற்றப்பட்டு 1688-ஆம்

ஆண்டுவரை இந்தப் பீடம் நிலவியது. அதன் பின்னர்த் தஞ்சாவூரில் அரசாண்டுவந்த மன்னன் பிரதாப சிம்மன் அப்போது இம்மடத்துக்கு அதிபதியாயிருந்த சுவாமியை அழைத்து உபசரித்து, தஞ்சாவூரிலும் காமாக்ஷியம்மனுக்கு ஒரு கோயில் கட்டுவித்தான். 1743-ஆம் ஆண்டிலே காமகோடி சங்கராசாரிய பீடம் கும்பகோணத்துக்கு மாற்றப்பட்டது. தஞ்சாவூர்ச் சரபோஜி மன்னனே ஒரு மடம் கட்டிக் கொடுத்தான்.

3

ஒரு காபி ஹோட்டலில் உட்கார்ந்து காபி சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். ஸ்டெல்லா கிராம்ஸ்ரிஷ் என்ற ஐரோப்பிய மாது எழுதிய தென் இந்தியச் சிற்பங்கள் என்ற நூல் என் கையில் இருந்ததைக் கவனித்த ஒரு பழங் கிழவர், சற்றுத் தூரத்தில் உட்கார்ந்திருந்தவர், சிறிது சிறிதாக என் பக்கத்தில் நழுவி வந்தார். புத்தகத்தைக் கூர்ந்து பார்த்தார்; அருகே இருந்த கமெராவைப் பார்த்தார்; என்னையும் ஏற இறங்கப் பார்த்தார். அவர் முகத்தில் ஒரு பிரகாசம் படர்ந்தது.

விபூதி நன்கு பூசிய முகம்; மொட்டைத் தலை. நான்கு முழக் கதர் வேஷ்டியும் மேலே ஒரு துண்டுந்தான் உடை. கச்சியப்ப முனிவர்தாமோ இப்படி என்முன் தோன்றியிருக்கிறார் என்று நான் கூர்மையாக நோக்கினேன்.

வந்தவர் என்னைப் பார்த்து, "தாங்கள் எந்த ஊர் சுவாமி?" என்று கேட்டார்.

"நான் இலங்கையில் யாழ்ப்பாணத்திலிருந்து வந்திருக்கிறேன். ஸ்தல யாத்திரையாக வந்தபோது

காஞ்சீபுரத்தையும் பார்த்துப் போகலாம் என்று இங்கு வந்தேன் ” என்றேன்.

உட்கார்ந்துவிட்டார் கிழவர், என் பக்கத்தில். அவருக்கிருந்த ஆனந்தம் சொல்லிமுடியாது. “சும்மா வெறுமனே நமது சிவஸ்தலங்களைப் போய்ப் பார்த்து நமக்கு மாத்திரம் ஆத்ம சுகம் தேடிக்கொள்வது போதாது. நமது பண்டைப் பெருமைகளையெல்லாம் அறிந்து அவற்றை வெளியுலகத்துக்குக் காட்டவேண்டும். கட்டுரைகள் மூலமாகவும் படங்கள் மூலமாகவும் அவற்றைப் பிரசாரம் செய்தல் வேண்டும். தமிழரின் கலைப் பெருமையை அழியவிடாது காப்பாற்றி, அவற்றை மீண்டும் நாம் பயன்படுத்திக் கொள்ளுதல் வேண்டும். புராதன காலத்தில் தமிழர் சகலவித சிறப்புக்களும் பெற்றிருந்தார்கள். இன்று நாம் அடிமைகளாக, ஒதுக்கப்பட்டவர்களாக, எல்லாவற்றிற்கும் மேற்கே நோக்கவேண்டியவர்களாக இருக்கிறோம். தமிழ் வளர்த்த சோழர் பெருமை எங்கே? கலைவளர்த்த பல்லவர் பெருமை எங்கே?.........”

சொப்பன லோகத்தில் சஞ்சரித்து உணர்ச்சியைப் பிரவாகமாக ஓடவிட்டு அந்தக் கிழவனார் தம்மை மறந்தே பேசத் தொடங்கினார்.

“ தாங்கள் இங்கு வந்து எத்தனை நாட்களாகின்றன ? ” என்று கேட்டார். “ நேற்றுத்தான் வந்து சேர்ந்தேன். காமாக்ஷியம்மன் கோயிலையும் ஏகாம்பரேசுவரர் கோயிலையுந்தான் பார்த்திருக்கிறேன் ” என்றேன்.

“ ஆனால் நமது புராதன காஞ்சியைத் தாங்கள் இன்னும் பார்க்கவில்லையே! ஆயிரத்திருநூறு வருஷங்களுக்கு முன் பல்லவராட்சியில் செழிப்புற்றிருந்த

காஞ்சியைத் தாங்கள் பார்க்கவில்லை. தமிழரின் கலைப் பொக்கிஷம் அங்கே கைலாசநாதர் கோயிலில் இருக்கிறது. அதை இன்னும் தாங்கள் பார்க்கவில்லையே?"

"கைலாசநாதர் கோயிலைப்பற்றிப் படித்திருக்கிறேன். ஆனால், இன்னும் போய்ப் பார்க்கவில்லை. இன்றுதான் போகலாம் என்று உத்தேசம். அதைப் பற்றி நன்கு அறிந்தவர் யாராவது கூடவந்தால் எல்லா விவரமும் தெரிந்துகொள்ள வசதியாயிருக்கும். தங்களுக்கு ஒருவேளை சிரமமாயிருக்குமோ..." என்றேன்.

கிழவனார் சந்தோஷத்தால் பூரித்தார். "ஆகா, இதோ வருகிறேன். என் சொந்த ஊரின் பெருமையைப் பிறவூர்களிலிருந்து வருபவர்களுக்குக் காட்டுவதில் ஒரு திருப்தி உண்டல்லவா?" என்று சொல்லிக்கொண்டே புறப்படச் சம்மதித்தார். இருவருமாக ஒரு மாட்டுவண்டி பிடித்துக்கொண்டு கைலாசநாதர் கோயிலை நோக்கிச் சென்றோம்.

மணி மூன்றிருக்கும். ஓர் இடிந்த கட்டிடத்தின் முன்பு எங்கள் வண்டி கொண்டுபோய் நிறுத்தப்பட்டது. கடுமையான வெயிலில் நாற்புறமும் ஓர் அமைதி. அந்த அமைதியின் மத்தியில், கன்னங்கறேலென்று கருகிப்போயிருந்த அக்கட்டிடம் விவரிக்க முடியாத ஒரு சோகக் காட்சியைத் தந்தது. வண்டியிலிருந்து இறங்கிப் போனோம். ஆனால், வாசற் கதவு அடைக்கப்பட்டிருந்தது. அர்ச்சகர் வரும்வரையும் காத்திருக்க முடியாது என்று சொல்லி, கிழவனார் என்னை ஒரு பக்கத்துக்கு அழைத்துச் சென்றார். "இதோ இந்த மதிற்புறத்தால் ஏறி உள்ளே பாயுங்கள். வேறு வழி

இடையாது'' என்றார். அந்த ரகசிய வழியால் இருவரும் உள்ளே நுழைந்துவிட்டோம்.

நான்கு பக்கங்களிலும் சிறுசிறு விமானங்களோடு கூடிய ஆலயங்கள். இவற்றின் மத்தியிலே கம்பீரமாக வீற்றிருக்கும் உன்னத கோபுரம். அந்தக் கோபுரத்தில்தான் எத்தனை அழகான வேலைப்பாடுகள்! பதுமைகளெல்லாம் உயிருடன் கண்களைச் சிமிட்டிச் சிமிட்டிப் பேசிக்கொண்டிருக்கின்றன! புராணக் கதைகளெல்லாம் திரைப்படம்போல் கண்முன் ஒன்றன்பின் ஒன்றாகக் காட்சி தருகின்றன!

"அதோ பாருங்கள், தக்ஷிணாமூர்த்தி, கையில் வீணையுடன் காட்சி அளிக்கின்றார். அதோ திரிபுர சம்ஹாரமூர்த்தி; உலகமே அதிர்ச்சிகொள்ளும் அந்தக் கோபாக்கினி வீசும் கோலத்தைப் பாருங்கள். சற்று நில்லுங்கள்; அந்தக் கல்யாணசுந்தர மூர்த்தியையும் பார்த்துவிட்டு அப்பாற் செல்லலாம். சலனமற்ற அழகின் உச்சநிலை அதில் படிந்திருக்கிறது. சிற்பியின் வேலைப்பாடல்ல இது; இறைவனே நேரில் வந்து திருக் கல்யாணக் காட்சி கொடுத்திருக்கிறார் போலும்! இப்படி வாருங்கள்; இந்த வடக்குப் பிராகாரத்தில் தெரிகிறதே, இதுதான் சக்கரதான மூர்த்தி. சிவனும் பார்வதியும் மேற்பாகத்தில் ஓர் ஆசனத்தில் அமர்ந்திருக்கிறார்கள். சிவனுடைய ஆச்சரிய பாவம் நிறைந்த கரங்களைப் பாருங்கள். அந்த இடது முன் கரத்தில் பிடித்திருக்கிறாரே, அதுதான் சிம்மகரண முத்திரை என்று சொல்லப்படும். சிவனுக்கு வலது புறத்தில் காணப்படுபவர்கள் சூரியனும் பிரம்மாவும். பாதங்களினடியில் விஷ்ணு மூர்த்தி முழங்கால் மண்டியிட்டு உட்கார்ந்திருக்கிறார். கண்ணப்ப நாயனார்போல, தமது

கண்ணைப் பிடுங்கிச் சிவனுக்கு அர்ச்சனை செய்ய எத்தனிக்கிறார். பாருங்கள்! இந்தப் பக்தியைக் கண்டுதான் சிவபிரான் சக்கராயுதத்தை அளித்தார். அதனால், சக்கரதான மூர்த்தி என்ற பெயரையும் பெற்றார்.

" கொஞ்சம் விலகி, இப்படி வாருங்கள். சிவனது நடனத் திருக்கோலங்களைப் பார்த்தீர்களா? ஆகா என்ன அழகு! என்ன கலை! என்ன ஜீவன்......!"

சொப்பன லோகத்தில் நடமாடுபவர்போலக் கிழவனார் வருணித்துக்கொண்டே பிராகாரத்தைச் சுற்றி வந்தார். ஒரு மாடத்தினுள் கண்ட அழகிய வர்ணச் சித்திரத்தில் மதிமயங்கியவனாய் நான் மெய்ம்மறந்து போய் நின்றுவிட்டேன். கிழவனார் வார்த்தைகள் அமைதியில் கேட்ட வண்டொலிபோல் தூரத்தில் ஒலித்துக்கொண்டிருந்தன. மாடத்திலிருந்த சித்திரந்தான் என்னுடன் வாய் திறந்து பேசுவது போலிருந்தது.

## 4

ஆதிகாலக் கோயில்கள் சுதையாலும் செங்கல்லாலும் மரத்தாலும் கட்டப்பட்டு வந்தன. அதன் பின்பு பல்லவர்கள் தலைப்பட்டுப் பல்லாவரம், சித்தன்னவாசல், சிங்கவரம், மகேந்திரவாடி, மாமண்டூர், திருச்சிராப்பள்ளி முதலிய இடங்களில் மலைகளையும் பாறைகளையும் உட்புறமாகவே குடைந்து இறைவனுக்குக் கோயில்கள் சமைத்தனர். தென்னாட்டிலே முதல் முதலாக இக்குகைக் கோயில்களைக் கட்டிய பெருமை மகேந்திரவர்மனுக்கே உரியது. அவன் நிறைந்த சிவபக்தன். திருநாவுக்கரசு நாயனாரின் சிஷ்யன். அவனுடைய கலைப்பிரதாபம் காரணமாக அவனை எல்லோரும்

விசித்திரசித்தன் என்றழைத்தார்கள். வட ஆர்க்காடு, செங்கற்பட்டு ஜில்லாக்களிலிருந்து புதுக்கோட்டை சமஸ்தானம்வரை அவனால் கட்டுவிக்கப்பட்ட குகைக் கோயில்கள் உள்ளன. இவற்றில் திருச்சிராப்பள்ளியிலும், தளவானூரிலும், புதுக்கோட்டைக்கு ஒன்பது மைல் வடக்கிலுள்ள சித்தன்ன வாசலிலும் உள்ளவையே மிகச் சிறந்தனவாகக் கருதப்படுகின்றன. சித்தன்ன வாசல் குகைக்கோயில் மண்டபத்தின் உட்புற விதானத்தில் சித்திரிக்கப்பட்டிருக்கும் வர்ணச் சித்திரங்கள் உலகப் பிரசித்தி பெற்றவை. பண்டைத் தமிழரின் சித்திரத் திறமைக்கு இவை அழியாச் சின்னங்களாக விளங்குகின்றன. அப்பர் சுவாமிகளின் சீடனாவதற்கு முன்பு மகேந்திரவர்மன் சமணனாயிருந்தான். அந்தக் காலத்திலேதான் சித்தன்னவாசல் கோயில்கள் கட்டப்பட்டிருக்க வேண்டுமென்று சொல்வர். அங்குள்ள சிற்பங்களும் சித்திரங்களும் சமணக் கொள்கையை அநுசரித்தவை.

மகேந்திரவர்மனின் மகன் மகாமல்லன் என்ற நரசிம்மவர்மனே நிறைந்த விஷ்ணு பக்தன். உலகப் பிரசித்தி பெற்ற சிற்ப அமைதியுள்ள மகாபலிபுரம் என்ற ஏழு கோயில் கடற்கரை நகரத்தைச் சிருஷ்டித்த பெருமை இவனைச் சார்ந்தது. குகைக் கோயில்களின் உட்புறமேயன்றி வெளிப்புறத்திலும் பாறைகளை விமானங்கள் போன்று செதுக்கி அமைத்தான் இவன். நரசிம்மனின் மகன் சிவசூடாமணி என்ற ராஜசிம்ம பல்லவன் தன் பாட்டனைப்போல் சைவன். காஞ்சீபுரத்தின் கலைச் சரித்திரத்துக்கு ஓர் சின்னமாக விளங்கும் கைலாசநாதர் கோயில் இவனுடைய முயற்சியால்தான் சிருஷ்டிக்கப்பட்டது.

இந்தக் கைலாசநாதர் கோயில் ஒரு சிற்ப மகா காவியம்; கல்லால் இழைத்த கவிதை. ராஜசிம்ம பல்லவனின் பக்திக்கே கற்களெல்லாம் கனிந்து உருகி, இவ்வாறு உருவங்களாக அமைந்துவிட்டனபோலும்! மாடங்களில் தீட்டப்பெற்றிருக்கும் வர்ணச் சித்திரங்கள் தமிழ்நாட்டுச் சித்திரகாரர்களால் சௌந்தர்யத்தையே குழைத்துத் தீட்டப்பட்டிருக்கின்றன. இந்தச் சிற்ப உருவங்களும் சித்திரங்களும் வடநாட்டு அரசர்களையும் மயங்க வைத்தன. கைலாசநாதர் கோயில் கட்டப்பெற்ற சிறிது காலத்தில் வடநாட்டிலிருந்த இரண்டாவது விக்கிரமாதித்தன் என்ற அரசன், ராஜசிம்ம பல்லவனுக்குப் பின் காஞ்சியை ஆண்ட பல்லவனுடன் போர் தொடுத்து அவனை வெற்றி கொண்டு, காஞ்சீபுரத்திலிருந்து பல ராஜ பொக்கிஷங்களைச் சூறையாடிச் செல்லும்போது, கைலாசநாதர் ஆலயத்தைக் கண்டு மயங்கி, தன் வசமிருந்த சகல பொன்னையும் மணியையும் அந்தக் கோயிலிலேயே கொட்டிவிட்டான். பின்பு, அவன் காஞ்சியிலிருந்த பல தமிழ்ச் சிற்பிகளை அழைத்துத் தன் நாட்டுக்குக் கொண்டு சென்றான் என்று சொல்வர். இவனுடைய சகோதரி கைலாசநாதர் கோயிலைப் போன்ற ஒரு கோயில் அங்கே கட்டுவித்தாள் என்றும், எல்லோராச் சிற்பங்களுக்கும் இதே தமிழ் நாட்டுச் சிற்பிகள்தாம் காரணம் என்றும் ஊகிப்பர்.

## 5

கனவு கண்டுகொண்டிருந்த என்னைக் கிழவனார் வந்து முதுகில் தட்டி அமைதியைக் கலைத்தார்.



30. வேதகிரி, திருக்கழுக்குன்றம். (பக்கம் 138)

"இப்படியே இங்கு நின்றுகொண்டிருந்தால் பொழுதே போவது தெரியாது. இறைவன் வதியும் கைலாசத்தையே நமது பல்லவ மூதாதையர்கள் கொண்டுவந்து இங்கே ஸ்தாபித்திருக்கிறார்கள். இன்னோரிடத்தில் வைகுண்டம் இருக்கிறது. அதையும் போய்ப் பார்க்கவேண்டாமா?" என்றழைத்தார்.

பிரிய முடியாமல் அந்தக் கலாபவனத்தை விட்டுப் பிரிந்தேன்.

ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்குத் திசையிலிருக்கிறது பரமேசுவர விண்ணகரம் என்ற பெயர்பெற்ற வைகுண்டப் பெருமாள் கோயில். கைலாசநாதர் கோயிலைக் கட்டிய ராஜசிம்மனின் மகன் பரமேசுவரன் இதைக் கட்டினான். நான்கு அடுக்குகளைக் கொண்ட இதன் விமானம் கைலாசநாதர் கோயிலைப் போலவே அமைக்கப்பட்டிருக்கிறது. இதன் பிராகாரத்துச் சுவர்களில் சிற்பங்கள் மலிந்து காணப்படுகின்றன. இவற்றிலுள்ள சிலா சாசனங்களில் பல்லவர்கள் சரித்திரம் நந்திவர்மன் காலம் வரை தொடர்பாகக் காண்பிக்கப்பட்டிருக்கிறதாகச் சொல்லுகின்றனர். திருமங்கை மன்னன் என்ற வைஷ்ணவ ஆழ்வார் இந்தக் கோயிலைப்பற்றியும் பரமேசுவர பல்லவனைப் பற்றியும் சில அழகான பாடல்கள் இயற்றியுள்ளார்.

சைவமும் வைஷ்ணவமும் தழைத்தோங்கும் காஞ்சிமா நகரில் புராதன காலத்திலிருந்தே இச் சமரசம் வளர்ந்துவந்துள்ளது. கைலாசமும் வைகுண்டமும் பல்லவ மன்னரின் பக்திக்கு இரங்கிக் கீழே வந்து காஞ்சியில் அமர்ந்தனபோலும்!

* * * *

"புராதன காஞ்சியைப் பார்த்தீர்களே ; உங்கள் அப்பிராய மென்ன ?" என்று கேட்டார் எனது காஞ்சீபுர நண்பர், கிழவனார்.

மறுபடியும் அதே ஹோட்டலில் உட்கார்ந்து இட்டலி சாப்பிட்டுக் கொண்டிருந்தோம்.

" இந்தக் காஞ்சீபுரம் இட்டலியை நான் எப்படி விரும்புகிறேனோ, அதேவிதமாக உங்கள் பிரசித்தி பெற்ற கலைக் கோயில்களையும் விட்டுப் பிரிய எனக்கு மனம் இல்லை " என்றேன்.

பழைய கலைப் பொருள்களைப் பார்த்துக் கொண்டிருப்பதாலும், அவற்றின் கதைகளைக் கேட்டுக் கொண்டிருப்பதாலும், மனிதனின் அகம்பாவம் அடங்கி, சாந்தமும் புனித உணர்ச்சியும் ஏற்படுகின்றன. அழகும் பெருமையும் அமைதியும் தூய்மையும் மனித உள்ளத்துக்கு என்றுமே இனிமையும் நிறைவும் தரவல்லன.

காஞ்சீபுரம் கைலாசநாதர் கோயிலில் நான் கண்ட கலைப் பூங்கொத்துக்களையும் சித்திரப் பசுஞ் சோலையையும் என்றும் மறக்க முடியாது. மாணிக்க வாசகர் இங்கு வந்திருந்து தம் உள்ளம் திருப்தியடையு மட்டும் பார்த்துப் பார்த்து அனுபவித்திருப்பார். இங்கிருந்து அவர் திருக்கழுக்குன்றத்துக்குப் போனார்.

பிரிய மனமில்லாமல் நானும் காஞ்சீபுரத்தை விட்டுப் புறப்பட்டேன்.

---

# இருபதாம் அத்தியாயம்

*கணக்கி லாத்திருக் கோலம் நீவந்து*
*காட்டி னாய்கழுக் குன்றிலே.*

திருப்பெருந்துறையிலிருந்து புறப்பட்ட பின் மாணிக்கவாசகர் எல்லாத் தலங்களிலுமே தமது ஞானதேசிகரைத் தேடித் திரிந்தார். அந்தக் குருவும் இலகுவில் அகப்படுபவராயில்லை. 'ஒளிக்கும் சோர'னாக, அங்கே ஒரு பாதம் தெரியக்காட்டி, இங்கே சிறிது முறுவல் காட்டி, மற்றோரிடத்தில் காட்சி கொடுப்பது போல மாயக் கோலம் காட்டி அதையும் மறைத்து, இப்படியாக வாதவூரடியாரை அலைத்துக்கொண்டே வந்தார். 'வான் பழித்திம் மண்புகுந்து மனிதரை ஆட்கொண்ட' வள்ளலை ஒவ்வொரு ஸ்தலத்திலும் அழுதழுது தேடிவந்தார். ஆனால் அந்த மாயாவி தம் முழுக் கோலத்தையும் காட்டவில்லை!

'பிறிவறியா அன்பர் யாவரும் மறிவறியாச் செல்வம் பெற்றுப் போய்விட்டார்கள்; தாம் மாத்திரம் இன்னும் இப்புவியில் கிடந்து அல்லற்படவேண்டுமா?' "உன்னை வந்திப்பதோர் நெறியறியேன், நின்னையே யறியேன்; நின்னையே யறியும் அறிவறியேன்" என்று காண்பதற்கு மார்க்கம் தெரியாது அவதிப்பட்டார். காஞ்சீபுரத்தில் பல கலைச் சங்கங்களில் ஊடாடினார். பௌத்த முனிவர்களையும் சமண சித்தாந்திகளையும் பார்த்தார். பல்லவர் ஸ்தாபித்திருந்த சர்வ கலாசாலையையும் பார்த்தார். அங்கிருந்த பேராசிரியர்களும் தரிசனப் புலவர்களும் 'நின்னையே யறியும் அறிவை'ப் பெற எவ்வித மார்க்கமும் காட்டவில்லை.

இறுதியில், அவருக்கு ஒரே ஒரு வழிதான் இருந்தது. அதுவும் அவர் கடைசியாகப் பிரயோகிக்கும் ஆயுதமாகிய 'அழுதா லுன்னைப் பெறலாமே' என்ற அஸ்திரம்.

சிதம்பரத்தை நோக்கி வந்தவர், வேதம் வளர்ந்த வேதகிரியைக் கண்ணுற்றதும் அந்தத் திசையில் சென்ருர். மரகதப் பசுஞ்சோலைகள் சூழ மாண்புற உயர்ந்த மலையுச்சியில் வேதகிரி வேந்தன் தனியரசு புரியும் அந்த ஸ்தலத்தை அடைந்தார் மாணிக்க வாசகர்.

நாயன்மாரில் அப்பர், 'கற்பகத்தைக் கண்ணுரக் கண்டேன் நானே' என்று புகழ்மாலை சூட்டியிருக்கிருர். சம்பந்தரும் போற்றித் துதித்திருக்கிருர். சுந்தரர் பொன் வேண்டி விண்ணப்பித்தபோது, இறைவன் போய் மேற்குக் கோபுரத்தினுள் ஒளித்துக்கொண்டாராம். ஆனுல் நம்பியாரூரர் இலேசுப்பட்டவரல்ல. பழிகிடந்தார். உடனே வேதகிரீசுவரர் மனம் கனிந்து பொன் கொடுத்ததுமன்றி அருளும் பெய்தனுப்பினுர்.

இப்படியிருக்க, மாணிக்கவாசகர் வந்து சும்மா திரும்பிப் போவாரா? 'இன்பமாக வந்து துன்பம் துடைக்கும்' மறையோன் இந்த மலையில் இருக்கிருன் என்று தெரிந்ததும், அவர் 'அழுதா லுன்னைப் பெறலாமே' என்ற உபாயத்தை உணர்ந்து திருக்கழுக் குன்றக் கல்லும் உருகும் வண்ணம் கதறினுர்.

**எய்த்தேன் நாயேன் இனியிங் கிருக்க**
**கில்லேன் இவ்வாழ்க்கை**
**வைத்தாய் வாங்காய் வானேர்**
**அறியா மலர்ச்சே வடியானே**



31. திருக்கழுக்குன்றம். (பக்கம் 142)

*முத்தா உன்றன் முகவொளி*
*நோக்கி முறுவல் நகைகாண*
*அத்தா சால ஆசைப் பட்டேன்*
*கண்டாய் அம்மானே !*

வேண்டுவார் வேண்டுவன ஈயும் தன்மையோன் இறைவன். மாணிக்கவாசகருக்கு அவர் விரும்பிய கோலத்தைக் காட்டினார். கண்ணாரக் கண்டு அவரும் அகமகிழ்ந்தார்; ஆனந்த மெய்தினார்; 'காதலால் உனையோத நீ வந்து காட்டினாய்' என்று பரவசமடைந்தார்.

*பிணக்கி லாத பெருந்துறைப் பெருமான்*
*உன் நாமங்கள் பேசுவார்க்*
*கிணக்கி லாதநேர் இன்ப மேவரும்*
*துன்ப மேதுடைத் தெம்பிரான்*
*உணக்கி லாதநேர் வித்துமேல்விளை யாமல்*
*என்வினை ஒத்தபின்*
*கணக்கி லாத்திருக் கோலம் நீவந்து*
*காட்டி னாய்கழுக் குன்றிலே.*

## 2

'திரீன்றம் மாலீவிரம்

செங்கற்பட்டு ஜங்ஷனில் பஸ் கண்டக்டர்களின் வாயிலே திருக்கழுக்குன்றம் மகாபலிபுரம் என்ற வார்த்தைகள் தாம் இந்தப் பாடுபட்டன!

மாலை ஐந்து மணியிருக்கும். செங்கற்பட்டு ஜங்ஷனில் அன்று அசாத்தியக் கூட்டம். திருக்கழுக்குன்றக் கோயில் உத்ஸவ காலமாகையால் யாத்திரிகர்கள் ஏராளமாகச் சென்று கொண்டிருந்தனர். இங்கிருந்து திருக்கழுக்குன்றம் ஒன்பது மைல் தூரத்தில் தான் இருக்கிறது. பஸ் போக்குவரத்து செங்கற்பட்டி

லிருந்து திருக்கழுக்குன்றத்துக்கும், அப்பால் பத்து மைலிலிருக்கும் மகாபலிபுரத்துக்கும் உண்டு. அன்றிரவு திருக்கழுக்குன்றத்து உத்ஸவத்தையும்பார்த்துக்கொண்டு மறுநாட் காலையில் மலை யுச்சிக்குப் போய் வேதகிரீசுவரரைத் தரிசித்து, கழுகு தரிசனத்தையும் முடித்துக்கொண்டு திரும்பலாம் என்று புறப்பட்டேன்.

இயற்கை எழிலின் அற்புதத்தைப் பார்க்கவேண்டுமானால் திருக்கழுக்குன்றத்துக்குப் போக வேண்டும். அந்த எழில் மாத்திரமல்ல, தெய்விக உணர்ச்சியை ஊட்டும் சின்னமாக வானத்தை அலங்கரித்து நிற்கும் வேதகிரிக் கோபுரம் உள்ளத்திலே ஒரு பேரொளியைப் பிறப்பிக்கிறது. இயற்கையின் எழிலைப் புனைந்தே கலைப்பண்பை வெளிப்படுத்தத்தான் தென்னாட்டில் சிவஸ்தலங்கள் யாவும் ஏற்பட்டன என்று சொல்வது வெறும் கற்பனைச் சொற்களல்ல என்று நினைக்கிறேன்.

திருக்கழுக்குன்றத்தில் பக்தவத்ஸலர் ஆலயத்துக்கு ஒரு கல்லெறி தூரத்திலிருக்கும் பாறையொன்றின் மீது நின்று பார்த்தால் ஓர் அற்புத நகரத்தைத் தான் காணலாம். இடது புறத்தில் தலை நிமிர்ந்து நிற்கும் கோபுரங்களும், அவற்றிற்கிடையே பளிங்கு முற்றங்கள்போல் காணப்படும் திருக்குளங்களும், வலதுபுறத்தில் பச்சை மலையும், அதன் உச்சியில் மாணிக்க முடி போன்றிருக்கும் வேதகிரிக் கோயில் கோபுரமும், இவற்றிற்கெல்லாம் அப்பால் நீல வானமும், அதில் ஊர்ந்து செல்லும் முகிற் பூங்கொத்துக்களும் எவரையும் பரவசப்படுத்திவிடும். மாணிக்க வாசகருக்கு இங்கு இறைவன் தமது திருக்கோலம்

காட்டினர். இயற்கையையே தெய்வமெனக் கொண்டாடும் தரிசனப் புலவர்கள் உண்மையில் அந்தத் தெய்வத்தின் திருக்கோலத்தைத் திருக்கழுக்குன்றத்தில் காண்பார்கள். 'கற்பகத்தைக் கண்ணுரக் கண்டேன் நானே' என்று வாகீசர் சொன்னதும் இந்த நிதர்சனக்காட்சியைத்தான். மனத்தூய்மையும் சாந்தியும் பெறுவதற்குத் திருக்கழுக்குன்றக் காட்சி ஒன்றே போதும்.

அதிகாலையிலே நந்தி தீர்த்தத்தில் குளித்துவிட்டு நூற்றுக்கணக்கான யாத்திரிகர்களைப் பின்தொடர்ந்து நானும் மலையேறிச் சென்றேன். குன்று ஐந்நூறு அடிதான் உயரம். அரைமணி நேரத்தில் ஏறிவிடலாம். 3000 அடி உயரமுள்ள சிவனொளிபாத மலை யுச்சிக்கு மூன்று தடவை ஏறிய அநுபவமுள்ள எனக்கு இந்த ஏற்றம் பிரமாதமாயிருக்கவில்லை. ஆனால் அதே ஞாபகமும் அநுபவமும் காட்சியும் ஏற்பட்டன. சிவனொளி பாத மலையின் உச்சியில் நின்று பார்த்தால் காணும் காட்சியைக் கழுக்குன்றத்திலிருந்தும் காணலாம். இயற்கையின் பசும்போர்வை அப்படியே விரிக்கப் பட்டிருக்கும்.

3

திருக்கழுகுக் குன்றந்தான் திருக்கழுக்குன்றம் என்று ஏற்பட்டதா? மலைப்பறவைகளாகிய இரண்டு கழுகுகள் வேதகிரியில் ஒரு குறிப்பிட்ட பாறையில் வந்து கோயில் பூசாரியின் கையிலிருந்து பிரசாதம் வாங்கிப் புசிக்கின்றன.

சரியாகப் பகல் பதினொரு மணிக்கு இந்த விநோதமான கழுகுகளின் விருந்தைக் கண்டேன். என்ன ஆச்சரியம்! பட்சிப் பண்டாரம் கையில் பிரசாதம், ஒரு கிண்ணத்தில் தண்ணீர் முதலியவற்றுடன் வந்து பாறை ஒன்றில் உட்காருகின்றார். வானத்தை ஒரு தரம் எட்டிப் பார்த்துவிட்டுக் கையில் வைத்திருக்கும் மணியை ஒலிக்கிறார். சற்று நேரத்தில் எங்கிருந்தோ இரு வெள்ளைக் கழுகுகள் பறந்தோடி வருகின்றன. சிறிதும் கூச்சமில்லாமல் பண்டாரத்தின் கையிலிருந்தே பிரசாதத்தைப் புசிக்கின்றன. நான் போய்ப் பார்த்த வேளையில் இரண்டு கழுகுகள் வந்த போதிலும் ஒன்று மாத்திரந்தான் உட்கார்ந்து புசித்தது. மற்றது ஏதோ காரணத்தால் உட்கார லச்சைப்பட்டது.

திருக்கழுக்குன்றத்துக்குப் போனால், 'அங்கே கழுகுகளைப் பார்த்தீர்களா?' என்று தான் யாரும் கேட்பார்கள். இந்தக் கழுகுகள் வேதகிரி அதிசயங்களில் ஒன்று. காட்டுப் பறவைகள் மனிதனுடன் எப்போது உறவாடின? இன்று நேற்று மாத்திரமல்ல; பல நூற்றுக் கணக்கான ஆண்டுகளாகவே இவை தரிசனம் கொடுத்துப் பிரசாதம் புசித்துச் செல்லுகின்றன. ஆனால் அதைவிட ஆச்சரியம், இரண்டே இரண்டு பட்சிகள்தாம் தோன்றுகின்றன. அதற்கு அதிகமாக ஒரு போதும் வந்ததில்லை! ஏறக்குறைய முந்நூறு வருஷங்களுக்கு முன்பே இந்தக் குன்றையும் கழுகுகளையும் டச்சுக்கார மாலுமிகள் பார்த்துவிட்டு அதற்குச் சாட்சியாக அங்கே தங்கள் கைச்சாத்தைப் பொறித்துப் போயிருக்கிறார்கள்.

பலருடைய கையெழுத்துக்கள் இன்னும் இந்தக் குன்றில் காணப்படுகின்றன.

1681-ஆம் ஆண்டு ஜனவரி 3-ஆம் திகதி ஹவார்ட் என்ற ஒரு டச்சு ஆசிரியர் தாமும் மற்றும் பத்துப் பேரும் இந்தக் குன்றைப் போய்ப் பார்த்ததாகவும், அங்கே சரியாகப் பகல் பன்னிரண்டுமணிக்கு இருகழுகுகள் வந்து கோயிற் பிரசாதத்தை வாங்கிப் புசித்துச் சென்றதாகவும் எழுதியிருக்கிறார். சென்னையிலிருந்த ஜார்ஜ் டாசன் என்ற இங்கிலீஷ்காரர் 1769-ஆம் ஆண்டிலே தாம் இந்தக் காட்சியைக் கண்டிருப்பதாக எழுதியிருக்கிறார்.

இந்த அதிசயம் எப்பொழுது முதல் நடந்து வருகிறது? இதற்குக் காரணம் என்ன? இதே பட்சிகள் தாம் நூற்றுக் கணக்கான வருஷங்களாக இங்ஙனம் வந்து பண்டாரத்தின் கையிலிருந்து பிரசாதம் புசித்துச் செல்லுகின்றனவா? வேறு பட்சிகளானால், அவற்றிற்கு எப்படிப் பழக்கம் ஏற்பட்டது?

இக் கேள்விகளுக்கு விடையளிக்கத் தக்கவரை நாம் காணவில்லை. ஆனால் கர்ண பரம்பரையாக வழங்கி வரும் அபூர்வ கதையொன்று மாத்திரம் பலருக்குத் தெரியும்.

சம்பு ஆதி என்ற இரண்டு ரிஷி சகோதரர்கள் தமக்குள்ளே சிவம் பெரிதா, சக்தி பெரிதா என்று சண்டையிட்டார்கள். ஒருவர் சிவந்தான் பெரிதென்றார்; மற்றவர் சக்திதான் பெருமையுள்ளதென்று பிடிவாதம் பிடித்தார். இறுதியில் சிவனே குறுக்கிட்டு, 'சிவமும் சக்தியும் ஒன்றுதான்; ஒன்றில்லாமல் மற்றது தனித்து நிற்க முடியாது. ஆகையால் நீங்கள் வீணே சண்டை போடவேண்டாம்' என்று

விலக்க முயன்றார். ஆனால் சகோதரர்கள் கேட்க வில்லை. மீண்டும் சண்டையிட்டார்கள். அதனால் சிவபிரான் அவர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்கக் கருதிச் சபித்து, பூலோகத்திலே கழுகுகளாகப் பிறந்து கர்வ மடங்கும்படி உத்தரவிட்டார். அந்தச் சாபம் காரணமாகவே இவ்விரு பட்சிகளும் தினந்தோறும் வேதகிரியில் வந்து இறைவனைத் தொழுது பிரசாதம் புசித்துச் செல்லுகின்றன.

## 4

மிகப் பழைய காலத்தில் ஜயங்கொண்ட சோழ மண்டலத்தின் ஒரு பிரிவாகிய களத்தூர்க் கோட்டத்தில் உலகளந்த சோழபுரம் என்ற பெயர் பெற்றிருந்தது திருக்கழுக்குன்றம். மகாமல்லபுரம் துறைமுகமா யிருக்க, இந்தியாவின் பல பாகங்களிலும், மேலைத் தேசங்களிலும் கீழ்த்தேசங்களிலும் ஈழத்திலுமிருந்து பல வர்த்தகர்கள் வந்து ஏற்றுமதி இறக்குமதி வியாபாரம் செய்து திருக்கழுக்குன்றத்திலே ஒரு பிரபல வர்த்தக சங்கம் ஏற்படுத்தி யிருந்தார்கள். ஆரம்ப சோழர் காலத்தி லிருந்தே நானாதேசியம் என்ற தமிழ் வர்த்தகக் கழகம் வெளிநாட்டு வாணிபத்தில் ஈடுபட்டிருந்தது. தேசிவிடங்கப் பெருமான் என்று அவர்கள் தமக்கு ஓர் ஆலயமும் கட்டி வைத்திருந் தார்கள்.

மலையடிவாரத்திலுள்ள பக்தவத்ஸல சுவாமி கோயிலுள்ளே சிலாசாசனங்கள் பல காணப்படு கின்றன. இவற்றில் நரசிம்மவர்மன், ராஜகேசரிவர்மன் முதலிய பல்லவர்களைப் பற்றிய குறிப்புக்கள் இருக் கின்றன. இந்தச் சாசனங்களிலெல்லாம் மூலஸ்தானப்

பெருமானடிகள் என்று கழுக்குன்றத்துச் சுவாமி பெயர் காணப்படுகிறது. கி. பி. பதினோராம் நூற்றாண்டின் பின்னர், இந்த மூலஸ்தானப் பெயர் நின்றுவிட்டது. இப்போதுள்ள பக்தவத்ஸலர் கோயிலின் லிங்கம் பதின்மூன்றாம் நூற்றாண்டின் மத்தியில் மதுரையிலிருந்த ஜடாவர்மன் சுந்தர பாண்டியனது சேனாபதி ஒருவன் பிரதிஷ்டை செய்து வைத்தாகச் சரித்திரத்தில் காணப்படுகிறது.

வேதகிரியின் அடிவாரத்திலுள்ள ஒரு குளத்துக்கு, சங்க தீர்த்தம் என்று பெயர். பன்னிரண்டு வருஷத்துக்கு ஒரு தடவை இங்கே ஒரு சங்கு பிறக்கிறதாக நம்புகின்றனர்.

---

## இருபத்தோராம் அத்தியாயம்

சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அந்தமிலா ஆனந்தம் அணிகொள் தில்லை கண்டேனே.

மாணிக்கவாசகர் புறப்பட்டார்.

திருக்கழுக்குன்றத்திலே இறைவன் திருக்கோலம் கண்டபின்னர் அங்கு அவருக்கு இருப்புக்கொள்ளவில்லை. தாயைப் பிரிந்து குழந்தையும், பசுவை விட்டுக் கன்றும் எப்படித் தரித்திருக்க முடியாதோ அவ்வாறே திருவாதவூரடிகளின் உள்ளமும் குருநாதன் சக்தியால் கவரப்பட்டு, அங்கே நாடத் தொடங்கியது.

……வந்தொருப் படுமின்
போவோங் காலம் வந்ததுகாண்
பொய்விட் டுடையான் கழல்புகவே

என்று உள்ளத்தில் ஓர் ஒலி பிறந்தது. அவன் தன் குறிப்பே குறிக்கொண்டு, சிதாகாச வெளியில் நின்று சிவமய நடஞ் செயும் சித்தனை நாடி நடந்தார்.

நாளும் கிட்டிக் கிட்டி வர, மாணிக்கவாசகரின் ஆர்வமும் உணர்ச்சியும் வேகமாய்த் துடிக்கத் தொடங்கின. சிதம்பர யாத்திரை அவரது இறுதி யாத்திரை. வினை கெட்டுப் பிறப்பிறப்புத் துன்பம் துடைத்துப் பரமானந்தப் பெருவெளியில் கலக்கச் செய்யும் யாத்திரை. இந்தத் திவ்விய யாத்திரையில் செல்பவர் தம்முடன் கூட வரும் அடியார்களையும் பக்தர் கூட்டங்களையும் அறைகூவி அழைக்கின்றார்.

புகழ்மின் தொழுமின் பூப்புனைமின்
புயங்கன் தாளே புந்திவைத்திட்டு
இகழ்மின் எல்லா அல்லலையும்
இனியோர் இடையூ றடையாமே
திகழும் சீரார் சிவபுரத்துச்
சென்று சிவன்தாள் வணங்கிநாம்
நிகழும் அடியார் முன்சென்று
நெஞ்சம் உருகி நிற்போமே.

'திருமாமணிசேர் திருக்கதவம் திறந்தபோதே சிவபுரத்துச் சென்று சேர்ந்துவிட மாணிக்கவாசகர் உள்ளம் விழைகின்றது. அவரது இருதயக் கோயிலின் கதவே தெய்வ அருளை ஏற்றுக்கொள்ளத் திறந்து விட்டது. எழுகின்ற ஞாயிற்றின் இளவொளி படர்ந்து அடிவானத்தை அலங்கரித்து அக்கதிரவன் வரவைக் காட்டுமாப்போல, சிவத்தின் சோதியில் கலக்கப் போகும் வாதவூரரின் உள்ளம் அச்சோதியின் கிரணங் களில் தோய ஆரம்பித்தது.

* * * *



34. சிதம்பரம். கனகசபை. (பக்கம் 150)

மறுபடியும் செங்கற்பட்டு ஜங்ஷனில் வந்து ரெயி லேறிய எனக்கு மாணிக்கவாசகரின் இந்த இறுதி யாத்திரை ஏதோ ஓர் அபூர்வ உணர்ச்சியையும் காட்சி யையும் தரச் செய்தது. ரெயிலில் சென்றவர்க ளெல் லாம் தில்லையம்பலத்தை நாடிச் செல்லும் அடியார் கூட்டம் போலவும், மாணிக்கவாசகரும் எங்கள் கூடவே வந்துகொண்டிருப்பது போலவும் சொப்பனம் கண்டேன். இது என்ன மயக்கம்? ஊராரெல்லாரும் பித்தனென்றும் பேயனென்றும் நகைத்திடவும் மற் றொரு பித்தனைத் தேடித்திரிந்த வாதவூர் முனிவனுடன் இத்தகைய கூட்டம் பின் சென்றிருக்குமா? ஆம், ஆண்டியைப் பின்தொடர்ந்த கூட்டம் அந்த ஆண்டி யின் கடவுட்பித்தைப்பற்றி அறியுமா?

சிதம்பரத்தைக் கிட்டக் கிட்ட உள்ளமும் குதிக் கத் தொடங்குகிறது. புதிய உணர்ச்சியொன்று நமது உடல் முழுவதும் பாய்கிறது. அதோ விடியற் பொழு தின் மெல்லிய கிரணங்களில் தோய்ந்து பசும்பொன் பூத்ததுபோல், பனங்கூடல் தோகையினூடே குவிந்து தெரிகின்றன தில்லையம்பலக் கோபுரங்கள். துயின்று கொண்டிருக்கும் அமைதியில் படிந்து தொலைவின் அழகில் தலை தூக்கி நிற்கின்றன அவை. இந்தக் காட்சியைக் கண்டுதான் திருநாளைப்போவார் என்ற நந்தனார் கூற்றாகக் கோபாலகிருஷ்ண பாரதியாரும்,

> உயரும் சிகரக் கும்பந் தெரியுதாம்
> அதைப் பார்த்த பேர்க்கு
> உள்ளம் குளிரக் கருணை புரியுதாம்

என்று பாடினாரோ! ஆம், அந்தக் கோபுர அழகே உள்ளம் குளிர வைக்கும் தெய்வீகக் காட்சிதான்.

## 2

தென்னிந்தியாவிலே நூற்றுக் கணக்கான கோயில்களிருந்தும் சிதம்பரத்தையே நமது முன்னோர்கள் கோயில் என்ற சிறப்புப் பெயரால் வழங்கினார்கள். ஆதி காலந்தொட்டே தமிழரின் பெருமைக்கும் தெய்விக அருளுக்கும் இருப்பிடமாகவும், புலவர்களும் பக்தர்களும் போற்றிச் சென்று புகலிடம் பெற்ற ஸ்தலமாகவும் விளங்குகின்றது. பூலோக கைலாசமாகக் கருதப்படும் இத்தில்லைப் பதிக்குத் தலைவராய் வந்த அரசர் யாவரும், பல்லவரும் சோழரும் பாண்டியரும் நாயக்கரும், பொன் பொன்னாகக் கொட்டி ஆதரித்த ஸ்தலம். அமைப்பிலும் அருளிலும் தனக்கு நிகரில்லாத் தனிப் பெருமையுடைமையால் சிதம்பரம் தென்னிந்தியாவின் கோயில் என்று வழங்கப்பட்டதில் அதிசயம் இல்லை.

தூய்மையாகிய சாந்தைக் குழைத்து உணர்ச்சிச் சிற்ப உருவெடுத்துக் கற்பனை வர்ணத்தைப் பூசி இருதயத்தில் கட்டும் கோயிலில் தெய்வம் வந்து களிநடம் புரியும். இதை நமது புராதனத் தமிழர்கள் உணர்ந்தார்கள். இந்தச் சூக்குமக் கோயிலைத் தூலமாக்கினார்கள். பாரதத்தையே விராட் புருஷனாக்கி அவனது இருதயம் சிதம்பரமெனப் பாவித்து அதில் நடராஜனாகிய சிவனைக் குடியிருத்தினார்கள். இருதயமாகிய மன்றத்தில் இறைவன் ஆன்ம ஈடேற்றத்துக்கு அருள் நடனமாடும் பாவனையில் ஸ்தூல சின்னமாயிருப்பது திருச்சிற்றம்பலம்.

வேதமும் ஆகமங்களும் சைவசித்தாந்த தத்துவங்களும் இந்தத் திருச்சிற்றம்பலத்திலே கண்ணால் பார்க்

கக்கூடிய பொருள்களாக இருக்கின்றன. பிரம்ம விஷ்ணு ருத்திர மகேசுவர சதாசிவர்களுக்கென ஐந்து பீடங்கள் இருக்கின்றன. ஸ்ரீபஞ்சாட்சரமாகிய எழுத்துக்களைந்தும் ஐந்து படிகளாக இருக்கின்றன. அதற்குப் பக்கத்தில் உள்ள கதவுக்குப் பெயர் ஆவரணம். சைவசித்தாந்தத்தில் அவித்தை என்று சொல்வார்கள். தொண்ணூற்றாறு தத்துவங்களும் பலகணிகளாய் அமைந்திருக்கின்றன. நடுவிலிருக்கும் நான்கு பொற்கம்பங்களும் நான்கு வேதங்கள். அதைச் சுற்றியுள்ள மரக்கம்பங்கள் இருபத்தெட்டும் ஆகமங்களாகப் பாவிக்கப்படுகின்றன. இவ்வளவும் அடங்கிய சபை பொன்னால் வேயப்பட்ட **கனகசபை** எனப்படும். இங்கேதான் இறைவர் நடராஜ மூர்த்தியாக எழுந்தருளியிருந்து காட்சியருளுகின்றார். சிதம்பரத்து நடராஜ விக்கிரகம் தமிழ்நாட்டு விக்கிரகங்களுள் ஒரு தனிச் சிறப்புடையதாகக் கருதப்படுகின்றது.

பஞ்ச லிங்கங்களுள் ஆகாசலிங்கம் சிதம்பரத்தில் இருக்கிறது. கனகசபையிலே நடராஜ விக்கிரகத்துக்குப் பின்னால் ஒரு திரை போடப்பட்டிருக்கிறது. அதை நீக்கினால் ஒரு வெளி தோன்றும். அவ்வெளியே - ஆகாசமே - சூக்குமமான வடிவுகொண்ட லிங்கம் என்று சொல்வார்கள். சிதம்பர ரகசியம் என்பதும் இதுவே.

இருதய வெளியில் நின்று நடம்புரியும் இந்த அற்புத ரகசியக் கள்வனைத் தேடி வந்தார் மாணிக்கவாசகர். தேவாதி தேவர்களுக்கும் அகப்படாத அந்தப் பரம்பொருளை மாணிக்கவாசகர் தமது திருவாசகத்தால் மயக்கிவிட்டார்.

## 3

சிதம்பரம் என்றால் யார் மனக் கண்ணிலும் உடனே தோன்றுவது நடராஜ உருவந்தான். பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நடன உருவங்கள் சிதம்பரத்தில் நிறைந்திருக்கின்றன. அருங்கலைகளுள் ஒன்றாகிய நாட்டியக் கலைக்கு நமது தமிழ் மக்கள் சிறப்புக் கொடுக்க வேண்டியே சிதம்பரத்தைச் சிருஷ்டித்து வைத்தார்களோ என்று எண்ண வேண்டியிருக்கிறது. முன்னே பார்த்தால் ஒரு நாட்டிய உருவம்; பின்னே பார்த்தால் ஒரு நர்த்தனச் சிலை; பக்கங்களில் பார்த்தால் அங்கும் ஒவ்வொரு தூணிலும் மருவிய நாட்டிய உருவங்கள். மூல ஸ்தானம் முதல் வெளிக் கோபுரம் ஈறாக எல்லாம் நடனம் புரியும் காட்சிகளே. நமது பண்டைத் தமிழ் மக்களின் உள்ளத்தில் ஊறிக் கிடந்த அழகுணர்ச்சி யெல்லாம் சிற்பமாகத் திரண்டு வெளியே பரிணமித்துக் காணப்படுகிறது.

சிவபிரானுக்கு மூன்று வகையான நடனங்கள் கூறப்பட்டுள்ளன. திருக்கைலாய மலையில் தேவர்கள் நடுவே ஆடுவது **பிரதோஷ நடனம்.** ‘நவமணிகளால் இழைக்கப்பட்ட பொன் முடிமீது மூன்று லோகத் தலைவியாகிய லோகமாதாவை இருத்தி, தேவர்கள் சூழவர, சூலபாணி கயிலையில் நடம் புரிவார். சரஸ்வதி வீணை வாசிக்க, இந்திரன் குழலூத, பிரம்மா தாளம் போட, மகாவிஷ்ணு மத்தளம் கொட்ட, லக்ஷ்மி பாட, சிவபிரான் நர்த்தனம் புரிவார். இச் சந்தியாவேளையில் யக்ஷ, கந்தர்வ, சித்த, சாத்திய, வித்தியாதரர்கள்



35. நடராஜர் (அளிப்பு - கொழும்பு மியூசியம்) பக். 152



36. நடனசிற்பம், சிதம்பரம். (பக்கம் 154)

கூடி நின்று அவ்வின்னிசையுடன் கலந்த நர்த்தனங் கண்டு களிப்பர்.'

சிவனது இரண்டாவது நடனம் தாண்டவம். வைரவர் அல்லது வீரபத்திர மூர்த்தத்தில் இதைக் காணலாம். மூன்றாவது நடனமே புகழ்பெற்ற நடராஜ மூர்த்தத்தில் காணப்படும் நாதாந்த நடனமாகும். இது அண்டத்தின் மத்தியஸ்தானமாகக் கருதப்படும் சிதம்பரத்தின் பொன்னம்பலத்தில் நிகழும்.

தாருகா வனத்தில் வசித்த அகம்பாவம் பிடித்த ரிஷிகள் சிலர் தமக்கு இறைவனும் நிகரில்லை என்று வீறுகொண்டு இறுமாந்திருந்தபோது அவர்கள் செருக்கை அடக்கக் கருதிச் சிவபிரான் அங்கே சென்றார். ரிஷிகள் தமது யாக வலிமையை உபயோகித்து யாகத் தீயிலிருந்து ஒரு புலியை ஏவிவிட்டனர். பாய்ந்த புலியின் தோலையுரித்துச் சிவபிரான் தம் மேனியில் போர்த்துக்கொண்டார். பின் ஒரு பாம்பு சீறியது. அதைப் பிடித்துக் கழுத்தில் மாலையாக அணிந்தார். பின்னர் அவர் அந்த ரிஷிகளின் ஆணவமகல நின்று நாதாந்த நடம் புரிந்தார். இதைக் கண்ணுற்ற பதஞ்சலி என்ற முனிவர் அவ்வற்புத நடனத்தை மீண்டும் ஒரு முறை தாம் காண ஆடுமாறு கேட்டுக் கொண்டதால், இறைவர் பூலோகத்திலே தில்லை வனத்தில் காண்பிப்பதாகக் கூறியருளினர். அப்பால் பதஞ்சலி முனிவர் தில்லை வனமாகிய சிதம்பரத்திற்கு வந்து சிவபிரானது அற்புத நிருத்தத்தைக் கண்டார் என்பது புராண வரலாறு.

கதை எப்படி இருந்தபோதிலும் சைவாகமங்களிற் காணும் தத்துவக் கருத்தை நடராஜ வடிவம் புலப்படுத்துகிற தென்று சைவ சித்தாந்திகள் கூறுவார்கள். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்து தொழில்களையும் முறையே பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், மகேசுரன், சதாசிவன் என்னும் ஐவகை மூர்த்திகளின் வழியாகச் சிவபிரான் நிறைவேற்றுவதாகக் கருதுவர். டமருகம் தாங்கிய கையினுல் உலக சிருஷ்டியையும், அபய கரத்தினுல் காத்தலையும், அக்கினி ஏந்திய கையினுல் சங்காரத்தையும், ஊன்றிய பாதத்தால் ஆன்மாக்களை மறைத்தலையும், தூக்கிய பாதத்தால் ஆன்ம அநுக்கிரகத்தையும் இவ்வுருவம் காட்டுகின்றது.

தோற்றம் துடியதனில் தோயும் திதியமைப்பில்
சாற்றியிடு மங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

சிதம்பரத்தின் கிழக்குக் கோபுர வாசலில் நுழைபவர்கள் அதன் இரு பக்கங்களிலும் அழகிய சிறு மாடங்களில் செதுக்கப்பட்டிருக்கும் சிற்பங்களைக் கவனிக்காதிருக்க முடியாது. ஒவ்வொரு மாடத்திலும் மூன்று உருவங்கள் இருக்கின்றன. ஒரு நாட்டியப் பதுமை, ஒரு நட்டுவன், ஒரு தண்ணுமை வாசிக்கும் பக்க வாத்தியக்காரன். இவற்றின் மேலே சில பழைய சுலோகங்களும் காணப்படுகின்றன. இது பரதநாட்டிய சாஸ்திரத்தின் நான்காம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கும் நூற்றெட்டு வகைக் கரணங்களைத் தனித்தனி காண்பிக்கும் லக்ஷணங்களென்றும் அவற்

றின் சுலோகங்களென்றும் ஆராய்ந்து கண்டிருக்கிறார்கள்.

தென்னிந்தியாவிலுள்ள கோயில்களிலெல்லாம் நாட்டியக் கலையை விளக்கும் இத்தகைய சிற்பங்கள் காணப்பட்டாலும், பரத நூலிலுள்ள நூற்றெட்டு வகைக் கரண விகற்பங்களை விளக்கும் உருவங்களையும் அவற்றிற்குரிய வாசகங்களையும் நாம் சிதம்பரத்தின் கீழ் மேற் கோபுரங்களிலேதான் காணலாம்.

## 4

மாணிக்கவாசகர் தில்லையை அடைந்து மன்றுளாடும் பெருமானை வணங்கியதும், அவர் கடவுட் பித்து மேலும் தலைக்கேறியது. ஆடினார் ; பாடினார் ; அழுதார் ; ஸ்தம்பித்து நின்றார். இந்த விநோதங்களைப் பார்த்தவர்கள், 'இதேதடா ஒரு பைத்தியம் வந்து இப்படிக் கூத்தாடுகிறது !' என்று சொல்லி அலக்ஷியமாக நகையாடினர். அதனால் மாணிக்கவாசகர் மனம் நொந்துகொள்ளவில்லை. சிதாகாசத்தினுள் ஆடும் பெருமான் ஒவ்வொருவர் இருதயத்திலுந்தானே நடமாடுகின்றார் ? அப்படியானால் இக் காயத்தைக் கொண்டு எங்கே சென்றாலும் அப்பெருமானும் கூடவே இருப்பார் என்ற துணிவோடு, தில்லை வனத்துக்குப் பக்கத்திலுள்ள வில்வ வனமொன்றில் ஒரு குடிசை அமைத்து அதிலிருந்து திருவாசகப் பதிகங்கள் பாடத் தொடங்கினார்.

இந்த ஓய்வுக் காலத்திலேதான் மாணிக்கவாசகரது பெரும்பான்மையான பாடல்கள் பாடப்பட்டன என்று கருதுவர். திருக்கோவையார் என்ற அருமையான அகப்பொருள் நூலும் இதே

காலத்தில்தான் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும். அகப்பொருளிலக்கணத்துக்குத் தக்கதோர் இலக்கியமில்லையென்று சிவபெருமானே கனவில் தோன்றி மாணிக்கவாசகரை இயற்றுமாறு சொல்லி, தாம் ஒரு எழுத்தாளன் வடிவுகொண்டு தம் கைப்பட எழுதித் தில்லைப்பதியின் மூலஸ்தான வாசற்படியில் வைத்ததாகக் கதை.

மாணிக்கவாசகரது வாழ்க்கையின் இறுதிக் காலம் முழுவதும் உபதேச காலமாகவே கழிந்தது. பஞ்சாக்ஷரத்தின் பெருமையையும் சைவாகமத்தில் கண்ட உண்மைகளையும் திருச்சிற்றம்பலத்தின் பெருமையையும் அவர் எங்கும் பிரசாரம் செய்யத் தொடங்கினர். தெற்கே பாண்டிநாட்டிலும் அதற்கப்பால் ஈழத்திலும் பௌத்தம் மேலோங்கி நின்றது. மாணிக்கவாசகரின் போதனைகளால் பௌத்தர்களே மருண்டு போய்விட்டனர். ஈழத்திலிருந்த சிங்கள அரசர்கள் அக்காலத்தில் பாண்டிய சோழ மன்னருடன் தொடர்பு வைத்திருந்தனர். ராஜ குடும்பத்தவர்களும் மத போதகர்களும் இருநாடுகளுக்கும் அடிக்கடி போய் வருபவர்களாயிருந்தனர். அப்போது மாணிக்கவாசகர் உபதேசங்களில் பற்றுதல் கொண்ட ஒரு பிராம்மணன் ஈழநாட்டிலே சென்று, “திருச்சிற்றம்பலம், திருச்சிற்றம்பலம்” என்று சொல்லிக் கொண்டு திரிந்தான்; சிதம்பரத்தின் பெருமையைப் புகழ்ந்தான்; சைவத்தின் மேன்மையை மெச்சினன். இது இலங்கை அரசன் காதில் எட்டியது. அவனுடைய பிரதம குருவுக்கும் தெரிந்தது. உடனே குரு தாம் நேரில் புறப்பட்டுப்போய்ச் சிதம்பரத்து முனிவனுடன் வாதாடிச் சைவத்தை வென்று பௌத்தத்தின்



37. திருவிளையாடல் சிற்பங்கள். சிதம்பரம். (பக்கம் 156)

மேன்மையை நிலைநிறுத்தி வருவதாக அரசனிடம் சொன்னார். அரசனும் சம்மதித்துத் தானும் தன்னுடைய ஊமைப் பெண்ணை அழைத்துக்கொண்டு எல்லோரும் சிதம்பரத்துக்குப் பிரயாணமாயினர்.

ஈழமன்னன் வருகையைக் கேள்வியுற்ற சோழ மன்னன் தகுந்த மரியாதைகளுடன் உபசரித்து வரவேற்றான். ஆனால் பௌத்த தேவர், கோயிலின் மண்டபத்தினுள்ளே பிரவேசிப்பதைத் தில்லைவாழ்ந் தணர்கள் அநுமதிக்கவில்லை. பின்னர், அரசன் சம்மதத்தின் பேரில் மண்டபத்தில் மாத்திரம் நுழைய விட்டனர்.

சமய வாதம் ஆரம்பித்தது. தனக்கு நிகரில்லையென்ற இறுமாந்த பார்வையுடன் பௌத்த முனிவன் ஒரு பக்கம் வீற்றிருக்க, எதிர்ப்பக்கத்திலே தில்லை வாழ்ந்தணர்கள் சொற்போருக்குத் தயாராயிருந் தனர். போரும் ஆரம்பித்தது. வாதப் பிரதிவாதங் கள் மும்முரமாயிருந்தன. இருபக்கத்துச் சமய வீரர் களும் தமக்குத் தெரிந்த தருக்க நூலறிவையெல்லாம் வெளிப்படுத்தினர். ஆனால் பௌத்தனின் வாதங் களுக்கு எதிர்வாதம் பேசுவது அந்தணர்களுக்கு இலகு வாகக் காணப்படவில்லை. தளர்ந்து போனார்கள். மாலைப் பொழுதாகிவிட்டதால் மறுநாட்காலையில் தொடர்ந்து பேச ஒத்திவைத்தார்கள்.

அன்றிரவு முழுவதும் தில்லைவாழ்ந்தணர்கள் பெருங் கவலை கொண்டிருந்தார்கள். சைவ தூஷணை செய்து புத்தனை பெரியவன் எனச் சாதிக்கும் பௌத்த குருவை நாவடக்கச் செய்ய வகையறியாது தில்லை மூவாயிரவர் திகைத்தனர். பௌராணிகர் களும் வியாகரண பண்டிதர்களும் தர்க்க சாஸ்திர

நிபுணர்களும் பௌத்த சந்நியாசியின் வாதுக்கு எதிர் வாது பேச முடியாமல் இரவு முழுவதும் குழம்பிப் போயிருந்தார்கள். அப்போது நடராஜ மூர்த்தியே அவர்கள் கனவில் தோன்றி, "அன்பர்களே, அஞ்சாதிருங்கள். நமது சிதம்பரத்து எல்லையிலே மாணிக்க வாசகன் எனப் பெயருடைய பக்தன் இருக்கிறான். அவனிடம் சென்று 'மாணிக்கவாசக' என்று பெயர் சொல்லி அழைத்து, பௌத்தரை வாதில் வெல்ல வேண்டுமென்று கேட்பீரேல், அவன் எவ்வித ஆட்சேபமுமின்றி வந்து உங்கள் குறையைத் தீர்த்து வைப்பான்" என்று சொல்லி மறைந்தார்.

விடியற்காலையில் சிதம்பரத்து வில்வ வனமெங்கும் தில்லை மூவாயிரவர் யாவரும் கூடிவிட்டார்கள். முதல்நாள் இரவு ஒவ்வொருவர் கனவிலும் நடேசர் தோன்றி உபாயம் கூறிய சம்பவமே எல்லாரது பேச்சுமாயிருந்தது. முன்பு வெறும் பைத்தியம் என்று சொல்லி ஒதுக்கிவைத்த திருவாதவூரரை இப்போது சாஷ்டாங்கமாக வீழ்ந்து நமஸ்கரித்து, "ஸ்வாமி, எமது குறையைப் போக்கி அருளவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். மாணிக்கவாசகரும் இணங்கி வந்து சிதம்பரத்தின் ஆயிரக்கால் மண்டபத்தில் விசேஷமாயலங்கரிக்கப்பட்டிருந்த ஓர் ஆசனத்தில் வீற்றிருந்து, சைவத்தின் பெருமையை நிலைநாட்டப் பௌத்தனுடன் வாதிக்கத் தொடங்கினார். சைவ சித்தாந்த சாகரமாகிய வாதவூரரின் மாணிக்க வார்த்தைகளுக்கு எதிராகப் பௌத்தன் வாதிட முடியாது தவித்தான் பக்கத்திலிருந்த ஈழ மன்னன் அச்சமும் வியப்புமடைந்து உடல் விதிர்விதிர்த்தான். மாணிக்கவாசகர் இலங்கை வேந்தன் பக்கத்திலிருந்த அவன் ஊமைப்

பெண்ணை விழித்து, "குழந்தாய், உடற்குறையினால் நீ இழந்த வாக்கைத் திருப்பிப் பெறக்கடவாய். அஞ் ஞானத்தால் ஊமையரான இவர்களுக்கு நீ இனி ஞானோபதேசம் செய்யக் கடவாய்" என்று கூறினார். யாவரும் திகைக்கும் வண்ணம், சற்று முன்புதான் ஊமையாயிருந்த அந்தப் பெண், சரஸ்வதி கடாட்சம் பெற்று மணிமணியான வார்த்தைகளைப் புகன்றது மாத்திரமல்ல; சைவசித்தாந்த சாஸ்திரத்திலேயே சந்தேகங்களுக்குப் பதில் சொல்லி எல்லோரையும் அதிசயிக்க வைத்தாள். இந்தச் சம்பவத்தையே மாணிக்கவாசகர் பின்பு திருச்சாழல் என்ற திருவாசகப் பதிகமாகப் பாடினார். இந்தப் பதிகம் சிவனது திருக்கோலத்தையும் லீலைகளையும் பழித்து ஒரு பெண் கூற, மற்றொருத்தி அதற்குக் காரணங் காட்டி விடை அளிக்கிறதாகச் செய்யப்பட்டிருக்கிறது.

*தென்பா லுகந்தாடும் தில்லைச்சிற் றம்பலவன்*
*பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ*
*பெண்பா லுகந்திலனேற் பேதாய் இருநிலத்தோர்*
*விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ !*

## 5

மார்கழி மாதத்துத் திருவாதிரை நாள்.

திருநாளைப்போவாருக்கும் திருநீலகண்டருக்கும் அருள் கொடுத்த தெய்வத்தைக் கண்ணாரக் கண்டு களிக்கவேண்டுமானால் மார்கழித் திருவாதிரை நாளில் தான் சிதம்பரத்தைப் பார்க்கவேண்டும்.

அன்று வைகறைப் பொழுதிலேயே பிரம்மாண்ட மான ஜன சமுத்திரம் தில்லைப்பதியில் நிறைந்திருக் கிறது. பஜனைக் கோஷ்டிகளின் தேவார திருவாசக

படனமும் வாத்தியங்களின் பேரொலியும் ஜனக் கூட்டத்தின் இரைச்சலும் வானத்தைப்பிளக்கின்றன. தில்லைவாழந்தணரின் வேத கோஷம் தெய்வலோகச் சூழலைக் கொடுக்கிறது. இதன் மத்தியில் கனகசபை என்ற பொன்னம்பலத்தில் அபிஷேக வைபவங்கள் முடித்துக்கொண்டு ஆயிரக்கால் மண்டபத்தில் காட்சி கொடுக்கும் தெய்வத்தின் அருள் வீசும் வதனத்தைப் பார்க்கும்போது நாம் மெய்ம்மறந்துவிடுகிறோம். இவ் வற்புதக் காட்சியைக் கண்டுதான் வாக்கின் மன்ன ராகிய அப்பர் சுவாமிகள் பின்வரும் பாடலைப் பாடி வைத்தார்.

> **குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயிற்**
> **குமிண்சிரிப்பும்**
> **பனித்த சடையும் பவளம்போல் மேனியிற்**
> **பால்வெண் ணீறும்**
> **இனித்த முடைய எடுத்தபொற் பாதமும்**
> **காணப்பெற்றால்**
> **மனித்தப் பிறவியும் வேண்டுவ**
> **தேயிந்த மாநிலத்தே !**

பயனற்ற மனிதப் பிறவி என்ற துறவை யொழித்து, அதிலும் பயனுடைத் தென்ற நம்பிக்கை ஏற்படு கிறது நமக்கு.

ஆருத்திரா தரிசனம் காணக்கிடைப்பது வாழ்வில் ஒரு புண்ணியப் பேறென்றே கொள்ளவேண்டும். நட ராஜத் திருவுருவத்தின் கருணைபொழி திருமுகத்தைத் தில்லையம்பலத்தில் வைத்தே காணும்பேறு ஆயுளில் ஓர் அபூர்வப் பேறு. சிதாகாச வெளியில் இறைவன் நர்த்தனம் புரிவான் என்ற சைவ சித்தாந்த தத்துவத் தை உணரவேண்டுமாயின் ஆருத்திரா தரிசனத்தைப்



38. ஆருத்ராதரிசனம், சிதம்பரம். (பக்கம் 158)

போய்ப் பார்க்கவேண்டும். ஆயிரக்கால் மண்டபத்திலிருந்து கூத்துகந்த மூர்த்தியை வீதிவலங் கொண்டு செல்லும் தில்லைவாழந்தணர்கள் ஊசல் நடை போட்டுக்கொண்டு செல்வது ஆனந்தக் கூத்தின் எழிலை மிக அற்புதமாகக் காண்பிக்கிறது.

தூலக் காட்சியில் பாவனை மூலம் திருவிழாவில் பார்த்த நமக்கு இந்நிகழ்ச்சி இத்தகைய அற்புத அனுபவத்தைத் தருமாயின், சூக்கும அழகில் மெய்யனுபவம் பெற்ற பழுத்த மனத்தடியராகிய மாணிக்க வாசகப் பெருமானுக்கு ஆனந்த நடனக் காட்சி எத்தகைய இன்பத்தைக் கொடுத்திருக்க வேண்டும்!

> "இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய்
> அந்தரமே திரிந்துபோய் அருநரகில் வீழ்வேற்குச்
> சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி எனையாண்ட
> அந்தமிலா ஆனந்தம் அணிகொள்தில்லை கண்டேனே."

தில்லையம்பலத்தான் திருநடனக் காட்சி மணிவாசகரின் சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கிவிட்டது. அந்தமிலா ஆனந்தத்துக்கு ஆட்பட்ட அவ்வுத்தமர் வீடுபேறுகிய புதுவாழ்வின் அனுபவத்தை அனுபவித்தனர். மண்டிக் கிடந்த மாயையிருள் அகல, ஞானச் சுடரொளி பரவியது.

> "குறியொன்று மில்லாத கூத்தன்தன் கூத்தை யெனக்கு
> அறியும் வண்ணம் அருளியவாரூர் பெறுவாரச்சோவே"

பெருந்துறையில் குருந்தமர நிழலில் உபதேசம் செய்த பின்னர், "சிதம்பரத்தில் வந்து என்னைக் காண்" என்று கட்டளையிட்டது இன்று நிறைவேறும் சமயம் வந்துவிட்டது. கோலந்தேடிக் குறிதேடிப் பாத தரிசனம் நாடி உத்தரகோசமங்கை முதலிய ஸ்தலங்

களையெல்லாம் தரிசித்து, ஈற்றில் சிதம்பரத்துக்கு வந்த திருவாதவூர் முனிவர் தம் அப்பனைக் கண்டார். அவன் அழைப்புக் குரலைக் கேட்டார். சுடரொடு சோதி கலக்க வேண்டிய சமயம். 'உரியே னல்லேன் உனக் கடியேன் உன்னைப் பிரிந்திங் குயிர் வாழேன்' என்று கூறி, மாயையை விட்டு நீங்கிய பக்குவான்மாவாகிய மாணிக்கவாசகரின் தெய்விக ஜோதி போய்த் தில்லைமூலத்துச் சுடரொடு கலந்தது.

* * * *

மணிவாசக! உன் திருவாசகத்தின் தேன் பருகி அதன் சுவையிலீடுபட்டு உன்னுடன் யாத்திரையில் தொடர்ந்து வந்தேன். உனது அடிச் சுவட்டில் நடந்தேன். காடும் மலையும் ஆறும் குளமும் கடந்து நீ சென்ற வழியெல்லாம் நானும் திரிந்தேன். வாதவூர் முனிவ! உனது யாத்திரையும் முடிவுற்றது. உனது லட்சியத்தை நீ யடைந்துவிட்டாய். கடைப்பட்ட சிற்றுணர்வுச் சிற்றறிவுடைய என் போன்றார்க்கு நீ புகுந்த சாயுச்சிய வீட்டில் இடமெங்கே? என்னுடைய யாத்திரைக்கு எல்லை குறிக்கப்பட்டு விட்டது. ஆகையால் உன்னைவிட்டுப் பிரியவேண்டிய சமயமாகிவிட்டது. மாணிக்கவாசக! உன் அடிச்சுவட்டில் சென்று அவ்வற்புதமான அனுபவத்தில் யான் பெற்ற இன்பம் இவ்வையகமும் பெறவேண்டு மென்பதே எனது தாழ்மையான பிரார்த்தனை.

" இன்பம் பெருக்கி இருளகற்றி எஞ்ஞான்றும்
துன்பம் தொடர்வறுத்துச்சோதியாய்—அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து."

---

Printed at the Sadhu Press, Royapettah, Madras,
Paper Issue Card No. M. S. 115
for The Alliance Company, Mylapore, Madras
Paper Issue Card No. 109—C. 1100—27-9-47